அடேல் எம். பீல்ட்

தமிழில்: வானதி

# குறி தவறிய அம்பு

நாற்பது சீனத்துக் கதைகள்





அடேல் மரியன் ஃபீல்ட் (மார்ச் 30, 1839 - பிப்ரவரி 23, 1916) ஒரு சமூக ஆர்வலர், பாப்டிஸ்ட் மிஷனரி, விஞ்ஞானி மற்றும் எழுத்தாளர்.

அவர் 1860 இல் அல்பானியில் உள்ள நியூயார்க் மாநில பள்ளியில் பட்டம் பெற்றார். 1883 முதல் 1885 வரை, அவர் பென்சில்வேனியா மருத்துவக் கல்லூரியில் மருத்துவம் பயின்றார்.

குவாங்டங் (குவாங்டாங்) மாகாணத்தின் துறைமுக நகரமான ஸ்வாடோவில் (சாண்டோ) குடியேறி, அவர் பைபிள் பெண்கள் பணியைத் தொடங்கினார், சுவிசேஷகர்களாகவும் பைபிள் ஆசிரியர்களாகவும் வெளிநாடு செல்ல உள்ளூர் பெண்களுக்குப் பயிற்சி அளித்தார். சீனாவில் தனது 20 வருட காலப்பகுதியில் அவர் பள்ளிகளை நிறுவினார், பாடத்திட்டத்தை எழுதினார் மற்றும் சுமார் 500 பைபிள் பெண்களுக்கு பயிற்சி அளித்தார். அவர் ஓய்வு பெற்ற பிறகு அமெரிக்கா திரும்பினார் மற்றும் அறிவியல் ஆராய்ச்சியில் ஈடுபட்டார்.



வானதி என்ற புனைபெயரில் எழுதும் முத்து பிரகாஷ், 1976இல் பிறந்தவர். மின்னணுவியலில் பொறியியல் பட்டம் பெற்ற அவர் , 23 வருடங்களாகத் தொழில் நுட்பத்துறையில் பல பொறுப்புகளில் வகித்து வரும் இவர் , தமிழின் மீது தீராத ஆர்வம் கொண்டவர்.

தொடர்பு : கைபேசி : 9840552644

மின்னஞ்சல் : rmuthuprakash@gmail.com

இவரின் பிற புத்தகங்கள் (அனைத்தும் கிண்டிலில் கிடைக்கின்றது ) :

1. 1877: தாது வருடப் பஞ்சம் - வில்லியம் டிக்பி
2. வரலாற்றில் வழிகாட்டிய செப்பேடுகள்
3. தென்னிந்திய கிராம தெய்வங்கள் - ஹென்றி ஒயிட்ஹெட்
4. நீலகிரி: பத்தொன்பதாம் நூற்றாண்டில் சிவசமுத்திரம் மற்றும் நீலகிரி பயணக் குறிப்புகள். - லெப். எச். ஜெர்விஸ்
5. கொற்கை - இராபர்ட்டு கால்டுவெல்
6. பிரைட் அண்ட் பிரிஜூடிஸ் : புத்தகம் ஒன்று - ஜேன் ஆஸ்டென்
7. பிரைட் அண்ட் பிரிஜூடிஸ்: புத்தகம் இரண்டு - ஜேன் ஆஸ்டென்
8. வரலாற்றின் சுவட்டில்... (பயணக் கட்டுரைகள்)
9. தென்னிந்திய நாட்டுப்புறக் கதைகள் - ஜார்ஜியானா கிங்ஸ்கோட்
10. அடர் வனத்தின் யட்சி (கவிதைகள்)
11. Temples of South India: And a Few Museums
12. குடுமி பற்றிய சிந்தனைகள் - இராபர்ட்டு கால்டுவெல்
13. பல்லவர்கள் : தொன்மையியல் வரலாறு: பாகம் I & II - கபிரியேல் ஜூவே - துபிரியே
14. இந்துக்களுக்கு ஒரு கடிதம் - லியோ டால்ஸ்டாய்
15. தென்னிந்திய திருமண சடங்குகள் - எட்கர் தர்ஸ்டன்
16. முதல் காதல் - இவான் துர்கனேவ்
17. எல்லாம் மானுடமே! - பிரீட்ரிக் நீட்சே
18. இரும்பு மனிதர்கள், புனிதத் துறவிகள் - முதலாம் சிலுவைப்போர். - ஹரால்ட் லாம்ப்.
19. ஒன்பது வேடிக்கைக் கதைகள். - அந்தோன் செகாவ்
20. ராஜ்மோகனின் மனைவி - பங்கிம் சந்திர சட்டர்ஜி
21. கொடைக்கானல்: 1845-1945 - சார்லெட் வைக்காப்

"பேசும் வார்த்தைகள் மறைந்து போகும்; எழுதிய வார்த்தைகள் நிலைத்திருக்கும்."

சீன பழமொழி.

1873 முதல் 1889 வரை எனது வேலையிலும், மகிழ்விலும் துணையாக இருந்த சீனத்தின் பெண்களுக்கு...

மரத்தடியில், மாலை நேரம் ஆசிரியர் கதையை சொல்லுகிறார்.



இது சீனத்து நாட்டுப்புறக் கதைகளின் தொகுப்பு. நாற்பது கதைகள் கொண்ட இந்த தொகுப்பு, சீனாவின் ஒரு பிரதேசத்தை சேர்ந்த கதைகள் மட்டுமே.

சீன இலக்கியம் பரவலாக மொழிபெயர்ப்பில் கிடைப்பதில்லை. அதற்கு முதல் காரணம், சீன இலக்கியம், ருசிய இலக்கியம் அளவிற்கு ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படவில்லை. கடந்த 20-30 வருடங்களில் ஆங்கில மொழிபெயர்ப்புகள் அதிகமாக இருந்தாலும், சீன எழுத்தாளர்கள் பரவலாக அறியப்படவோ, பேசப்படவோ இல்லை.

இதற்கு பல காரணங்கள் இருக்கலாம். அவற்றிற்குள் இப்போது நாம் செல்ல வேண்டியதில்லை. ஆனால், கிடைக்கும் சில மொழிபெயர்ப்புகளை கண்டறிந்து, மொழிபெயர்ப்பது மிகவும் சிரமம் தரக்கூடியதாக இருக்கிறது.

இந்த தொகுப்பில் இருக்கும் பல கதைகள் இதற்கு முன் நான் வாசித்தறியாதவை. ஐரோப்பிய மொழிகளிலோ, இந்திய மொழிகளிலோ இந்தக் கதைகள் இல்லை. முக்கிய காரணம், இவை பெரும்பாலும் குறிப்பிட்ட சீன பழக்கவழக்கம், மரபுகளை ஒட்டி சொல்லப்பட்டிருப்பதாக இருக்கலாம். அதனாலேயே இந்தக் கதைகள், கதவைத் திறந்தவுடன் நுழையும் தென்றலாக இருக்கிறது.

சிறப்பாக முகப்பட்டை வடிவமைத்து, பல ஆலோசனைகளையும் சொல்லி உதவும் அழிசி பதிப்பகத்தின் ஸ்ரீனிவாச கோபாலனிற்கு நன்றி.

வழக்கம் போல எனக்கு உதவியாக இருக்கும் மனைவி ஜெயஸ்ரீக்கும் அன்பும், நன்றியும்.

நன்றி

முத்து பிரகாஷ்.இர

சென்னை.

22 ஆகஸ்ட், 2021.



இந்தக் கதைகள், 1873க்கும், 1889க்கும் இடையில் ஸ்வாடோ(Swatow)வில் (இன்றைய, ஷாண்டோ(Shantou)), அவர்களது வட்டார மொழியில், வாசிக்கத் தெரியாத மக்களால் எனக்குச் சொல்லப்பட்டவை அல்லது நான் கேள்விப்பட்டவை. அங்கு நானிருந்த நாட்களின் பல இரவுகளிலோ அல்லது மெதுவாகப் படகுகளில் செல்லும் போதோ அல்லது அவர்களது குடிசைகளில் அமர்ந்திருக்கும் போதோ, தென் சீனத்தின் குவாங்டுங் பிரதேசத்தில் நேரத்தை கடத்துவதற்காக அவர்கள் சொன்னவை. இந்தக் கதைகள் ஐரோப்பிய மொழிகளில் இதற்கு முன்பு சொல்லப்பட்டதாக ஆசிரியருக்கு தெரியவில்லை. இவை சீன புத்தகங்களில் எழுதி வைக்கப்பட்டுள்ளதா என்பதும் தெரியவில்லை. சீனத்தின் நம்பிக்கைகளையும், மரபுகளையும் தெரிந்திருக்காதவர்களுக்காக இந்தக் கதைகளில் இருந்து நான் சிலவற்றை மட்டுமே எடுத்துக் கொண்டிருக்கிறேன்.

இந்தப் புத்தகத்தில் 'குறி தவறிய அம்பு' என்னும் சாகச கதை, நூலில் மணிகளைக் கோர்ப்பது போல நாற்பது கதைகளைச் சொல்லிக் கொண்டு சென்று முடிகிறது. ஆசிரியரின் வேண்டுகோளுக்கு இணங்கி, இந்தப் புத்தகத்தில் இருக்கும் சித்திரங்கள் எல்லாம் ஸ்வாடோவில் இருக்கும் புகழ்பெற்ற ஓவியர், கோ லெங் அவர்களின் பள்ளி ஓவியர்களால் தீட்டப்பட்டிருக்கிறது.

இந்தக் கதைகள் முதல்முறையாக 1893இல் பதிப்பிக்கப்பட்டன. பல நூற்றாண்டுகளாகச் சீனத்தில் நிலவி வரும் மரபுகள், நிலை, எண்ணங்கள் முதலியவற்றைப் பேசுகின்றன. இதை நான் மொழிபெயர்த்த பொழுது, சீனத்தில் நூற்றில் ஒரு ஆணும், ஆயிரத்தில் ஒரு பெண்ணும் மட்டுமே எழுத, படிக்கத் தெரிந்தவர்களாக இருந்தார்கள். அப்போதிருந்து, சீனர்கள் பெற்றிருக்கும் அறிவியல், அரசியல் முன்னேற்றத்தை நாம் மறைத்துவிட முடியாது. வெளியுலகப் பாதிப்புகள் இல்லாத நாட்களில் சீனர்களின் வாழ்வை இந்தப் புத்தகம் பேசுகிறது.

தனி நபரோ அல்லது ஒரு தேசிய மக்களுக்கோ, அவர்களது குணாதிசியங்களே அவர்களது விதியை நிர்ணயிக்கிறது; சீனத்தில் தோன்றிய, அவர்களின் இனத்தின் குணத்தைப் பதிவு செய்யும் இந்தக் கதைகள், மற்ற இனத்தவருக்கும் பாடமாக இருக்கும். மற்ற எந்த மக்களையும் விட, சீனர்கள் எதிர்கால நலத்திற்காக, தற்போதைய சந்தோசங்களை இழக்க தயாராக இருக்கிறார்கள்; உடனடியாகக் கிடைக்கும் திருப்தியை விட எதிர்காலத்தை நோக்கியே யோசிக்கிறார்கள்; மற்றவர்களை விட மிகச் சிறிய அளவிலேயே எதையும் வீணாக்குகிறார்கள்; அவர்கள் அளப்பரிய தியாகம், உண்மையான நன்றி, உயர்வான எண்ணங்கள் கொண்ட மக்களாக இருக்கிறார்கள். அவர்களது நகைச்சுவை உணர்வும், கூர்மதியால் லாபத்தையும், முட்டாள்தனத்தால் இழப்பையும் தருகிறது. கற்று கொள்வதிலும், கடுமையான நேரங்களைத் தாங்கி கொள்வதிலும் சீனர்கள் மற்றவர்களை விட முன்னணியில் இருக்கிறார்கள். அவர்கள் அதிகாரத்தை மதிப்பவர்களாகவும், அதன் பக்கமே வேகமாகச் சேர்ந்து கொள்பவர்களாகவும் இருக்கிறார்கள். ஆனாலும் அவர்களது ஆன்மா சரியான பாதையில் செல்வதை விரும்புவதாகவும், தன்னளவில் ஒழுக்கமான மனிதனை கடவுளாகப் பார்க்கவும் செய்கிறது.

இத்தகைய குணங்களைக் கொண்ட மக்களைக் கொண்ட இந்தத் தேசத்தின் எதிர்காலம் எப்படி இருக்கும் என்பதும், உலகில் நான்கில் ஒரு பங்கு எண்ணிக்கையில் இருக்கும் அந்தத் தேசத்தின் மக்கள், ஏனைய உலகமக்களின் வாழ்வில் எத்தகைய பாதிப்பை கொண்டு வருவார்கள் என்பதும் இருபதாம் நூற்றாண்டில் ஒவ்வொரு சிந்திக்கும் மனிதரும் யோசிக்க வேண்டிய விஷயமாகும்.

எ. எம். எப்.

# ☒☒☒☒ ☒☒☒☒☒☒ ☒☒☒☒.

பெருமுள் என்ற ஒரு கிராமத்தில் ஏழை தம்பதியினர் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்கு மகன்கள் இல்லை. ஒரு மகள் மட்டுமே இருந்தாள். அவளது பெயர் சென்ஷூ. தான் பள்ளிக்கு சென்று படிக்கவேண்டும் என்று அவளது பெற்றோரை தொந்தரவு செய்து வந்தாள். அவளது விருப்பத்தை நிறைவேற்றுவதில் அவர்களுக்குப் பல தடங்கல்கள் இருந்தன. முதலில், அவர்களால் அவளுக்கு எதையும் கற்றுக் கொடுக்க முடியாது; அவர்களது அருகில் இருப்பவர்களும் படித்தவர்கள் இல்லை; அவளுக்கு என்று ஒரு ஆசிரியரை நியமிக்கும் அளவிற்கு அவர்களுக்கு வசதி இல்லை; அவர்களது கிராமத்தில் பள்ளியும் இல்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, பெண் குழந்தைகளைப் படிக்க வைப்பது அவர்களது வழக்கம் இல்லை. ஆண்களுடன் பெண் குழந்தைகளைப் பழக விடுவதும் இல்லை. பல யோசனைகளுக்குப் பின்னர், அவளை அருகிலிருந்த நகரில் இருந்த அவளது பாட்டியின் வீட்டிற்கு அனுப்புவது என்றும், அவளுக்கு ஆண் குழந்தைகளைப் போல உடை அணிவித்து, அங்கிருந்த ஆசிரியர் ஒருவரிடம் படிக்க அனுப்புவது என்று முடிவு செய்தார்கள். அங்கே, ஆண் மாணவர்களைப் போல அவளும் படிக்க ஆரம்பித்தாள், படிப்பதில் மிகவும் ஆர்வமாக இருந்ததால், அவளை அவளது ஆசிரியரும் பாராட்டினார். அவளது சக மாணவர்களும் அவள் திறமையாக விளையாட்டுகளில் ஈடுபடுவதைப் பாராட்டினார்கள். குறிப்பாக அவள் வில் வித்தையில் சிறந்து விளங்கினாள். அவள் எப்போதும் வகுப்பில் மிகவும் பொறுப்பான, படிக்கும் மாணவனான ஜின்ஷியுடன் அமர்ந்திருப்பாள். அவள் விளையாடும் போதும், படிக்கும் போதும் அவனுடனே இருப்பாள். காலப்போக்கில் அவளது இதயத்தையும் அவன் கவர்ந்துவிட்டான்.

அவர்கள் இருவரையும் தொந்தரவு செய்வதற்கு, வகுப்பிலேயே குறும்புக்கார பையனான சாங்ஜி இருந்தான். அவர்கள் படிக்கும் போது தொந்தரவு செய்வதும், விளையாடும் போது அதைக் கெடுப்பதும் அவன் வேலையாக இருந்தது.

அவர்கள் மூவரும், இன்னமும் பனிரெண்டு மாணவர்களுடன், அதிகாலையில் தங்களது பள்ளிக்குச் சென்றுவிடுவார்கள். அருகில் இருந்த அறையில் தூங்கி கொண்டிருக்கும் அவர்களது ஆசிரியரை தொந்தரவு செய்யாமல் பாடங்களைப் படிக்க ஆரம்பிப்பார்கள். விடிந்தவுடன், அவர்களில் மூத்த மாணவன் ஆசிரியரின் கதவைத் தட்டி, தங்களது பாடங்களைக் கேட்க அவரை வரச் சொல்லுவார். ஆசிரியர் தயாரானவுடன், ஒவ்வொரு மாணவனும் சுவற்றைப் பார்த்துக் கொண்டு, முதுகை ஆசிரியருக்கு காட்டிக் கொண்டு, தாங்கள் படித்தவற்றை நினைவில் இருந்து ஒப்புவித்தார்கள். அதன் பின்னர் ஆசிரியர் அவர்கள் காலையில் படிக்கவேண்டிய பாடத்தை இரண்டு முறை வாசித்துக் காட்டுவார். அதன் பின்னர், அனைத்து மாணவர்களும் தங்களது வீடுகளுக்குச் சென்று காலை உணவை எடுத்துக் கொண்டனர். வேகவைத்த அரிசியும், உப்பிட்ட மீனும் அவர்களது உணவு. அதை வலது கையில் குச்சிகளை வைத்து சாப்பிட்டனர். காலை உணவை முடித்துவிட்டு திரும்பவும் அவர்களது வகுப்பிற்கு வந்து, அறையைக் கூட்டி, பெருக்கி சுத்தம் செய்தனர். ஆசிரியர் வீட்டுப் பாத்திரங்களைச் சுத்தம் செய்தனர். அதன் பின்னர், அவர்களது காலை பாடத்தைச் சத்தமாகப் படித்தனர். அதன் பின்னர், எழுத்துப் பயிற்சி நடைபெறும். சிறுவர்கள் தங்களது மேசைகளில் அமர்ந்து, பழுப்புக் காகிதத்தில் எழுத்துக்களைத் தங்களது தூரிகைகளில் எழுதி பழகும் போது, மூத்த மாணவர்களுக்கு ஆசிரியர் அவர்கள் காலையில் படித்தவற்றிற்கு விரிவான விளக்கத்தைக் கொடுப்பார். உச்சிவேளை வரும் போது, அவர்கள் அன்று எழுத வேண்டிய ஈரடி செய்யுள் பொருள் பற்றி ஒரு சிவப்புத் தாளில் எழுதி, அதை வகுப்பின் கதவின் பின்னால் ஒட்டி விடுவார். இத்தோடு காலை வகுப்புகள் முடிவுக்கு வந்து விடும். மாணவர்கள் தங்களது மதிய உணவான அரிசி சோறு, இறைச்சி குழம்பு, காய்கறிகள் முதலியவற்றை உண்டு விட்டு, ஆசிரியர் கொடுத்த பொருளை யோசிக்க ஆரம்பிப்பார்கள். அது "ஆச்சர்யத்துடன் சென்றுவிட்டு, பயத்துடன் வா!" அல்லது "பெற்றோர்களிடம் கீழ்ப்படிந்தும், அரசனிடம் விசுவாசத்துடனும் இரு!" போன்ற அறிவுரையாகவோ, "மெருகூட்டப்பட்ட பேச்சும், திருத்தப்பட்ட பிரதியும் முதலில் இருப்பதைப் போல இருப்பதில்லை." அல்லது "தெரியாதவர்களிடம் பத்தில் மூன்று மட்டுமே சொல்!" போன்ற பழமொழிகளாகவோ, "கோடரியின் கைப்பிடியை செதுக்க மாதிரி

தேவையில்லை" அல்லது "சிக்கனமாகத் தானியத்தைச் சேகரித்து வைப்பவனுக்கு மோசமான வருடம் இருப்பதில்லை." போன்ற பழைய எழுத்தாளர்களின் எழுத்தாகவோ அல்லது வேறு பழைய காலத்திய சொல்லாகவோ இருக்கலாம். மதியத்தில் நடுவேளையில் வகுப்பறைக்குத் திரும்பியவுடன், அவர்களது ஈரடி செய்யுள்களை எழுதி, ஒவ்வொருவராக ஆசிரியரிடம் எடுத்து சென்று, அவரது கருத்தை கேட்டுத் திருத்திக் கொள்வார்கள். அதன் பின்னர், சூரியன் மறையும் வரை சத்தமாகப் படித்து விட்டு, தங்களது இரவு உணவான அரிசி சோறு, வேகவைத்த காய்கறிகளை உண்டுவிட்டு, நண்பர்களுடன் இரவு வரை சுற்றிக் கொண்டிருப்பார்கள். சில சமயங்களில், மூத்த மாணவர்கள் திரும்பவும் பள்ளிக்குச் செல்வார்கள். அவர்களது ஆசிரியர் மாலையில், மரத்தடியில் அவர்களுக்கு ஏதேனும் பாடத்தை எடுத்து சொல்வார். பல நாட்களின் மாலைகளில் அவர்கள், அவர்களது வகுப்பறையில், கடலை எண்ணெயில் எரியும் விளக்கை ஏற்றி வைத்துக் கொண்டு, படிக்கவும், தேநீர் அருந்தவும், சாப்பிடவும், கதைகளைச் சொல்லவும் செய்வார்கள். அவர்களது ஆசிரியரும் அவர்களுடன் பெரும்பாலும் சேர்ந்து கொள்வார். ஒரு நாள் மாலை, அவர் தான் எந்த நீதியும் இல்லாத கதை ஒன்றை சொல்லப் போவதாகச் சொல்லி, ஆரம்பித்தார்.



வில்வித்தை பயிற்சி.



வயதான பெண்மணி ஒருத்திக்கு ஒன்று போலவே இருக்கும் ஐந்து மகன்கள் இருந்தார்கள். அவர்களில் மூத்தவன் கடலை ஒரே மடக்கில் குடித்து விடுபவன்; இரண்டாமவன் எக்கு போன்ற உறுதி கொண்டவன்; மூன்றாமவனின் கால்கள் நீளமாக வளரக் கூடியவை; நான்காமவனை நெருப்பும் எதுவும் செய்யாது; ஐந்தாமவன் மூச்சு விடாமலேயே வாழ்பவன். அவர்கள் தங்களது திறமைகளை வெளிக்காட்டாமல் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் அருகில் வாழ்பவர்களுக்குக் கூட எதுவும் தெரியாது.

மூத்த மகன் மீன் பிடிப்பதன் மூலம் அவனது குடும்பத்தைக் காப்பாற்றி வந்தான். தனியாகக் கடலுக்குச் செல்லும் அவன், திரும்பும் போது மீன்களைக் கொண்டு வருவான். அவனது அருகில் இருப்பவர்கள், தங்களது மகன்களுக்கும் மீன்களைப் பிடிக்கும் வித்தையைக் கற்றுக் கொடுக்கும்படி அவனிடம் கேட்டுக்கொண்டே இருந்தார்கள். இறுதியாக ஒரு நாள், அவனும் ஒத்துக் கொண்டு, அந்தச் சிறுவர்களை எல்லாம் தன்னுடன் அழைத்துக் கொண்டு கடலுக்குச் சென்றான். கடலுக்குச் சென்றவுடன், அவன் கடலை தன்னுடைய வாயிற்குள் அடக்கிக் கொண்டு, சிறுவர்களைத் தரையில் கிடந்த மீன்களை எடுத்துக் கொள்ளும்படியாகக் கூறினான். அவனால் வாயில் அடக்க முடியாமல் போனபோது, அவர்களைக் கரைக்கு வந்து சேரும்படி கூறினான். ஆனால், சிறுவர்கள் அங்கே விளையாடிக் கொண்டிருந்த ஆர்வத்தில் அவனைக் கவனிக்கவில்லை. இறுதியில், அவனால் அடக்க முடியாத நிலை வரவே, கடலை திரும்பவும் நிரப்பிவிட்டான். சிறுவர்கள் அனைவரும் மூழ்கி போனார்கள். அவன் வீட்டிற்குத் திரும்பிய போது, அவன் அந்தச் சிறுவர்களின் பெற்றோர்களைப் பார்த்தான். தங்களது மகன்கள் எத்துணை மீன்களைப் பிடித்திருக்கிறார்கள் என்றும், எப்போது அவர்கள் வீடு திரும்புவார்கள் என்றும் கேட்டார்கள். அவனும் நடந்த உண்மைகளை அப்படியே கூறினேன். ஆத்திரமடைந்த அவர்கள், அவனை அங்கிருந்த நீதிபதியிடம் இழுத்துச் சென்றார்கள். அவனும் அவரிடம், தான் சிறுவர்களை வரச் சொல்லவில்லை என்றும், அவர்களது பெற்றோரே தன்னை வற்புறுத்தி அழைத்துச் செல்ல செய்தார்கள் என்றும், சிறுவர்கள் கடலில் இருந்து திரும்பத் தான் மிகவும் முயன்றதாகவும், தன்னால் முடியாத நிலை வந்த பொழுதே, கடல்நீரை திரும்பவும் அங்கே விட்டதாகவும் கூறினான். ஆனால், நீதிபதி அவன் சிறுவர்களைக் கூட்டிச் சென்று, திரும்ப அழைத்து வராததால், அவன் மீது கொலைக்குற்றம் சாட்டி, அவனைச் சிரச்சேதம் செய்ய உத்தரவிட்டார். தனது தண்டனைக்கு முன்பு இறுதி முறையாகத் தன்னுடைய வயதான தாயை சென்று பார்க்க வேண்டினான். நீதிபதியும் அதற்கு ஒத்துக் கொண்டார். அவன் சென்று, அவனது சகோதரர்களிடம் அவனது விதியை குறித்துக் கூறினான். இரண்டாவது சகோதரன், அவனுக்குப் பதிலாகத் தண்டனையை ஏற்றுக் கொள்வதாகக் கூறி, நீதிபதியிடம் சென்று அவ்வாறே கூறினான். தன்னுடைய கடமையை நிறைவேற்ற உதவியதற்கு நீதிபதிக்கு நன்றி கூறினான். தான் இறப்பதற்குத் தயாராக இருப்பதாகக் கூறினான். தலையைக் குனியவே, தண்டனையை நிறைவேற்றுபவன் தன்னுடைய கத்தியை வேகமாக அவனது கழுத்தில் இறக்கினான். ஆனால், கத்தி அவனை எதுவும் செய்யவில்லை. இன்னமும் அருமையான எக்கினால் செய்த கத்தியை கொண்டு வந்து முயன்றார்கள். இப்போதும் அவனது கழுத்தை வெட்டமுடியவில்லை. ஒரே வெட்டில் தலையை அகற்றும் பலரும் முயன்று பார்த்தார்கள். அவன் கழுத்தை வெட்டுவதில் தங்களது கத்திகளை இழந்த அவர்கள், அவனைத் திரும்பவும் சிறைக்கு அனுப்பிவிட்டு, நீதிபதியிடம் தண்டனையை நிறைவேற்ற முடியவில்லை என்று கூறினார்கள்.

நீதிபதி அவனைக் கடலில் மூழ்கடிக்க வேண்டும் என்று தண்டனையை மாற்றினார். அதைக் கேட்டவுடன், இரண்டாமவன் தான் தலையை வெட்டப் போவதாகத் தன்னுடைய தாயிடம் சொல்லி விட்டு வந்ததாகவும், கடலில் மூழ்க வேண்டும் என்றால், திரும்பவும் தன்னுடைய தாயிடம் சொல்லி விட்டு வரவேண்டும் என்றும் கூறினான். அனுமதி கிடைத்தவுடன், அங்குச் சென்று அவனது சகோதரர்களிடம் நடந்ததைக் கூறவே, மூன்றாவது சகோதரன் இப்போது அவனது இடத்தை எடுத்துக் கொண்டான். நீதிபதி முன் வந்தான். அவனைக் கடலிற்குள் கூட்டி சென்று, கடலில் வீசினார்கள். அவனோ தன்னுடைய கால்களை வளர்த்து, கடலின் அடிப்பகுதியை தொட்டு, தலை வெளியே தெரியும்படியாக நின்று கொண்டான். அவனை வெளியே இழுத்து, இன்னமும்

ஆழமான இடத்திற்கு அழைத்துச் சென்று திரும்பவும் தூங்கி வீசினார்கள். திரும்பவும் அவன் மூழ்காமல் நின்று கொண்டான். அவனைத் திரும்பவும் நீதிபதியிடம் கூட்டி வந்து, தண்டனையை நிறைவேற்ற முடியவில்லை என்று சொல்லி விட்டார்கள்.

இப்போது அவனைச் சுடும் எண்ணையில் மூழ்கடித்துக் கொல்லுமாறு ஆணையிட்டார். சட்டியை சுட வைத்தவுடன், அவனும் முன்போல, தான் திரும்பவும் தன் தாயிடம் செல்லவேண்டும் என்று வேண்டிக் கொண்டான். இப்போதைய தண்டனையைக் கேள்விப்பட்ட அவனது சகோதரர்களில் நான்காமவன் தண்டனையை ஏற்றுக் கொள்ளக் கிளம்பினான். அங்கே அவனை அவர்கள் கொதிக்கும் எண்ணெய் சட்டியில் இறக்கினார்கள். அவனோ வெதுவெது நீரில் குளிப்பது போல நீந்த ஆரம்பித்தான். தண்டனையை நிறைவேற்றுபவர்கள் நெருப்பின் வேகத்தை அதிகரித்தார்கள். அதிலும் அவன் எந்தப் பாதிப்பில்லாமல் இருக்கவே, அவனைத் திரும்பவும் சிறைக்கு அனுப்பினார்கள்.

இப்போது சிறுவர்களின் பெற்றோர், மக்கள் மற்றும் நீதிபதியும் எப்படியாவது மரணதண்டனையை நிறைவேற்ற வேண்டும் என்று ஆலோசனை செய்தனர். நீர், நெருப்பு, வாள் என அனைத்தும் தோல்வியடைந்து விட்டன. அவனை ஒரு பெரிய கேக்கில் வைத்து, மூச்சு முட்ட செய்து கொல்வது என்று முடிவு செய்தனர். நாட்டில் இருந்த அனைவரும் கேக் செய்ய மாவும், சக்கரையும் கொடுத்தனர். அதைச் சுடுவதற்குப் பெரிய செங்கற்களால் அடுமனை ஒன்றும் செய்யப்பட்டது. நகருக்கு வெளியே அவர்கள் கேக்கை சுட்டார்கள். அதே நேரத்தில், சிறையில் இருந்தவன் தன் தாயிடம் சென்று விடை பெற்றுக் கொள்ளச் சென்றான். இப்போது ரகசியமாக ஐந்தாமவன் அவனுடைய இடத்தை எடுத்துக் கொண்டான். கேக் தயாரானவுடன், மக்கள் அதைக் குதிரை, காளை போன்ற மிருகங்களைக் கொண்டு, வண்டியில் வைத்து இழுக்கக் கொண்டு கொலைக்களத்திற்குக் கொண்டு வந்தனர். அதன் உள்ளே அவனை வைத்து அடைத்தார்கள். அவனால் காற்றில்லாமல் வாழ முடியும் என்பதால், அவனும் மறுநாள் நடுஇரவு வரை நன்றாக ஓய்வெடுத்தான். மறுநாள் வெளியே வந்து, அவனுடைய வீட்டிற்குத் திரும்பி, அவனது சகோதரர்களுடன் பல வருடங்கள் சந்தோசமாக வாழ்ந்தான்.



இந்தக் கதை மாணவர்களுக்கு மிகவும் பிடித்திருக்கவே, சாங்ஜி ஆசிரியரை அது போலவே எந்த நீதியும் இல்லாத இன்னொரு கதையைச் சொல்ல சொல்லி கேட்டான். அவரும் மறுநாள் மாலை சொல்வதாகச் சொல்லி, பதிலுக்கு அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு கதையைச் சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அவர்கள் அதற்கு ஒத்துக் கொண்டனர். மறுநாள் மாலை, தேநீர் தயாரிக்கப்பட்டு, நடுவில் இருந்த சிவப்பு மேசையில், சிறிய தேநீர் குடுவைகளுடன் வைக்கப்பட்டது. மாணவர்கள் தங்களது மேசைகளை இழுத்து, ஆசிரியரின் நாற்காலிக்கு அருகே போட்டு, அமர்ந்து கொண்டனர். அவர் அவர்களுக்கு அடுத்தக் கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.



ஒரு காலத்தில் மிகவும் பக்தியை உடைய செல்வந்தன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் தனது செல்வத்தை முழுவதும் கடவுள் வழிபாட்டிற்கே செலவழித்து வந்தான். அவன் தன்னுடைய கவனத்தை முழுவதும் வழிபாடுகளிலும், எப்படி எல்லாம் படையல் செய்வித்து வழிபாடுகளை நடத்தலாம் என்றும் எண்ணி வந்ததால், காலப்போக்கில் அவன் தன்னுடைய செல்வத்தை எல்லாம் இழந்து, மிகவும் ஏழ்மை நிலையை அடைந்தான். எனவே, தன்னுடைய மனைவியையும், மூன்று சிறிய ஆண் குழந்தைகளையும் காப்பாற்ற வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டான். அவன் இருக்கும் நகரில் அதற்குச் சரியான வேலை கிடைக்காது என்பதை உணர்ந்தவுடன், அவன் தன்னுடைய வீட்டைத் தவிர, அனைத்து சொத்துக்களையும் விற்றுவிட்டு தூர தேசத்திற்கு வணிகம் செய்யக் கிளம்பினான். சென்ற வழியில் அவனது கப்பல் மூழ்கிவிடவே, அவனது செல்வம் அனைத்தையும் இழந்து போனான். அருகில் இருந்த தீவில் அவன் ஒதுங்கினான். அந்தத் தீவில் வாழ்ந்து வந்த சில மனிதர்களிடம் பிச்சை எடுத்து வாழ்ந்து வந்தான். ஆனால் அங்கு அவன் மீது ஒரு ஏழை மனிதர் மட்டுமே இரக்கம் காட்டி வந்தார். அவன் செல்வந்தனுக்கு ஒரு தொப்பி, போர்வை மற்றும் கூடையை வழங்கினார். அவை மந்திர சக்தி கொண்டவை. தொப்பியை நெஞ்சோடு அணைத்துக் கொண்டால் மறைந்து போவோம் என்றும், போர்வையைக் கையில் சுற்றிக் கொண்டால் வானில் பறக்க முடியும் என்றும், கூடையை விரல்களால் தட்டினால் அது ரத்தினங்களால் நிரம்பி விடும் என்றும் கூறினான். செல்வந்தனும் அந்தப் பரிசுகளை எடுத்துக் கொண்டு, அவை உண்மையில் மந்திர சக்தியை கொண்டவை என்று அறிந்து கொண்டான். எங்கும் என்ன நடக்கிறது என்பதை யாருக்கும் அறியாமல் அவனால் தொப்பியின் உதவியால் பார்க்க முடிந்தது. போர்வை அவனைக் கடல் கடந்து செல்ல உதவியது. கூடையால் அவனது மற்ற தேவைகள் அனைத்தும் நிறைவேறியது.

வீட்டிற்குத் திரும்பியதும், அவனது மனைவி இறந்துவிட்டாள் என்று தெரிந்து கொண்டான். அவனுடைய மூன்று மகன்களும், உயரமாகவும், அறிவாளிகளாகவும், அழகாகவும் வளர்ந்து இருந்தார்கள். அவர்களது தந்தை, தன்னுடைய அதிசய பொருட்களை அவர்களது பயனிற்காக உபயோகித்தார். எனவே அவர்கள் சிறிது காலத்திலேயே நிலம், வீடுகள் மற்றும் பணம் எனச் செல்வத்துடன் இருந்தார்கள். பல வருடங்களுக்குப் பின்னர், செல்வந்தனும் தனது இறுதி காலம் வந்துவிட்டது என்று அறிந்து, அவனது மகன்களை அழைத்து, தன்னுடைய அதிசய பொருட்களை அவர்களுக்குக் கொடுத்தான். மூத்தவனுக்குப் போர்வையையும், இரண்டாமவனுக்குத் தொப்பியையும், தனக்குப் பிரியமான மூன்றாமவனுக்குக் கூடையையும் கொடுத்தான். அந்தப் பொருட்களைத் தவறாக உபயோகித்தால் என்ன கேடுகள் வரும் என்பதையும் அவர்களுக்கு எடுத்துக் கூறினான். குறிப்பாக மூன்றாவது மகனிடம், சிக்கனமாகவும், உழைத்து வாழவும் வேண்டும் என்று கூறினான். அப்படியே நல்ல மனிதனாக இருக்க முடியும் என்றும் கூறினான். அவனும் அவனது தந்தை கூறியபடியே வாழ்வதாகவும், மேலும் கூடையின் உதவியுடன், அந்த நாட்டின் இளவரசியைத் தான் திருமணம் செய்து கொள்ளப் போவதாகவும் கூறினான்.

செல்வந்தனின் இறுதி சடங்குகள் முடிந்தவுடன், மூன்றாவது மகன் நாட்டின் தலைநகருக்குச் சென்றான். அங்கே இளவரசி அரண்மனையில் இருக்கும் இடத்தைத் தெரிந்து கொண்டு, அங்கிருந்த பணிப்பெண் ஒருத்தியின் உதவியுடன், தன்னிடம் பெரிய, அழகான ரத்தினங்கள் இருப்பதாகவும், அவற்றை அவளிடம் காட்ட வேண்டும் என்றும் சொல்லி அனுப்பினான். பணிப்பெண்ணும் அது போலவே அந்த ரத்தினங்களைப் பற்றி மிகவும் உயர்வாக இளவரசியிடம் கூறவே, அவளும் அவற்றைக் கொண்டு வரச் சொல்லி, அந்த ரத்தினங்களைக் கூடையோடு வைத்துக் கொண்டாள். அதற்கு ஈடான பணத்தையும் அவள் கொடுத்து அனுப்பி விட்டாள். வேறு யாரும் இதைப் பற்றி அறியாததால், மூன்றாவது மகன் தனது கூடையைத் திருப்பிக் கொடுத்து விடும்படி மிகவும் கேட்டுக் கொண்டான். அது கிடைக்கவில்லை என்பதாலும், அதற்கு மேல் அங்கிருந்தால் இளவரசியைத் தொந்தரவு செய்வதற்காகச் சிறை செல்ல வேண்டி வரும் என்பதாலும் அங்கிருந்து கிளம்பி விட்டான். அவன் வாழ்வின் வழி இல்லாமல் போய் விடவே, அவன் பிச்சை எடுத்துக் கொண்டே அவனது ஊரிற்கு வந்து சேர்ந்தான். அங்கு அவனது சகோதரர்களிடம் நடந்ததைக் கூறி, அவர்களது அதிசய பொருட்களைத் தனக்குக் கடனாகத் தருமாறும், தான் அவற்றைக் கொண்டு தனது கூடையைக் கண்டறிந்து விடுவதாகவும் கூறினான்.

அவனது சகோதரர்களோ, தன்னுடைய பொருளை பாதுகாக்க தெரியாதவனிடம் எப்படித் தங்களது பொருட்களைத் தருவது என்று மறுத்தார்கள். இறுதியாக, அவன் அவர்களிடம் பல வாதங்களை எடுத்து வைத்து, அவர்களது பொருட்களைக் கடனாகப் பெற்றுக் கொண்டான். திரும்பவும் தலைநகருக்குச் சென்றான். அங்கே அரண்மனையைப் பல நாட்கள் நோட்டமிட்டுக் கொண்டிருந்தான். ஆனாலும், அவனது கூடையை எடுத்துக் கொள்ளக்கூடிய சரியான நேரம் மட்டும் அமையவில்லை. ஒரு நாள், தொப்பியை நெஞ்சோடு வைப்பதற்குப் பதிலாக, தலையில் வைத்துக் கொண்டிருந்ததால், அரண்மனையில் அவனைக் கண்டறிந்து, முன்பே அங்குத் தொந்தரவு செய்தவன் என்று அவனை அரண்மனை வீரர்கள் பிடித்து, அடித்து, நகருக்கு வெளியே துரத்தி விட்டார்கள். அடிபட்டும், அவமானத்துடனும் அவனுக்குத் தனது சகோதரர்களிடம் திரும்ப விருப்பமில்லை. அருகில் இருந்த மலை பள்ளத்தாக்குகளில் அலைந்து திரிய ஆரம்பித்தான். அங்கே பசியினால் மிகவும் துயரப்பட்டு, சாப்பிடுவதற்கு எதாவது கிடைக்கிறதா என்று பார்க்க ஆரம்பித்தான். அங்கே இரண்டு வாழை மரங்கள் இருந்தன. ஒன்றில், பழுத்து மஞ்சளாகவும், மற்றதில் சுருங்கி, பச்சையாகவும் இருந்தது. அவன் பழுத்த வாழைப்பழம் ஒன்றை எடுத்து உண்டான். உடனே அவனது தலை வலிக்க ஆரம்பித்தது. அவனது முன்னந்தலையில் இருந்து கொம்பு முளைக்க ஆரம்பித்தது. கொம்பு வேகமாக வளர்ந்தது. அவன் நின்று கொண்டிருந்த மரத்தின் கிளைகளில் சுற்றி, அவனை அதே இடத்தில் இறுக்கமாகப் பிடித்து வைத்தது. ஆனாலும் அவனது பசி அடங்கவில்லை. பசி தாங்க முடியாமல் போன போது, இன்னொரு மஞ்சள் வாழைப்பழத்தை எடுத்துத் தின்றான். இப்போது அவனது தலையில் இரண்டு கொம்புகள் நீண்டு, வளைவாக வளர்ந்திருந்தது. அவற்றை அவனால் உடைக்கவோ, அகற்றவோ முடியவில்லை. இப்போது அவனுக்கு அந்த வாழைப்பழங்களை உண்பதற்கு அச்சமாக இருந்தது. எனவே பசித்தாலும், அவற்றை உண்ணாமல் எவ்வளவு நேரம் முடியுமோ அவ்வளவிற்குத் தாக்குப் பிடித்தான். தாங்கமுடியாது போகவே, பச்சை வாழைப்பழம் ஒன்றை எடுத்து உண்டான். அதைச் செய்தவுடன், அவனது கொம்புகளில் ஒன்று சிறியதாக மாறி, மறைந்து போனது. வேகமாக இன்னொரு பச்சை வாழைப்பழத்தை உண்ணவே, இன்னொரு கொம்பும் மறைந்து போனது. அவனது பழைய உருவத்தை அடைந்தவுடன், இந்த வாழைப்பழங்களைக் கொண்டு எப்படியாவது அவனது இழந்த பொருட்களைத் திரும்பப் பெற்றுவிடலாம் என்று அவனுக்குத் தோன்றியது. எனவே, இரண்டு வகையிலும், இரண்டு வாழைப்பழங்களை எடுத்துக் கொண்டு, அவன் அரண்மனைக்கு ஒரு வயதான பிரயாணியைப் போலத் திரும்பினான். தான் மாயா உலகில் இருந்து வந்திருப்பதாகவும், தன்னிடமிருக்கும் பழத்தை உண்பவர்கள் இளமையுடன் இருப்பார்கள் என்றும் இளவரசிக்கு செய்தி அனுப்பினான். இளவரசியும் தன்னுடைய பணிப்பெண்ணை அனுப்பி, பழத்தை பேரம் பேசி வாங்கி வரச் சொன்னாள். இளவரசியோடு தானும் இளமையாக இருக்கலாம் என்று எண்ணிய பணிப்பெண், இரண்டு வாழைப்பழங்களையும் வாங்கிக் கொண்டு, அதில் ஒன்றை தனக்காக என்று ஒளித்து வைத்துக் கொண்டாள். இன்னொன்றை இளவரசியிடம் சென்று கொடுத்தாள். இளவரசி உடனடியாக அதை உண்டுவிட்டாள். பணிப்பெண்ணும் திரும்பப் படிகளில் இறங்கும் போது, இன்னொரு வாழைப்பழத்தை உண்டுவிட்டாள். இளவரசியின் தலையில் முளைத்த கொம்பு, அவள் அமர்ந்திருந்த இருக்கையில் சுற்றி பிணைத்து போட்டது. பணிப்பெண்ணோ, அவள் இறங்கி கொண்டிருந்த படிகளின் கைபிடிகளில் கொம்பு சுற்றிக் கொள்ள, அங்கேயே நின்றுவிட்டாள். அவர்கள் இருவரும் அலறிய சத்தத்தில், அரண்மனையில் அனைவரும் இங்கும் அங்கும் ஓட, அந்தக் குழப்பத்தில் வயதான பிரயாணி தப்பித்துச் சென்றுவிட்டான்.

இப்போது கொம்பு வைத்திருந்தவர்கள் நிலை மோசமாக இருந்தது. கற்களைப் போல வலிமையுடனும், கைப்புண் போல மென்மையாகவும் கொம்புகள் இருந்தன. பெரிய மருத்துவர்கள் எல்லாம் அவற்றை அகற்ற முடியாது என்று கூறினார்கள். கடவுளுக்கு வேண்டியதும் பலிக்கவில்லை. அரண்மனை வைத்தியர்களும் கைவிட்டுவிடவே, அரசர் தன் மகளின் கொம்புகளை அகற்றுபவனுக்கே அவளைத் திருமணம் செய்து வைக்கப்போவதாக அறிவித்தார். இந்த அறிவிப்பை வெளியிட்ட சில நாட்களில் ஒரு இளைஞன், மருத்துவர் வேடத்தில் அரசரை சந்தித்தான். அவனிடம் பேசிய அரசருக்கு, அவனது அழகும், அறிவும் பிடித்துப் போகவே, இளவரசி மற்றும் அவளது பணிப்பெண்ணின் கொம்புகளை அவன் வெற்றிகரமாக அகற்றினால், இளவரசியை அவனுக்கே திருமணம் செய்து வைப்பதாக உறுதி கூறினார். அவனும் பச்சை வாழைப்பழத்தை இருவருக்கும் தந்து விடவே, அவர்களது தலைகளில் இருந்த கொம்புகள் மறைந்து போயின. அரசரும் அவரது உறுதியின்படி, அவர்களுக்குத் திருமணம் செய்து வைக்க, இளவரசி கூடை, போர்வை, தொப்பி முதலியவற்றோடு, தன் கணவனின் வீட்டிற்கு வந்து சேர்ந்தாள், அவற்றை அவற்றின் சொந்தக்காரர்களிடம் சரியாக ஒப்படைத்து விட்டான். அதன் பின்னர் அவர்களது குடும்பம் செழிப்பாக வாழ்ந்து வந்தது. அந்த மந்திர பொருட்களின் சக்தியும் காலப்போக்கில் குறைந்து போனது.

எட்டு மந்திரவாதிகள்.

∆∆∆

ஆசிரியர் கதையைச் சொல்லி முடித்தவுடன், சாங்ஜி அவரிடம் கடவுளிடம் எவ்வளவு வேண்டினாலும், அத்தகைய மந்திர பொருட்கள் இப்போதெல்லாம் கிடைப்பதில்லை என்றும், மற்றவர்களின் வேண்டுதலை கேட்பதன் மூலம் சில நேரங்களில் நமக்குப் பயன் கிடைக்கும் என்றும் கூறினான். உதாரணமாக, அவனது மாமா ஒருவர் மலைப்பாதையில் வரும் போது, அங்கிருந்த சிறு கோயிலின் அருகில், தனது சுமையை இறக்கி திரும்பக் கட்டிக் கொண்டிருந்தார். அப்போது கோயிலில் இருந்த கடவுள், அங்குத் தனக்கு இரை வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருந்த புலியிடம், அருகில் இருந்த கிராமத்தில் அன்றிரவு நிலா வெளிச்சத்தில், அவளது தோட்ட கிணற்றில் தண்ணீர் எடுக்க வரும் பெண் ஒருத்தியை புலி உண்டு கொள்ளலாம் என்று சொல்லிக் கொண்டிருந்தார். அந்தப் பெண்ணையும், அவர்களது வீட்டையும் மிகவும் நுணுக்கமாக வர்ணித்துக் கொண்டிருந்தார். கேட்டுக் கொண்டிருந்த என் மாமாவிற்கு, கடவுள் வர்ணிப்பது தன்னுடைய வீட்டையே என்று தெரிந்து விட்டது.`வேகமாக வீட்டிற்குத் திரும்பி, அவரது மனைவியை அன்றிரவு எங்கும் செல்ல விடாமல் தடுத்துவிட்டாராம்! ஜின்ஷி தான் எப்போது கடுமையான உழைப்பின் மீதும், தன் மீதும் மட்டுமே நம்பிக்கை வைத்திருப்பதாகக் கூறினான். அதுவே தனக்கு வெற்றியை தரும் என்று நம்புவதாகக் கூறினான். ஆனால் பழைய பழமொழியான "அதிர்ஷ்டம் இல்லை என்றால், தங்கமும் இரும்பாக மாறிவிடும்; அதிர்ஷ்டம் இருந்தால், வெண்கலமும் தங்கமாக மாறும்" என்பது போல அதிர்ஷ்டமும் இருக்க வேண்டும் என்றான்.

ஆசிரியர், இப்போது அவர்களது மூத்த மாணவனைக் கூப்பிட்டு கதை சொல்ல சொன்னார். அவன் தான் மதியம் காலணி கடைக்குச் சென்றதாகவும், அங்கே தோல்களை வெட்டிக் கொண்டிருந்த ஒருவன், எறும்புகள் தனது தோல்களைப் பழகிவிட்டதாகக் கூறினான். அதன் பின்னர் அவன் சொன்ன கதை இது.



தனக்கும், தனது மகனுக்கும் போதுமான அளவிற்குச் சம்பாதிக்கவில்லை என்று ஒரு பெண் அவளது கணவனை எப்போதும் திட்டிக் கொண்டே இருந்தாள். வீட்டிற்கு அருகில் அவனால் சம்பாதிக்க முடியவில்லை என்றால், தூர தேசம் எதற்காகவாவது சென்று சம்பாதிக்க வேண்டும் என்றும் கூறினாள். எனவே அவனும் தூரதேசத்திற்குச் சென்று வேலை தேடினான். எதுவும் கிடைக்கவில்லை என்றவுடன், திரும்பவும் தன்னுடைய கிராமத்திற்கே திரும்பினான். ஆனால், அவனிடம் பணம் இல்லை என்பது தெரிந்தால், அவனது மனைவி அவனைத் திட்டுவாள் என்று பயந்து,வீட்டிற்குச் செல்லாமல், வீட்டை சுற்றியே வந்து கொண்டிருந்தான். அப்போது அவள், அவர்களது மகனிடம் தான் அன்று சந்தையில் வாங்கி வந்தவற்றைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தாள். அனைத்தையும் அவள் சமையலறை பெட்டிகளில் வைத்து பூட்டும் சத்தமும் அவனுக்குக் கேட்டது. அவனுக்கு வீட்டு சமையலை ருசி பார்க்கவேண்டும் என்று தோன்றியது. மனதில் தைரியத்தை ஏற்றிக் கொண்டு, வீட்டிற்குள் நுழைந்தான். அவனுக்குக் கிடைத்த ஒரே வரவேற்பு, இவ்வளவு சீக்கிரமாக எதற்காக வந்தான் என்பதுதான். தான் வெளிதேசத்தில் இருந்த போது, தன்னுடைய மோப்ப திறன் மிகவும் அதிகமாக இருப்பதைக் கண்டறிந்ததாகவும், அதைத் தனக்குத் தெரிந்தவர்களிடம் உப்யோகிக்கவே தான் திரும்பி விட்டதாகவும் கூறினான். இதை நம்பாத அவனது மனைவி, வீட்டில் அன்று உண்பதற்கு என்ன இருக்கிறது என்று சரியாகச் சொல்லுமாறு கேட்டாள். சற்று நேரம் மோப்பம் பிடிப்பது போலச் செய்த அவன், இன்னமும் சமைக்காத, சுத்தம் செய்த கோழி இறைச்சி இருப்பதாகத் தெரிவித்தான். ஆச்சரியமடைந்த அவள் முன் திரும்பவும் மோப்பம் பிடித்து, அதன் அருகில் பன்றி இறைச்சியும் இருக்க வேண்டும் என்றான். இப்போது அவளுக்கு மிகவும் ஆர்வமாகிவிட்டது. திரும்பவும் மோப்பம் பிடித்த அவன், கெண்டை மீனும், இரண்டு வகையான காய்கறிகளும், கொஞ்சம் புளித்த பீன் தயிரும் இருப்பதாகத் தெரிவித்தான். அவளது கணவனின் திறமையைக் கண்டு அசந்து போன அவள், இரவு உணவை மிகுந்த அன்புடன் அவனுக்குப் பரிமாறினாள். மறுநாளே அவளது கிராமத்தில் இருந்தவர்களிடம் எல்லாம் அவள் கணவனின் சிறப்பான திறமை குறித்துப் பெருமையுடன் சொன்னாள். அவளது கதை வளர்ந்து, பல இடங்களுக்கும் பரவியது. நாட்டின் சக்கரவர்த்தியும், தொலைந்து போன எந்தப் பொருளையும் மோப்பத்தாலேயே கண்டுபிடித்துவிடும் மனிதன் ஒருவன் கிராமத்தில் இருப்பதைக் கேள்விப்பட்டார். அவரது பச்சை மாணிக்க முத்திரை தொலைந்து போயிருந்தது. அதைத் தேடி எடுக்க வேண்டி, அவனை அழைத்து வர சொன்னார். முத்திரையைக் கண்டு பிடித்தால், தன்னுடைய நாட்டில் எந்தப் பதவியையும் தரத் தயாராக இருப்பதாகக் கூறினார். அவனோ, தன்னுடைய திறமையை அறிந்திருந்ததால், எப்படி இந்த இக்கட்டான நிலையில் இருந்து தப்பிப்பது என்று கவலையுடன் யோசிக்க ஆரம்பித்தான். யோசிக்க, யோசிக்க அவனது பயம் அதிகமானதே தவிர, வழி எதுவும் தெரியவில்லை. பயத்தில், கண்களை மூடி, தன்னிலை மறந்து புலம்ப ஆரம்பித்தான். "ஆ! என்ன மோசமான நிலை! எல்லாம் முடிய போகிறது!" என்று புலம்பினான். அரசவையில் இருந்தவர்கள் அவன் தன்னிலை மறந்து, தன்னுடைய மோப்ப சக்தியை உபயோகிப்பதாக எண்ணி, அவனைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அடுத்து அவன் என்ன செய்யப் போகிறான் என்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். யாரோ அவனது சட்டையைப் பிடித்து இழுப்பது போல இருந்தது. அரசவையில் இருந்த இருவர் அவனிடம் ரகசியமாகப் பேச வேண்டும் என்று அழைத்தார்கள். தங்கள் பெயரை சொல்லாமல் இருந்தால், முத்திரையை ஒளித்து வைத்திருக்கும் கிணற்றிற்குத் தாங்களே அழைத்துச் செல்வதாகக் கூறினார்கள். அரசர் கொடுக்கும் பரிசோடு, தாங்களும் ஒரு பரிசை தருவதாகக் கூறினார்கள். அவர்கள் கூறியபடியே, தன்னுடைய மூக்கை மோப்பம் பிடிப்பது போலச் செய்து கொண்டே அவன் கிணற்றிற்கு வந்து சேர்ந்தான். முத்திரை கிணற்றின் அடியில் இருக்கிறது என்று கூறினான். அது போலவே இருக்கவே, அரசர் அவன் விருப்பப்பட்ட பரிசை தருவதாகக் கூறினார். தனக்குப் பதவி எதுவும் வேண்டாம் என்றும், மிட்டாயினால் செய்த போர்வை ஒன்று மட்டும் போதும் என்றும் சொல்லிவிட்டான். இரவில் போர்வைக்குள் அவனது மனைவி பேசிக் கொண்டே இருந்து தனது தூக்கத்தைக் கெடுப்பதை இதன் மூலம் தடுத்துவிடலாம் என்று நினைத்துக் கொண்டான்.

அவன் வேண்டுகோளை கேட்டு அரசர் ஆச்சர்யமடைந்தாலும், அவன் கேட்டது போலவே மிட்டாயினால் போர்வை ஒன்றை செய்து கொடுத்துவிட்டார். அவனும் அதை எடுத்துக் கொண்டு, வீடு திரும்பினான். அவனது

மனைவி, பெரும் பொருட்களையும், பெருமைகளையும் எதிர்பார்த்து காத்திருந்தாள். அவனும் தான் முத்திரையைக் கண்டு பிடித்து விட்டதாகவும், பதவிக்குப் பதிலாக மிட்டாய் போர்வையைக் கேட்டு பெற்றதையும் சொன்னான். கோபமடைந்த அவள், அவனைத் திட்டி தீர்த்தாள்.

அவன் அரண்மனையின் இருந்து சென்ற பின்னரே, அரசி அவனது திறமையைப் பற்றித் தெரிந்து கொண்டாள். தானும் அவனது இந்த அதிசய திறமையை நேரில் பார்க்க வேண்டும் என்று எண்ணி, அவனைத் திரும்பவும் அரண்மனைக்கு அழைத்தாள். மூடிய கூடையில், பூனை ஒன்றை பருத்தி போர்வையில் சுற்றி ஒளித்து வைத்தாள். அந்தக் கூடையை மோப்பம் பிடித்தே அதனுள்ளே என்ன இருக்கிறது என்று சொல்ல வேண்டும் என்று அவனிடம் கூறினாள். அவனும் கூடையை உற்று, உற்றுப் பார்த்தான். அதனுள்ளே என்ன வேண்டுமென்றாலும் இருக்கலாம் என்று தோன்றியது. கண்டுபிடிப்பது மிகவும் கடினம் என்றும், தன்னுடைய தலை அன்று கீழே இறங்க போகிறது என்ற முடிவிற்கு வந்தான். அங்கிருந்து தப்பித்து ஓடிவிட முடியுமா என்று பார்த்தான். எல்லாப் பக்கமும் வீரர்கள் இருந்தார்கள். எப்படி ஓடினாலும், அகப்படுவது உறுதி. தன்னுடைய சிக்கலான நிலையை எண்ணி, சத்தமாக 'மாட்டிக்கொண்ட பூனை சாவது உறுதி!' என்றான். ஆச்சரியமடைந்த ராணி, கூடையைத் திறந்து பார்த்தாள். போர்வையால் இறுக சுற்றியிருந்ததால், பூனை இறந்து போயிருந்தது. அரண்மனையில் இருந்த அனைவரும் அவன் கடவுளாகத்தான் இருக்க வேண்டும் என்றும், அவன் இருக்க வேண்டிய இடம் வானமே என்றும் சொல்லி, அவனைத் தூக்கி உயரே எறிந்தார்கள். அங்கிருந்து கீழே விழுந்த அவன், ஆயிரமாயிரம் துகள்களாக, பூமி முழுவதும் விழுந்து நொறுங்கி போனான். அந்தத் துகள்கள் எறும்புகளாக மாறின. இன்றுவரை, அதனாலேயே எதாவது தின்பண்டத்தை யாரும் வைத்திருந்தால், அதைத் தூரத்திலேயே மோப்பம் பிடித்து எறும்புகள் வந்து விடுகின்றன.



அடுத்து ஜின்ஷி தான் மருந்து கடை வைத்திருக்கும் தன்னுடைய மாமாவிடம் கேட்டக் கதையைச் சொல்வதாகக் கூறினான். அவர் அதை மருந்துகள் செய்ய மூலிகைகள், புலி எலும்பு, பாம்பு தோல், கரடி ஈரல், தேள், எட்டுக்கால் பூச்சி போன்றவற்றை வாங்குவதற்கு மலையடிவாரத்தில் இருக்கும் குடிசையில் கேட்டிருந்தார். மூலிகை வேர்களைச் சேகரிக்கும் ஒருவன் சொன்ன கதை அது.



சிக்கனமாக இருக்கத் தெரியாத மனிதன் ஒருவன், மனைவியின் தொந்தரவு பொறுக்கமுடியாமல், தற்கொலை செய்து கொள்ள எண்ணி அருகிலிருந்த காட்டிற்குச் சென்றான். அங்கே மரத்தில் கயிற்றைக் கட்டியவுடன், அவனுக்கு இருந்த தைரியம் எல்லாம் போய்விட்டது. எனவே, திரும்பவும் வீட்டிற்குத் திரும்பினான். அவன் மனைவியோ அவன் திரும்பாமலேயே இருந்திருக்கலாம் என்று சொல்லவே, அவன் திரும்பவும் காட்டிற்கே சென்று திரும்பவும் தற்கொலை செய்து கொள்ள முடிவெடுத்தான். அங்கே ஒவ்வொரு மரமாகச் சென்று, பல மணி நேரங்களைக் கடத்திக் கொண்டிருந்தான். அங்கிருந்த வினோதமான பள்ளத்தாக்கில் இருந்த மரம் ஒன்றின் கீழே புத்தரை போல அமர்ந்து யோசிக்க ஆரம்பித்தான். அந்த மரத்திலேயே தூக்கிட்டு இறந்து போவது என்று முடிவு செய்தான். சாப்பிடாமல் இருந்ததாலும். அலைந்து திரிந்ததாலும் களைப்படைந்திருந்த அவன் அப்படியே தூங்கிவிட்டான். அப்போது அங்கு வந்த குரங்கொன்று அவனைக் கண்டு, தன்னுடைய கூட்டத்தினரிடம் சென்று அவர்களது முன்னோர் ஒருவனைக் கண்டுபிடித்து இருப்பதாகக் கூறியது. அந்தக் குரங்கு கூட்டத்தின் மூத்தவர்கள் வந்து அவனை ஆராய்ந்து பார்த்துவிட்டு, அவன் அவர்களது முன்னோராகவே இருக்க வேண்டும் என்று முடிவுக்கு வந்தனர். அவனே அவர்களுக்கு அரசனாக இருக்க வேண்டும் என்றும் முடிவு செய்தன. தூங்கி கொண்டிருந்த அவனை அப்படியே தூக்கி காட்டிற்குள் சென்று, அங்கிருந்த மரம் ஒன்றில் அவனை அரசனை போல உட்கார வைத்தன. அவனைச் சுற்றி பழங்களும், வேறு உணவு பொருட்களும் வைக்கப்பட்டன. அவன் விழித்துப் பார்த்த போது, அவனுக்குத் தேவையானவை அனைத்தும் அங்கிருப்பதையும், கூப்பிட்ட குரலுக்கு ஓடிவர வேலையாட்கள் இருப்பதையும் கண்டு, அவனது வாழ்வில் வேறெதுவும் தேவையில்லை என்று நினைத்தான். குரங்குகள் அவனுக்குப் பல பரிசுகளைப் பல இடங்களில் இருந்தும் கொண்டு வந்து கொண்டே இருந்தன. தூர தேசங்களில் இருக்கும் பொக்கிஷங்களையும் கொண்டு வந்து சேர்த்தன. பல வருடங்களாக அந்தக் குரங்குகள் சேர்த்து வைத்திருந்த பல விலைமதிப்பில்லா பொருள்களையும் அவன் பார்த்து, கணக்கெடுத்து வைத்திருந்தான்.

குரங்குகள் வெளியே சென்றிருந்த ஒரு நாள், கையில் எடுக்க முடிந்த அளவிற்கு எடுத்துக் கொண்டு, காட்டை விட்டு வெளியேறி, தன்னுடைய வீட்டிற்கு வந்தான். அவனுடைய நிலையைக் கண்டு, அவனது மனைவி திரும்பவும் தனது அர்ச்சனையை ஆரம்பிக்கவே, அவள் கையில் ஒரு துண்டு தங்கத்தைக் கொடுத்து அவள் வாயை அடைத்தான். பல வருடங்கள் வசதியாக வாழும் அளவிற்கான செல்வத்தைப் பார்த்தவுடன், அவள் மிகவும் இனிமையானவள் ஆகி விட்டாள். அவளுடைய நெருங்கிய தோழியிடம், தன் கணவன் தற்கொலை செய்து கொள்ளச் சென்று, பெரும் பணக்காரனாக வந்ததைக் கூறினாள். அவள், அவளது கணவனையும் அப்படியே செய்யச் சொன்னாள், அவன் சென்று கேட்க, எப்படிக் குரங்குகள் அவனைத் தூக்கி சென்று அரசனாக்கின என்றும், அந்த இடத்திற்க்கு எப்படிச் செல்வது என்றும் அவன் விளக்கினான். அவளது தோழியின் கணவனும் அது போலவே, அதே மரத்தடியில் சென்று அமர்ந்தான். குரங்குகளின் வருகையை எதிர்பார்த்து, அவனை அவை தூக்கி சென்று அரசனாக்க போவதை எண்ணியவாறு அமர்ந்திருந்தான்.

அதற்குள் குரங்குகள், தங்களது பொருட்களைத் திருடி செல்லும் எவனும் தங்களுக்குத் தலைவனாக இருக்க முடியாது என்று பேசி முடிவு செய்திருந்தன. எனவே இந்த இரண்டாவது மனிதனை பார்த்த குரங்கு, கோபத்தில் இருந்த மற்ற குரங்குகளை அழைத்து வந்து, அவனை அடித்து, துவைத்துப் போட்டன.



**ஜின்ஷிக்கு அருகில் அமர்ந்திருந்த சென்ஷு, மென்சிஸ் கூறியதை இந்தக் கதை நினைவூட்டுவதாகக் கூறினாள். "தன்னுடைய இதயத்தை ஒப்படைக்காத எந்த இடத்திலும், யாரும் அரசனாக முடியாது."**

சாங்ஜி, "சூதாட்டத்தில் தோற்கவில்லை என்றால், அது அருமையான தொழில்; திருடிவிட்டு, கொல்லப்படவில்லை என்றால் அது தான் நல்ல தொழில்" என்ற பழமொழியை நினைவுபடுத்துவதாகச் சொல்லி, அடுத்தக் கதையை ஆரம்பித்தான்.



சிறுவன் ஒருவன் கையில் பணியாரத்துடன் இருந்தான். அருகில் இருந்த பெரிய பையன் அந்தப் பணியாரத்தை எப்படியாவது வாங்கி விடலாம் என்று நினைத்தான். கையில் இருந்து பிடுங்கினால் அவன் அழுது, அவனது பெற்றோரின் கவனத்தை ஈர்த்துவிடுவான் என்பதால், நயவஞ்சகமாகப் பிடுங்க முடிவெடுத்தான். அந்தச் சிறுவனிடம் சென்று, பணியாரம் நிலா போல இருந்தால் நன்றாக இருக்கும் என்றான். சிறுவனும், நிலா போல இருக்கும் பணியாரம் நன்றாக இருக்கும் என்றான். பெரியவனும், தான் அது போலப் பல பணியாரங்களைத் தின்று இருப்பதாகச் சொல்லவே, சிறுவனும் அவனது பணியாரத்தைக் கொடுத்தான். பெரியவன் பணியாரத்தைப் பெரிதாகக் கடித்து, அதைப் பிறைநிலா போல ஆக்கினான். சிறுவனோ இந்த மாற்றத்தை விரும்பாமல், தேம்பி அழ ஆரம்பித்தான். பெரியவன் தான் பிறை நிலாவை, பாதி நிலவாக ஆக்குவதாகக் கூறி, பிறையின் இரண்டு புறமும் கடித்து அதைச் சிறிய பாதி நிலவாக மாற்றினான். சிறுவனோ பணியாரம் மிகவும் சிறியதாக ஆகிவிட்டதைக் கண்டு திரும்பவும் அழ ஆரம்பித்தான். பெரியவன், அவனிடம் திரும்பவும் சிறிய நிலா அவனுக்குப் பிடிக்க வில்லை என்றால், கோளமாக, முழுநிலவாக மாற்றுவதாகக் கூறினான். மேலும் முழுநிலவிற்கு முன் அமாவாசை வரும் என்றும், பழைய நிலா மறைந்து விடும் என்றும் கூறினான். இதைச் சொல்லிவிட்டு மீதியிருந்த பணியாரத்தையும் வாயில் போட்டுக் கொண்டு, ஓடி விட்டான். சிறுவன் வரப்போகும் முழுநிலவிற்காகக் காத்திருந்தான்.



இப்போது இருபத்து ஏழு மாதங்களாகத் தன்னுடைய பெற்றோரின் மறைவை எண்ணி வருத்தப்படும் மாணவனின் முறை. அவன் தலையில் வெள்ளை துணி கட்டியிருந்தான். தலையில் இருந்த நீல தொப்பியின் மீது சாக்கு துணியை அணிந்திருந்தான். அவனுடைய உடைகள் பருத்தியில் மிகவும் மோசமாகத் தைக்கப்பட்டிருந்தது. எவ்வளவு வெள்ளை நிறம் அணிய வேண்டுமோ, அவ்வளவு மட்டுமே அணிந்திருந்தான். இறந்தவர்களைப் பற்றிப் பேசும் போது மெதுவாகச் சிரிப்பது மரபு; இரண்டாம் முறை பேசும் போது நகைச்சுவை துணுக்குகள் கூடச் சொல்லலாம். எனவே அவன் இப்போது மகிழ்ச்சியுடன் தன் கதையை ஆரம்பித்தான்.



ஒரு பணக்கார சீனப் பெண்மணிக்கு, மிகவும் முட்டாளான மகன் ஒருவன் இருந்தான். அவனுக்கு நல்ல குடும்பத்தில் இருந்து ஒரு பெண்ணைத் திருமணம் செய்து வைத்திருந்தாள். முதல் முறையாக அவன் அவனது மனைவியின் பெற்றோரின் வீட்டிற்குச் செல்ல வேண்டி இருந்தது. தன் மகனின் முட்டாள்தனத்தை அவர்கள் யாரும் கண்டறிந்து விடக் கூடாது என்பதற்காக, அவனுக்கு அங்கே எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்று சொல்லி கொடுத்தாள், அதே நேரத்தில் அவனிடம் எப்படியெல்லாம் கேள்வி கேட்பார்கள் என்று யோசித்து, அதற்கான பதிலையும் அவனுக்குச் சொல்லி கொடுத்தாள், அவன் கைகளில் மிகவும் விலையுயர்ந்த விசிறி ஒன்றை கொண்டு செல்வதால், அதைப் பற்றிக் கேட்க கூடும் என்று, அந்த விசிறியில் இருக்கும் அழகான ஓவியத்தைப் பற்றி யாரும் கேட்டால், "அது வெறும் கற்பனை மட்டுமே!" என்று பதில் சொல்ல வேண்டும் என்றாள். அவன் செல்லும் குதிரை மிகுந்த உயர்ந்த ரகத்தைச் சேர்ந்தது என்பதால், அது குறித்து அங்கிருக்கும் ஆண்கள் கேட்க கூடும் என்பதால், அதற்குப் பதிலாக மிகுந்த பணிவுடன் "ஓ! அந்த மிருகம் எங்கள் பண்ணையில் வளர்ந்தது. நன்றாகச் சுமை தூக்கும். நீங்கள் மதிக்கும் அளவிற்கு முக்கியமானது அல்ல!" என்று சொல்ல வேண்டும் என்றும் கற்றுக் கொடுத்தாள்.

அவனும் அவனுடைய மாமனாரின் வீட்டிற்குச் செல்லும் நாளும் வந்தது. உள்ளே நுழைந்தவுடன் அவனது மாமியார், அவனது தாயாரின் நலத்தைக் குறித்து விசாரித்தாள். அவன் பதிலுக்கு "ஓ! அந்த மிருகம் எங்கள் பண்ணையில் வளர்ந்தது. நன்றாகச் சுமை தூக்கும். நீங்கள் மதிக்கும் அளவிற்கு முக்கியமானது அல்ல!" என்றான். அந்தப் பதிலைக் கேட்டு அதிர்ச்சியடைந்த அவள் மெதுவாக "உங்கள் குடும்பம் மிகவும் நல்ல நாகரீகமான குடும்பம் என்றார்களே!" என்று முணுமுணுத்தாள். முட்டாளோ, தான் இரண்டாவது பதிலை முதலில் சொல்லிவிட்டதை எண்ணி, அவனது தாய் சொல்லிக் கொடுத்த முதல் பதிலை கூறினான்; "அது வெறும் கற்பனை மட்டுமே!" என்றான்.



"'உளுத்த கட்டையில் சிற்பம் செய்ய முடியாது.' என்கிறார் கன்பியூசியஸ்" என்றான் ஜின்ஷி.

அவர்களது ஆசிரியரும் "ஒன்பதடி கம்பைக் கொண்டு பத்தடியை எட்ட முடியாது." என்றார். எனவே அறிவிருப்பது போல நடித்தாலும், முட்டாளின் உண்மை நிலை தெரிந்துவிடும் என்று கூறினார். அவரது பக்கத்து வீட்டில் இருந்த ஒருவர், ஸ்மித் **(Smith)** என்பவர் சில வருடங்கள் வெளிநாடுகளுக்குச் சென்று விட்டு வீடு திரும்பினார். அப்போது அவரது பழைய நண்பர்களில் ஒருவரான பிரவுன் **(Brown)** என்பவர் அவர்களது கிராமத்தில் இருப்பதாகக் கேள்விப்பட்டு, அவரைச் சென்று பார்க்க வேண்டி, அவரது வீட்டிற்குச் சென்றார். அவர் சென்ற நேரம், அவரது நண்பர் வெளியே சென்றிருந்தார். அவரது மனைவி மட்டுமே வீட்டில் இருந்தார். அவளும் அவரைப் பற்றி விசாரித்து விட்டு, பிரவுன் வீடு திரும்பியவுடன் அவரது நண்பர் வந்ததைப் பற்றிக் கூறுவதாகக் கூறினாள். அதன் பின்னர் அவரது பெயரை விசாரித்தாள். அவரும் தன்னுடைய பெயர் ஸ்மித் என்றார். அவள் ஸ்மித் என்பதில் அவர் **'i'** எழுத்தை போடுவாரா அல்லது **'y'** எழுத்தை போடுவாரா என்று கேட்டாள். ஸ்மித்தும் தன்னுடைய பெயரை சரியான முறையில் எழுத சொல்லிவிட்டு திரும்பினார். இப்போது திரு. ஸ்மித் தன்னுடைய வீட்டில், தன் மனைவியிடம் இது குறித்துச் சொல்லிக் கொண்டிருந்தார். அவரது நண்பரின் மனைவி எப்படி அவரிடம் மிகவும் பணிவாக நடந்து கொண்டார் என்பது குறித்தும், எப்படி மிகுந்த நுண்ணறிவுடன்

தன் பெயரை சரியான முறையில் எழுதிக்கொண்டார் என்றும் கூறினார். இதனால் சற்று கோபமான அவரது மனைவி, அவர் தனது வீட்டில் பார்த்தாலே, எப்படிப்பட்ட அறிவான பெண் அங்கிருக்கிறாள் என்று தெரிந்து கொள்ளலாம் என்றும், அவரது நண்பனின் மனைவி ஒன்றும் அப்படி மிகவும் நாகரீகமாகத் தெரியவில்லை என்றும் சொன்னாள். மேலும், அவரது நண்பர் பிரவுன் வரும் போது, அவர் வெளியில் சென்றுவிட்டால், அவரது மனைவியின் நாகரீகத்தை அவர் தெரிந்து கொள்ளலாம் என்று கூறினால். திரு. ஸ்மித்தும் அதற்கு ஒத்துக் கொண்டு, மறுநாள் அவரது வீட்டின் உள்ளேயே ஒளிந்து கொண்டார். அவர்கள் எதிர்பார்த்தது போலவே திரு. பிரவுன் தன் நண்பரை காண வந்தார். அவரிடம் திரு. ஸ்மித் வெளியில் சென்றிருப்பதாகச் சொன்ன அவள், அவரது விவரங்களைச் சொன்னால் தான் அவரிடம் தெரிவிப்பதாகக் கூறினாள். அவர் தனது பெயர் பிரவுன் என்றவுடன், பதிலுக்கு அவள் பிரவுன் என்பதில் அவர் 'i' எழுத்தை போடுவாரா அல்லது 'y' எழுத்தை போடுவாரா என்று கேட்டாள்!

அப்போது அங்கிருந்த ஆசிரியரது ஒன்றுவிட்ட சகோதரர் ஒருவர், ஒரு முட்டாளோ அல்லது பெண்ணோ என்ன செய்வார்கள் என்றே சொல்ல முடியாது என்றார். அன்று காலை அவரது முடியை மழித்துக் கொண்டிருந்த போது, சிகை திருப்பவர் சொன்ன கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.



மிகவும் பணக்காரியான பெண்ணொருத்திக்கு ஒரு முட்டாள் மகன் இருந்தான். இன்னொரு பணக்கார குடும்பத்தில் அவனுக்குப் பெண் எடுத்திருந்தாள். மாப்பிள்ளை முதல் முறையாகப் பெண் வீட்டிற்குச் செல்ல வேண்டி வந்தது. அவனுடைய முட்டாள்தனத்தை வெளியில் காட்டி குடும்பத்திற்கு அவமானத்தை ஏற்படுத்தி விடுவானோ என்று பயந்தாள். அவனது மாமனார் வீட்டில் எப்படி நடந்து கொள்வது என்று அவனுக்குப் பாடம் எடுத்தாள். மணப்பெண்ணிற்கு அக்கா ஒருத்தி இருப்பதும், அவளது கணவன் மிகவும் பெரிய குடும்பத்தில் இருந்து வந்தவன் என்பதையும், மிகவும் நல்ல நாகரீகமானவன் என்றும் தெரிந்திருந்தாள். இறுதியாக, எல்லா விஷயங்களிலும் அவனது சகலை என்ன செய்கிறான், எப்படி நடந்து கொள்கிறான் என்பதைப் பார்த்து அதுபோலவே செய்ய வேண்டும் என்று சொல்லிக் கொடுத்தாள். மாமனாரது வீட்டில் இருந்து திரும்பியவுடன், அவள் சொன்னதெல்லாம் நினைவில் இருந்ததா என்றும், தான் கூறியபடியே நடந்து கொண்டானா என்றும் விசாரித்தாள். "ஆமாம்! அவர் செய்ததை எல்லாம் அப்படியே செய்தேன். அவரது வாயில் நுரை தள்ளுவதை மட்டும் செய்ய முடியவில்லை." என்றான். துரதிர்ஷ்டவசமாக, அவனது சகலைக்கு அன்றைய விருந்தின் போது வலிப்பு வந்து விட, நமது முட்டாளும் அதை அப்படியே செய்திருக்கிறான். அவர் கீழே விழுந்து வலிப்பினால் துடித்ததை அப்படியே செய்தாலும், அவரது வாயில் நுரை தள்ளியதை மட்டும் இவனால் செய்ய முடியவில்லை. இதில் இருந்தே நாம் இப்போதும் சொல்லும் "சகலையைப் போல இருக்க முயற்சிக்காதே!" என்ற பழமொழி வந்தது.



ஆசிரியர் இப்போது தூங்கும் நேரம் ஆகிவிட்டதால், மாணவர்களை அவர்களது தங்கும் அறைக்குச் செல்ல சொல்லி விட்டார். மறுநாள் மாலை திரும்பவும் அதே இடத்தில் கூடி கதை சொல்லலாம் என்றும் முடிவு செய்தனர்.

ஆசிரியர், அவரது சகோதரரோடு திருமண விருந்து ஒன்றிற்குச் செல்ல வேண்டி இருந்தது. எனவே அவர் சென்று விடவே, பள்ளி தங்கும் அறையில் மாணவர்கள் மட்டுமே இருந்தார்கள். மேசையில் அவர்களது உணவான சோற்றையும், தர்பூசணி விதைகளையும் ஜின்ஷி வைத்தான். அதன் அருகிலேயே தேநீரையும் வைத்து விட்டு, அடுத்தக் கதையை ஆரம்பித்தார்கள்.

தலையை மழித்துக் கொண்டிருக்கும் சிகை அலங்கரிப்பவர்.



காட்டில் ஒரு வயதான பெண்மணி தனது சிறு வயது பேத்தியோடு வாழ்ந்து வந்தாள். ஒரு நாள் காட்டில் அடுப்பெரிக்க விறகு பொறுக்கிக் கொண்டிருக்கும் போது அங்குக் கிடந்த பச்சை கரும்பையும் தன்னுடைய விறகு கட்டில் வைத்து கட்டிக் கொண்டாள். அப்போது அங்குக் காட்டுப்பன்றி வடிவில் வந்த ஒரு மந்திரவாதி அவளிடம் அந்தக் கரும்பை தன்னிடம் தந்துவிடும் படி கேட்டான். கிழவியோ தன்னுடைய வயதில் இன்னொரு முறை குனிந்து விறகோ, கரும்போ பொறுக்குவது கடினம் என்றும், மேலும் அவள் தன்னுடைய பேத்திக்காக அந்தக் கரும்பை எடுத்துச் செல்வதாகவும் சொல்லி மறுத்துவிட்டாள். பன்றியோ மிகுந்த கோபம் கொண்டு, அன்றிரவு அவளது வீட்டிற்கு வந்து அவளது பேத்தியை தின்றுவிடப் போவதாகச் சொல்லி காட்டிற்குள் சென்றது.

கிழவி தன்னுடைய வீட்டை அடைந்தவுடன், அதன் வாசலில் அமர்ந்து அழ ஆரம்பித்தாள். அவளால் பன்றியை எதிர்த்து போராட முடியாது என்று தெரிந்தே இருந்தாள். அவள் அப்படி அழுது கொண்டிருந்த பொழுது அங்கு ஊசி விற்கும் வியாபாரி ஒருவன் வந்தான். அவளிடம் எதற்காக அழுகிறாள் என்று கேட்டான். அவளும் நடந்ததைக் கூறவே, தன்னால் ஒரு பெட்டி ஊசி மட்டுமே அவளுக்கு உதவத் தர முடியும் என்று கூறினான், கிழவிக்கு ஒரு பெட்டி நிறைய ஊசியைக் கொடுத்துவிட்டுச் சென்றான். அவளும் அந்த ஊசிகளைத் தனது வீட்டுக் கதவின் கீழ்ப்பகுதியில் குத்தி வைத்துவிட்டு திரும்பவும் அழ ஆரம்பித்தாள். அப்போது அந்தப் பக்கமாகக் கூடையில் நண்டுகளோடு வந்தவன் ஒருவன், அவள் அழுகை சத்தத்தைக் கேட்டு, என்னவென்று விசாரித்தான். அவளும் நடந்ததைக் கூறவே, தன்னால் அவளுக்கு உதவி செய்வது இயலாது என்றும், இருந்தாலும் தன்னிடம் இருக்கும் நண்டுகளில் பாதியை தருவதாகக் கூறி, தந்துவிட்டுச் சென்றான். கிழவியும், நண்டுகளைத் தன்னுடைய தண்ணீர் பானையில் போட்டுவிட்டு, திரும்பவும் வாசலில் அமர்ந்து அழ ஆரம்பித்தாள். அந்தப் பகுதி வழியாகத் தன்னுடைய வயலில் இருந்து, தன்னுடைய காளையை ஓட்டிக் கொண்டு வந்த விவசாயி, அவள் கதையைக் கேட்டான். அவளுக்கு வரப்போகும் தீமையைத் தடுக்கத் தனக்கு வழி தெரியவில்லை என்றாலும், தன்னுடைய காளையை அன்றிரவு அவளுக்குத் துணையாக விட்டுச்செல்ல போவதாகக் கூறினான். அவளும் காளையை உள்ளே கொண்டு சென்று, அவளது படுக்கையில் ஒரு புறத்தில் அதைக் கட்டிவிட்டு, கொஞ்சம் வைக்கோலை போட்டுவிட்டு, திரும்பவும் வாசலில் அழ ஆரம்பித்தாள்.

அந்த வழியாக அப்போது சென்று கொண்டிருந்த கட்டியக்காரன் ஒருவன், அவள் அழுது கொண்டிருப்பதைப் பார்த்து, தன்னுடைய குதிரையில் இருந்து இறங்கி, என்னவென்று விசாரித்தான். அவள் கதையைக் கேட்டவுடன், அவன் உள்ளே இருக்கும் காளைக்குத் துணையாகத் தன்னுடைய குதிரையை விட்டுவிட்டுச் செல்வதாகக் கூறினான். கிழவியும் குதிரையைத் தன்னுடைய படுக்கையின் இன்னொரு பக்கம் கட்டி வைத்தாள். தனக்கு அன்றிரவு நடக்கப் போகும் தீமையை நினைத்து திரும்பவும் அழ ஆரம்பித்தாள். அந்தப் பக்கமாக வந்த சிறுவன் ஒருவன் அவளிடம் என்னவென்று விசாரித்தான். கிழவியும் தன்னுடைய கதையைக் கூறினாள். அவன் தன்னிடம் வைத்திருந்த சிறிய ஆமையை அவளிடம் கொடுத்தான். அவளும் அதையும் தன்னுடைய படுக்கையில் கட்டிவிட்டு, திரும்பவும் அழுது கொண்டிருந்தாள்.

அப்போது அந்தப் பக்கமாக வந்த சிலர், அவளிடம் என்னவென்று விசாரித்தார்கள். அவளும் தன்னுடைய நிலையைக் கூறவே, அவர்கள் தாங்கள் திருகை கற்களைச் செய்பவர்கள் என்றும், அவளுக்கு ஒரு திருகை கல்லை வேண்டுமானால் கொடுக்க முடியும் என்று சொல்லிவிட்டு, அவள் வீட்டின் பின்புறத்தில் அந்தத் திருகை கல்லை போட்டுவிட்டு சென்றனர். இன்னமும் சற்று நேரம் கழித்து, கைகளில் மண்வெட்டி, கோடரிகளோடு வந்த மனிதன் ஒருவன், கிழவியிடம் விசாரித்தான். கிழவி முதலில் இருந்து நடந்தது அனைத்தையும் கூறினாள். தான் வெறும் கிணறு வெட்டுபவன் என்றும், தான் அவளுக்கு உதவ நினைத்தாலும், அது முடியாது என்றும், வேண்டுமென்றால் கிணறு வெட்டி தருவதாகவும் கூறினான். அவளும் வீட்டிற்குப் பின்புறம் வெட்டித் தரச் சொல்ல, அவனும் வேகமாகக் கிணறு ஒன்றை வெட்டிவிட்டான்.

அவன் சென்ற பின்னர், திரும்பவும் அழுது கொண்டிருந்த அவளை, அங்கே வந்த காகிதம் விற்பவன் ஒருவன் பார்த்தான். அவனிடமும் கிழவி தன்னுடைய நிலையைச் சொல்லி அழ, அவன் அவளுக்கு ஒரு பெரிய வெள்ளை காகிதத்தைக் கொடுத்துவிட்டுச் சென்றான். அவளும் அதைக் கிணற்றின் மீது விரித்து விட்டாள்.

இரவும் வந்தது. கிழவி தன்னுடைய வீட்டு கதவை மூடிவிட்டு, அவளது பேத்தியை கட்டிலின் சுவர் பக்கமாகப் படுக்க வைத்துவிட்டு, தானும் அவளருகில் படுத்துக் கொண்டு, தன்னுடைய விதியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

நடு இரவில் பன்றியும் வந்தது. வந்த வேகத்தில் வேகமாகக் கதவில் மோதியது. கதவை உடைத்து விட்டாலும், அதில் இருந்த ஊசிகள் பன்றியை கடுமையாகக் காயப்படுத்தின. எனவே, வீட்டிற்குள் நுழைந்த போது, பன்றி மிகவும் தாகத்துடனும் இருந்தது. நேராக, தண்ணீர் பானையில் சென்று மூக்கை உள்ளே விட்டது. அதில் இருந்த நண்டுகள் அதன் மீசையைப் பிடித்து இழுத்தும், அதன் காதுகளைக் கடித்தும் வைத்தன. பன்றியும் பல முறை உருண்டு, புரண்டு தன்னைக் கடித்துக் கொண்டிருந்த நண்டுகளை உதறிவிட்டது. மிகுந்த கோபத்துடன் படுக்கையை நோக்கி பாய்ந்தது. அங்கிருந்த ஆமை அதன் வாலை கடித்துவிடவே, நேராகக் குதிரையின் கால்களுக்கு நடுவே சென்றது. குதிரை அதை எத்தவும், காளை அருகில் சென்று விழுந்தது. சிறிது நேரம், காளையும், குதிரையும் மாறி மாறி உதைக்கவே, அங்கிருந்து தப்பித்துச் சற்று இளைப்பாற வீட்டின் பின்புறம் சென்றது. அங்கு அழகாக விரிக்கப்பட்டிருந்த வெள்ளை காகிதத்தைக் கண்டு, அதன் மீது படுத்தது. அங்கிருந்து கிணற்றின் உள்ளே விழுந்தது. அது விழுந்த சத்தத்தைக் கேட்ட கிழவி, வேகமாக வந்து, திருகை கல்லை தூக்கி அதன் மீது போட்டுக் கொன்றுவிட்டாள்.



கதையைக் கேட்ட சென்ஷு, நம்மால் முடிந்ததைத் தேவைப்பட்டவர்களுக்குக் கொடுக்க முடிந்தால், நாம் கொடுத்தவற்றை அவர்கள் புத்திசாலித்தனமாக உபயோகித்தால், நமக்கு ஏற்படும் தீமைகளில் இருந்து தப்பித்துக் கொள்ளலாம் என்று கூறினாள். சாங்ஜி, நாம் மற்றவர்களுக்குப் பொருட்களைக் கொடுப்பது, நாம் நேரடியாகத் தொந்தரவில் ஈடுபடாமல் இருக்கவே என்று கூறினான். "என் அத்தை, அவளுடைய மகளுடைய கணவனான வெள்ளி ஆசாரியிடம் பத்துக் கிராம் எடையுள்ள வெள்ளியைக் கொடுத்து, தனக்கு அதை எந்தச் சேதாரமும், கலப்படமும் இல்லாமல் முழுமையாக நகையாக, குறைந்த செலவில் செய்து தருமாறு கூறினாள். அவரும் பதிலுக்கு "ஓ! அத்தை! அத்தை! சுத்தமான வெள்ளியில் எந்தக் கலப்படமும் இல்லாமல், சேதாரமும் இல்லாமல் ஆசாரி நகை செய்தால், அவனுடைய மனைவி இறந்துவிடுவாளாம்." என்றார். என் அத்தையும் "அப்படி என்றால், கொஞ்சத்தைத் திருடிக் கொள்ளுங்கள்." என்றாள்."

சென்ஷு உடனே "சிலரின் விரல்கள் உள்நோக்கி மட்டுமே மடியும்" என்பது போலவும், "ஒருவேளை உணவிற்கே வழியில்லாமல் இருக்கும் போது, இருப்பதில் நல்ல பாகத்தை உனது தாயிற்குக் கொடுக்க முடியாது." என்பது போலவும், மிகவும் அன்புடனும், தாராளத்துடனும் ஏழைகளால் செய்யப்படும் செயல்கள், கடவுள்களால் மிகுந்த கருணையுடன் பார்க்கப்படும் என்று கூறினாள். அவள் விளக்கை தூண்டி விட்டுவிட்டு, அடுத்தக் கதையைக் கூற ஆரம்பித்தாள்.



நேர்மையான, ஏழைப் பெண் ஒருத்தி ஒரு நாள், குளத்தில் துணிகளைத் துவைத்துக் கொண்டிருந்தாள். அப்போது, வேட்டைக்காரன் அம்பால் தாக்கப்பட்ட பறவை ஒன்று, அவளுக்கு முன்னே தண்ணீரில் விழுந்ததைப் பார்த்தாள். அவள் அந்தப் பறவையை எடுத்துக் கொண்டு, தன்னுடைய குடிசைக்கு எடுத்து சென்று, அதற்கு மருந்திட்டு, அதன் காயங்கள் சரியாகும் வரை நல்ல முறையில் கவனித்து வந்தாள். அதன் காயங்கள் முழுவதுமாகச் சரியானவுடன், பறவை பறந்து சென்று விட்டது. சில நாட்கள் கழித்துத் திரும்பிய பறவை, அவள் முன்னே ஒரு விதையைப் போட்டுவிட்டுச் சென்றது. அந்தப் பெண்ணும், விதையைத் தன் வீட்டின் பின்னே விதைத்து வைத்தாள். அந்த விதையில் இருந்து துளிர்த்த இலைகளைக் கண்டு, அவை முலாம் பழ விதை என்று கண்டு கொண்டாள். அது வளர்வதற்குத் தேவையான எல்லாவற்றையும் அவள் செய்து வந்தாள். பல நாட்கள் கழித்து அதில் பழம் ஒன்று பெரிதாக வரத்தொடங்கியது.

அந்த வருடம் முடியும் நேரத்தில், அந்தப் பெண்ணால் அவளுடைய கடன்களைத் திரும்பக் கொடுக்க இயலவில்லை. அத்தோடு அவளது ஏழ்மையும் சேர்ந்து கொள்ள, அவள் உடல்நலம் குன்றியது. ஒரு நாள் அவள் களைப்பாக அவளது வீட்டின் வாசலில் அமர்ந்திருந்த பொழுது, அவள் முலாம் பழம் கனிந்து, பெரிதாக வளர்ந்திருப்பதைப் பார்த்தாள். சற்று மகிழ்ந்த அவள், அதை ருசி பார்க்க முடிவு செய்தாள். கத்தியால் பழத்தை, செடியில் இருந்து வெட்டி எடுத்த போது, அதிலிருந்து சத்தம் எழும்பியதை ஆச்சர்யத்தோடு கேட்டாள். அதை இரண்டாக வெட்டவும், அதில் இருந்து வெள்ளி, தங்க நாணயங்கள் விழுந்ததை ஆச்சர்யமும், மகிழ்ச்சியும் ததும்பப் பார்த்தாள். அந்த நாணயங்களைக் கொண்டு, அவளுடைய கடன்களை எல்லாம் அடைத்துவிட்டு, பல நாட்களுக்குத் தேவையான உணவு பொருட்களையும் வாங்கினாள்.

அவளுடைய வீட்டிற்கு அருகில் இருந்தவர்களில், ஒரு பெண்மணி மிகவும் தந்திர குணம் கொண்டவள். தனது பக்கத்து வீட்டுப் பெண் தீடீர் என்று பணக்காரி ஆனது எப்படி என்பதை அவளிடம் தந்திரமாகப் பேசித் தெரிந்து கொண்டாள். தானும் அது போலப் பணக்காரி ஆவதற்கு எந்தத் தடையும் இல்லை என்று நினைத்த அவள், குளத்திற்குச் சென்று துணி துவைக்க ஆரம்பித்தாள். அந்தப் பக்கமாக வரும் பறவைகளைக் கூர்மையாகக் கவனிக்க ஆரம்பித்தாள். ஆனால் எந்தப் பறவையும் தானாகக் கீழே விழாமல் போகவே, தானே நிலைமையைச் சரி செய்ய முடிவு செய்தாள். அடுத்த முறை பறவைகள் அவள் பக்கமாகப் பறந்த போது, அவற்றில் ஒன்றை அடித்துக் கீழே வீழ்த்தினாள். அந்தப் பறவையை எடுத்துக் கொண்டு வீட்டிற்குச் சென்று, அதன் சிறகுகள் சரியாகும் வரை கவனித்து வந்தாள். முன் போலவே, பறவை சிறகுகள் சரியானவுடன் பறந்து சென்றுவிட்டு, விதை ஒன்றுடன் வந்து சேர்ந்தது. அந்தப் பெண்ணும் விதையை விதைத்து, அதைக் கவனமாக வளர்த்து வந்தாள். அதுவும் நன்றாக வளர்ந்து, அதில் இருந்து பழம் ஒன்றும் தோன்ற ஆரம்பித்தது. அவளுக்குக் கிடைக்கப் போகும் செல்வத்தை எண்ணி, அவள் நல்ல உணவு, விலையுயர்ந்த ஆடைகள் என்று கடன் வாங்கி நன்றாக வாழ்த்து வந்தாள். பழமும் மிகவேகமாக வளர்ந்து வந்தது. மிகவும் பெரிதாக இருந்த அதை அசைத்தால், சத்தமும் கேட்டது. வருட இறுதியில், அதைச் செடியில் இருந்து வெட்டி, நாணயங்களை எதிர்பார்த்து இரண்டாகப் பிளந்தாள். ஆனால், அதில் இருந்து இரண்டு பிச்சைக்காரர்கள் வெளியே வந்து, அவர்கள் வாழும் வரை, அவள் வீட்டில் மட்டுமே சாப்பிடப்போவதாகக் கூறினார்கள்.



சாங்ஜி அனைவர்க்கும் தேநீர் ஊற்றித் தந்தான். நல்ல எண்ணத்தைப் போலவே புத்திசாலித்தனமும் ஒருவரின் நலனிற்கு முக்கியம் என்று நினைப்பதாகக் கூறினான். ஜின்ஷி அவனது தந்தையின் ஒன்றுவிட்ட சகோதரர் போல நிலைமையைப் பக்குவமாகக் கையாள தெரிவது, நல்ல முடிவுக்குத்

தேவை என்று கூறினான். அவரது மனைவி இறந்த பின்னர், அவனது தந்தையின் சகோதரர் தனது வயதான காலத்தை அவரது மருமகளுடன் கழித்து வந்தார். அவரது மருமகளோ நன்றாக உணவை உண்பதற்கு விரும்புபவள். ரகசியமாக உணவு பொருட்களை வாங்கி வந்து, சமைத்து அவள் மட்டும் சாப்பிடுவாள். ஒருநாள் அவர், அவரது மருமகள் பெரிய மீன் ஒன்றை வாங்குவதைப் பார்த்தார். ஆனால் அன்றைய உணவில் மீன் இல்லாமல் இருக்கவே, அவள் மட்டும் அதைச் சாப்பிட்டிருக்க வேண்டும் என்பதைத் தெரிந்து கொண்டார். அவர் ஒரு சிறிய பாடலை எழுதி அதன் வீட்டின் கூரையின் மீது ஒளித்து வைத்துவிட்டார். மறுநாள் அவள் சந்தைக்குச் சென்ற பின்னர், அவரும் கூரையில் ஏறி இருந்து கொண்டார். அவள் சந்தையில் இருந்து திரும்பும் பொழுது, வானில் இருந்து விழுவது போல அந்தத் தாளை கீழே போட்டார். அவளும் ஆச்சர்யத்துடன் அதை எடுத்து பார்த்தாள். அவளுக்குப் படிக்கத் தெரியாததால், அவர் திரும்பி வரும் வரை காத்திருந்தாள். அவர் நண்பகலில் வீட்டிற்கு வந்த போது, வானில் இருந்து அந்தத் தாள் விழுந்ததாகவும், அதில் எழுதியிருப்பதை வாசித்துக் காட்டும் படியும் கூறினாள். அவரும் ஆச்சர்யப்படுவது போலக் காட்டிக் கொண்டு வாசித்தார்.

> "[illegible] [illegible]
>
> [illegible] [illegible];
>
> [illegible] [illegible] [illegible].
>
> [illegible] [illegible] [illegible]."

உடனடியாக அவரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்ட அவள், அவளுடைய தவறுகளை ஒப்புக் கொண்டு, இனி தனியாகச் சமையல் செய்யமாட்டேன் என்றும் கூறிவிட்டாள்.

சாங்ஜி இப்போது அங்கிருந்த மாணவர்களிலேயே சிறியவனைக் கதை சொல்ல அழைத்தான். அவனும் கதையைச் சொல்ல ஆரம்பித்தான்.



பிறப்பில் இருந்தே குருடாக இருந்த சிறுவன் ஒருவனும், தன் வாலிபத்தில் குருடாகப் போன இளைஞன் ஒருவனும் நட்புடன் இருந்தார்கள். சிறுவனும், இளைஞனிடம் பல கேள்விகளைக் கேட்டுக் கொண்டே இருப்பான். ஒரு நாள் அவன் வானம் எப்படி இருக்கும் என்று கேட்டான். இளைஞனும் அவனிடம் வானம் நீலிப்பூவை போல நீலமாக இருக்கிறது என்றான். சிறுவனும் நீலிப்பூவை தொட்டுப் பார்த்து "வானம் சாப்பிடும் பொருள் போல இருக்கிறது!" என்று எண்ணிக் கொண்டான்.

இன்னொரு நாளும் அதே கேள்வியை எழுப்பினான். இளைஞன், சிறுவனின் மிகச்சிறந்த உடையைப் போல நீலமாக இருக்கும் என்றான். சிறுவனின் மிகச்சிறந்த உடை, எப்போதும் கஞ்சி போடப்பட்டு, எப்போதேனும் மட்டுமே உடுத்தப்படுவதால், நல்ல வாசனையுடனேயே இருக்கும். அவனும் எப்போதும் அதன் வாசனையைக் கொண்டே அதைக் கண்டுபிடிப்பான். எனவே அவன் "வானம் வாசமாக இருக்கிறது!" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்.

இன்னொரு நாள், சூரியன் எப்படி இருக்கும் என்றான். இளைஞன் அதற்குச் சூரியன் வெண்கலம் போல மிகவும் பளிச்சென்று இருக்கும் என்றான். சிறுவனும் வெண்கலத்தைத் தொட்டுப்பார்த்து "சூரியன் கடினமாகவும், வழுவழுவென்றும் இருக்கிறது!" என்றான். இன்னமும் சூரியனைப் பற்றிச் சொல்ல சொல்லவே, இளைஞன் சூரியன் பெரிய, புதிய மணியைப் போல இருக்கும் என்றான்; அவனும் மணி ஒன்றை தொட்டுப் பார்த்து "சூரியன் வட்டமாக இருக்கிறது. தொட்டால் சத்தம் கேட்கிறது!" என்றான்.

ஒருநாள் அவன் தெரு வழியே சென்று கொண்டிருந்த போது, கால் தடுக்கி அங்குக் கிழவி ஒரு சட்டியில் காய வைத்திருந்த உருளைக்கிழங்கு மாவில் விழுந்தான். தட்டியவுடன், சட்டி சத்தம் எழுப்பியது. மாவு மேலே பறந்து, அவன் மேலே விழுந்தது; "காப்பாற்றுங்கள்! நான் வான மண்டலத்தில் விழுந்துவிட்டேன்! காப்பாற்றுங்கள்!" என்று கத்தினான்.



"என் அம்மாவை ஒரு கதை சொல்ல சொன்னேன்." என்று அடுத்து அமர்ந்திருந்த சிறுவன் ஆரம்பித்தான். "அவன் எங்கள் வீட்டு குளியல் தொட்டியை சரி செய்ய வந்திருந்தவன் சொன்ன கதையைச் சொன்னாள். குடும்பமும் குளியல் தொட்டியை போன்றது; ஒன்றாக இருக்க வேண்டும் என்றால், எல்லாப் பாகங்களும் அதன் அதன் இடங்களில் சரியாகப் பொருந்த வேண்டும். அதன் ஒவ்வொரு பாகமும், இன்னொரு பாகத்தைத் தாங்கி பிடித்துக் கொண்டிருக்கிறது. அதில் ஒரு பாகமும் தன்னுடைய வேலையைச் செய்யவில்லை என்றால், தொட்டி விழுந்து விடும். அப்படியே குடும்பமும் அனைவராலும் ஒன்றாகத் தாங்கி பிடிக்கப்படுகிறது. மூன்றாவது மகளே சரியானவள் என்று நீங்கள் இந்தக் கதையைக் கேட்டவுடன் சொல்வீர்கள் என்று சொல்லிவிட்டு, கதையை ஆரம்பித்தான்."

[illegible]



ஒரு ஊரில் ஒருவர் தனது மூன்று மகள்களுடன் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தார். அவர்கள் மூவரும் நன்றாகத் துணி வேலைப்பாடுகள் செய்வார்கள். தினமும் வேலையில் இருந்து திரும்பும் போது, அவனது மகள்களுக்குப் பூக்களை எடுத்துக் கொண்டு வருவார். அவற்றை அவர்கள் தங்களது துணி வேலைப்பாடுகளுக்குப் பயன்படுத்திக் கொள்வார்கள். ஒருநாள், அவர் வீடு திரும்பும் வழியில் பூக்கள் இருக்கவே இல்லை. அப்படியே அவர் அருகில் இருந்த காட்டிற்குள் நுழைந்துவிட்டார். அங்கிருந்த காட்டுப்பூக்களைத் தேடிக் கொண்டே, அவர் அங்கிருந்த நாகதேவனின் தோட்டத்திற்குள் தெரியாமலேயே நுழைந்து விட்டார். அங்கு வந்த நாகதேவன், அவரைச் சுற்றி வளைத்து இறுக்கி, தன் தோட்டத்தில் அனுமதி இல்லாமல் நுழைந்ததற்காக அவரை மிகவும் மோசமாகத் திட்டியது. அவரும், தான் தன்னுடைய மகள்களுக்காகவே சில பூக்களைப் பறிக்க வந்ததாகவும், தான் பூக்களைக் கொண்டு செல்லவில்லை என்றால் அவர்கள் மிகுந்த ஏமாற்றம் அடைவார்கள் என்றும் சொன்னார். நாகதேவனும் அவரிடம் அவரது மகள்கள் எண்ணிக்கை, பெயர், வயது என எல்லா விவரங்களையும் கேட்டுக் கொண்டது. அவர்களில் ஒருவரை தனக்குத் திருமணம் செய்துவிக்கச் சம்மதித்தால் மட்டுமே அவரைத் தன் பிடியில் இருந்து விடுவதாகக் கூறியது. நாகதேவனின் மனதை மாற்ற அவரும் பலதும் கூறி பார்த்தார். ஆனால், நாகதேவன் தன்னுடைய ஆசையை மாற்றிக் கொள்ளவே இல்லை. தானில்லாமல் தன் மகள்கள் துயருற வேண்டும் என்பதை எண்ணிய அவர், இறுதியாக நாகதேவனின் வேண்டுதலுக்குத் தன்னுடைய சம்மதத்தைத் தெரிவித்தார். வீட்டிற்கு வந்த அவரால் எந்த உணவையும் உண்ண முடியவில்லை. தேவதைகள் தங்களுடைய இச்சை நிறைவேற விட்டால், எப்படியாகப் பழிவாங்கும் என்று தெரிந்திருந்ததால், தான் தன்னுடைய உறுதியை நிறைவேற்ற முடியாவிட்டால் என்னவாகும் என்று எண்ணி வருந்திக் கொண்டே இருந்தார்.

சில நாட்கள் கழிந்தன. அவரது மகள்கள் அவருக்காக விதவிதமாகத் தினமும் சமையல் செய்தார்கள். ஆனால் அவர் சாப்பிட மேசைக்கு வருவதே இல்லை. எப்போதும் பெரும்துயர் கொண்டவர் போல வருத்தத்துடன் இருந்தார். அவரது இந்த நடவடிக்கையை எண்ணி அவர்கள் கூடி பேசினார்கள். அவர்களில் யாரோ ஒருவர் மீதுதான் அவர் வருத்தத்தில் இருக்கவேண்டும் என்றும், எனவே அவர்கள் ஒவ்வொருவராகச் சென்று அவர்கள் தந்தையை உண்ண வரச்சொல்ல வேண்டும் என்று முடிவு செய்தார்கள். மூத்தவள் முதலில் சென்று அவர் சாப்பிடாமல் இருப்பதால் அவள் மிகவும் வருத்தத்தில் இருப்பதாகவும், அவர் சாப்பிட வேண்டும் என்றும் கூறினாள், அவரும் பதிலுக்கு நடந்ததைக் கூறி, அவள் நாகதேவனைத் தனக்காகத் திருமணம் செய்து கொண்டால், அவரது கவலை நீங்கிவிடும் என்றும், தான் சாப்பிடவும் தடையில்லை என்றும் கூறினார். அவள் உடனடியாக இதற்கு மறுத்துவிட்டாள். எப்போது அவரது கவலை இன்னமும் அதிகமானது.

இரண்டாவது மகளும் நேரில் சென்று, அவரை உணவை உண்ண சொல்ல, அவர் மேலே சொன்னது போலவே பதில் கூறினார். இவளும் உடனடியாக மறுத்துவிட்டாள். அடுத்து அவரது இளைய மகள் வந்து அவரை உணவை உண்ணுமாறு வேண்டிக் கொண்டாள். அவர் மறுபடியும் கதையைச் சொல்லவே, இளையமகள், சரியாக உணவை உண்டு, அவர் உடல்நிலையை நன்றாகப் பார்த்துக் கொண்டால், தான் நாகதேவனைத் திருமணம் செய்து கொள்வதாகக் கூறினாள். அப்போதிருந்து அவர் திரும்பவும் உண்ண ஆரம்பித்துவிட்டார். ஆனாலும் நாட்களைக் கடத்திக் கொண்டிருந்தார். அப்போதைக்கு அவரது குடும்பத்திற்கு எந்த ஆபத்தும் இல்லாமல் இருந்தது.

ஆனால், ஒரு நாள் காலை, அந்தப் பெண்கள் தங்களது துணி வேலைப்பாடுகளைச் செய்து கொண்டிருந்த போது, அந்த அறைக்குள் ஒரு தேனீ நுழைந்து பாடியது;

"[illegible]

?"

தேனீ எப்போதெல்லாம் கீழே அமர்ந்ததோ, அப்போதெல்லாம் அந்தப் பெண்கள் அதைத் தங்கள் கைகளில் வைத்திருந்த ஊசியால் குத்தினார்கள். தேனீயும் தன் உயிருக்கு பயந்து ஓடியது. மறுநாள் காலை, இரண்டு தேனீக்கள் வந்து, அதே பாடலை பாடின. மூன்றாவது நாள் காலை, மூன்று தேனீக்கள் வந்தன. தினமும் தேனீக்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே சென்றது. இறுதியில், அந்தப் பெண்களால் தேனீக்களைத் தங்களது ஊசிகளால் குத்த முடியவில்லை. தேனீக்கள் கொட்டுவதையும் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

இறுதியாக, மூன்றாவது மகள், தன்னுடைய குடும்பத்தைத் தேனீக்களிடம் இருந்து காப்பாற்றுவதற்காக, தன்னுடைய மணமகனிடம் செல்லப்போவதாகத் தெரிவித்தாள். தேனீக்கள் அவளுடன் துணையாக, சாலையில் வந்தன. அவளைக் காட்டிற்குள் அழைத்துச் சென்று, நாகதேவன் அவளுக்காகக் கட்டியிருந்த மாளிகைக்கு அழைத்துச் சென்றன. மாளிகையில் பெரிய அறைகளும், அவற்றில் ரத்தினங்கள் பாதிக்கப்பட்ட மரச்சாமான்களும், பட்டுத்துணிகளால் நிரம்பிய பெட்டிகளும், பச்சைக் கல் கூடைகளும், தங்க நகைகளும் நிரம்பி இருந்தது. நாகதேவனும் அழகிய கண்களும், அருமையான குரலும் கொண்டவராக இருந்தார். ஆனால் அவரது தோல் கொப்புளங்களாக இருந்தது. அவரைத் தினமும் பார்க்க வேண்டியதை நினைத்து, அவள் பயந்தாள்.

அவர்கள் இருவர் மட்டுமே கலந்து கொண்ட திருமண விருந்து முடிந்த பின்னர், அவள் நாகதேவனிடம், தனக்காக அவர் எழுப்பி இருக்கும் மாளிகையையும், அதன் வசதிகளையும் தான் மிகவும் ரசிப்பதாகவும், அவள் தன்னுடைய கடமைகளைச் சரியாகச் செய்து விடுவதாகவும் கூறினாள். பல நாட்கள் கழிந்தன. அவள் வீட்டை சுத்தமாக வைத்திருந்தாள். அவளுடைய கணவனுக்குத் தேவையான எல்லாவற்றையும் சரியாகச் செய்து வந்தாள். நாகதேவனும் அவளை எந்தக் குறையும் இல்லாமல் பார்த்துக் கொண்டார். அவள் இல்லாத நேரங்களில் அவளை எண்ணி ஏங்கினார். அவள் விரும்பியதை எல்லாம் நடத்திக் கொடுத்ததாலும், அவளை நன்றாகப் பார்த்துக் கொண்டதாலும் அவளும் அவருடன் இருப்பதை விரும்ப ஆரம்பித்தாள். நாகதேவன் இல்லாத நேரங்களில் தனிமையாகவும் உணர ஆரம்பித்தாள். அவளுக்கு வீட்டு வேலைக்குத் துணையாக யாரும் இல்லாததால், ஒரு நாள் கிணறு வற்றி போய் விடவே, தண்ணீர் எடுக்க வேண்டி காட்டிற்குள் சென்றாள். சற்றுத் தூரத்தில் இருந்த சுனை ஒன்றில் இருந்து மெதுவாகத் தண்ணீரை எடுத்துக் கொண்டு மாளிகைக்குத் திரும்பினாள். அப்போது மாளிகையில் நாகதேவன் தண்ணீர் வேண்டி தவித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். அவரைக் காப்பாற்றும் ஆர்வத்தில், நாகதேவனைத் தண்ணீரில் மூழ்க செய்து விட்டாள். அதிலிருந்து நாகதேவன் ஒரு வலிமையும், அழகும் கொண்ட மனிதனாக வெளியே வந்தார். அவர் மீதிருந்த சாபம், அவளது அன்பாலும், முயற்சியினாலும் நீங்கியது. அதன் பின்னர், அவள் தனது அழகான கணவனோடு, தனது வீட்டிற்குச் சென்று, அங்கிருப்பவர்களுக்குப் பல பரிசுகளைக் கொடுத்து மகிழ்ந்தாள்.

ΔΔΔ

**சென்ஷு "ஆமாம்! உண்மையான அன்பு எதையும் மாற்றும் சக்தி படைத்தது. 'அசாதாரணமான அன்பு வெறுப்பை ஒழித்துவிடும்' என்று சொல்வார்கள். ஆனால், அறிவும், புத்திசாலித்தனமுமான அன்பு மிருகத்தையும் மனிதனாக மாற்றிவிடும். இப்படிப் பேசத்தெரிந்த எல்லா மிருகங்களும் இந்த மாதிரி மாற்றமடைய முடியுமா என்பதுதான் சந்தேகமாக இருக்கிறது." என்றாள்.**

**ஜின்ஷி பதிலுக்கு "மிருகங்கள் மட்டும் மனிதர்களின் மொழியைப் பேசி, புரிந்து கொள்வதில்லை. மனிதர்களும் மிருகங்களின் மொழியைப் புரிந்து கொள்வதுண்டு. பழைய காலத்தில் நடந்த கதையைச் சொல்கிறேன். கேள்!" என்று ஆரம்பித்தான்.**

# [illegible]?

காங் ஹியா சியாங் என்னும் சிறுவன், தனது பெற்றோருடன் மலைகளில் வாழ்ந்து வந்தான். அவனுக்குப் பறவைகளின் மொழி தெரிந்திருந்தது. ஒரு நாள் மாலை, அவன் புத்தகங்களை வாசித்துக் கொண்டிருந்த நேரம், அவனது சன்னலின் அருகில் இருந்த மரத்தில் பறவைகள் கூட்டமாக இறங்கின.

"[illegible]! [illegible]

[illegible];

[illegible],

[illegible]! [illegible]!"

என்று பாட்டு பாடின. காங் ஹியா சியாங்கும் சென்று, அந்தக் கிடாவை தூக்கிக் கொண்டு வந்து, அன்றிரவிற்கே அதைச் சமைத்தான். மறுநாள் காலை ஆடு மேய்ப்பவன் ஒருவன் அங்கே வந்தான். தன்னுடைய ஆடு ஒன்று காணாமல் போய்விட்டதாகவும், அதன் ரத்தத்திட்டுகளைத் தொடர்ந்து வந்ததில், அவனது வீட்டிற்கு வந்ததாகவும் தெரிவித்தான். காங் ஹியா சியாங், முந்தைய தினம் தான் கிடாவை கொண்டு வந்ததாகவும், ஆனால் அதை நாய்கள் கொன்றன என்றும், தான் அதன் இறப்பை பற்றியும், அது கிடந்த இடத்தையும் பற்றிப் பறவைகள் மூலம் தெரிந்து கொண்டதாகக் கூறினான். அவன் நல்ல கதை கட்டுவதாகச் சொல்லி, அவனைச் சிறையில் தள்ளினார்கள்.

அவனை நீதிபதிக்கு முன்னே கொண்டு வரப்பட்டு, வழக்கு நடைபெறுவது வரை அவன் சிறையில் காத்திருக்க வேண்டி இருந்தது. அப்போது, சிறையில் இருந்த சன்னலுக்கு வந்த பறவை ஒன்று,

"[illegible],

[illegible], [illegible], [illegible],

[illegible], [illegible]!"

என்று பாடியது.

காங் ஹியா சியாங் உடனடியாகச் சிறை காவலாளியை அழைத்து, மேற்கெல்லையில் ஏற்படப்போகும் ஆபத்தைப் பற்றிக் கூறினான். உடனடியாக அதை நீதிபதியிடமும் கூற வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். இதைச் சிறைக்காவலாளியால் நம்ப முடியவில்லை என்றாலும், அவன் பறவைகள் மொழியைப் புரிந்து கொள்வதைச் சோதனை செய்து பார்த்துவிட முடிவு செய்தான். சிறிது அரிசியை எடுத்து, அதில் பாதியை சக்கரை கலந்த நீரிலும், மீதியை உப்பு கலந்த நீரிலும் நனைத்து, காங் ஹியா சியாங் இருந்த சிறையின் கூரையில் பரப்பி வைத்தான். காங் ஹியா சியாங்கிடம், கூரையில் ஏன் பறவைகள் கூச்சலிட்டுக் கொண்டிருக்கின்றன என்று கேட்டான். காங் ஹியா சியாங் உடனடியாக, கூரையில் இருக்கும் பறவைகள், மற்ற பறவைகளை நோக்கி,

"[illegible]! [illegible]!

[illegible];

[illegible], [illegible];

☒☒☒☒☒☒☒☒;☒☒☒☒☒ ☒☒☒☒☒☒☒;☒"

என்று பாடுகின்றன என்றான்.

காங் ஹியா சியாங்கிற்குப் பறவைகளின் மொழி தெரியும் என்பதைச் சிறை காவலாளி புரிந்து கொண்டான். எனவே, வேகமாகச் சென்று நீதிபதியிடம் வரப்போகும் ஆபத்தைக் குறித்துத் தெரிவித்தான். அவரும் உடனடியாக ராணுவ தலைவர்களுக்குச் செய்தி அனுப்பி, மேற்கு எல்லையைக் காக்க வேண்டி கூறினார். காங் ஹியா சியாங் கூறிய செய்தி உண்மையே என்பது சிறிது காலத்திலேயே தெரிந்துவிட்டது. மேற்கெல்லையும் சரியான முறையில் காப்பாற்றப்பட்டது. காங் ஹியா சியாங் நாட்டிற்குச் செய்த சேவையை அறிந்த மன்னரும், அவனை இளவரசர்கள் படிக்கும் பள்ளியில் படிக்க வரும் படி செய்தார். அவனது கல்வி முடிந்தவுடன், அவனை மேலான பதவி கொடுத்து தன்னருகிலேயே வைத்துக் கொண்டார்.

∆∆∆

சாங்ஜி "பறவைகள் பற்றிப் பேசியதும், எனக்கு ஆசிரியர் கலந்து கொண்டிருக்கும் திருமண விருந்து நடக்கும் வீட்டின் அருகில் சென்று, அங்கு நடக்கும் இசை நிகழ்ச்சியைக் கேட்க வேண்டும் என்று தோன்றுகிறது. இசை கலைஞர்களில் ஒருவர் வைத்திருக்கும் குழலில் குயிலோசை வருகிறதாம், இன்னொன்றில் யானையின் பிளிறல் கேட்குமாம். அது போக, அங்கே பல விதமான இசைக்கருவிகளும் இருக்கின்றனவாம்." என்றான்.

அதன் பின்னர், மாணவர்கள் எல்லோரும் தங்களது வீடுகளுக்குத் திரும்பினார்கள். வழியில் திருமண விருந்தில் நடந்த இசை நிகழ்ச்சியைக் கேட்டுக் கொண்டனர். மணமகனின் வீட்டின் அருகே இருந்த பொம்மலாட்ட நிகழ்ச்சியையும் கூட்டத்தோடு நின்று பார்த்தனர்.

மறுநாள், சென்ஷுவின் தந்தையான திரு. ஹாடின், அவளை அவளது தாயின் கிராமத்திற்கு அழைத்துச் செல்ல வந்தார்.

அவளும் தன்னுடைய பெண் உடைகளை அணிந்து கொண்டு, அவளது பாட்டியின் வீட்டில் இருந்து, நாற்காலி போன்ற பல்லக்கில் அமர்ந்து கொண்டு தனது பயணத்தைத் துவங்கினாள். நகரை விட்டு வெளியே வந்தவுடன், அவர்களது பாதை அரிசி, கரும்பு, பருத்தி, உருளைக்கிழங்கு போன்றவை பயிரிட பட்டிருக்கும் வயல்கள் மற்றும் தோட்டங்கள் வழியே சென்றது. பல சிறிய வீடுகள் இருக்கும் கிராமங்களையும் கடந்தார்கள். இறுதியாக, அவள் சிறுமியாக விறகு பொறுக்கி கொண்டிருந்த பைன் மரக்காடுகள் இருந்த மலையின் அடிவாரத்தைச் சென்றடைந்தனர். அவளது தாயின் கிராமம், பன்றிகள், பறவைகள், குழந்தைகள் என்று எந்த மாற்றமும் இன்றி அப்படியே இருந்தது. அவளது தாய், அவர்களது வீட்டின் வாயிலில் அவளை வரவேற்றாள். வாயில் முழுவதும் தீய சக்திகளைத் தடுக்கும் ரட்சைகளும், தாயத்துகளும் கட்டப்பட்டிருந்தன. சென்ஷு, அவளது பெற்றோருடன் இருப்பதை விரும்பினாள். தன்னுடைய சம்மதமின்றித் திருமணத்தை ஏற்பாடு செய்யக்கூடாது என்று அவர்களிடம் சொல்லி விட முடிவு செய்திருந்தாள். அவளது சிறுமி பருவம் முடிவுக்கு வந்து கொண்டிருந்தது. தன் வாழ்வு எப்படியாக இருக்கப் போகிறது என்பதை எண்ணி யோசித்துக் கொண்டிருந்தாள். அவளது நாட்டு பெண்களின் நிலையை எண்ணிப் பார்த்தாள். குழந்தை பருவத்திலேயே, யாரென்று தெரியாத ஆணுடன் திருமணம் நிச்சயிக்கப் பட்டு, அவனைப் பார்க்காமலேயே, அவளது பெற்றோரோ அல்லது சகோதரனோ நிச்சயித்த நாளில் திருமணம் செய்து கொண்டு, வாழ்நாள் முழுவதும் யாரென்று தெரியாதவர்களுக்கு

அடிமைகளைப் போல வேலை செய்து கொண்டு இருந்தார்கள்.

ஒரு மாலை, சென்ஷு அவளது புத்தகத்துடன் அறையில் அமர்ந்திருந்தாள். அவளது தாயும், இன்னமும் சில பெண்களும் முற்றத்தில் நிலா வெளிச்சத்தில் அமர்ந்து கொண்டு, தேநீர் அருந்திக் கொண்டு, மகன்களும், மருமகள்களும் உள்ள பெண்களின் அதிர்ஷ்டத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். திருமதி. ஹாடின், தனக்கு இருப்பது ஒரே பெண் குழந்தை என்றாலும், தான் ஆண் குழந்தை வேண்டும் என்று மற்ற பெண்களைப் போல, பெரிதாக ஆசைப்பட்டதில்லை என்றாள். அவள் சொல்ல போகும் கதையில் இருக்கும் பாட்டியைப் போல எதிர்காலத்தை எண்ணி பெரிதாகக் கவலைப்பட்டதில்லை என்று கூறி விட்டு, கதையைக் கூறினாள்.



தன் மகனுக்குக் குழந்தை இல்லாமல் இருந்ததால், குழந்தை வேண்டி பல கடவுள்களிடமும் வேண்டிக் கொண்டிருந்தாள் ஒரு வயதான பெண்மணி. அருகில் இருந்த கோயில்கள் அனைத்திற்கும் சென்று வழிபட்டும், வேண்டியும் வந்தாள். அவளது வீட்டில் இருந்து செல்லும் தூரத்தில் இருந்த கடவுள்கள், கோயில்கள் அனைத்திற்கும் சென்று வழிபட்டும், அவர்களுக்குக் குழந்தை பிறக்கவில்லை. அப்போது தான் அவளுக்குக் கடலின் அரசனான டிராகன் நினைவிற்கு வந்தது. குழந்தை வரத்திற்காக யாரும் கடல் அரசனிடம் வேண்டிக் கொண்டதாக அவள் கேள்விப்பட்டதில்லை. இருந்தாலும், கடலை நோக்கி வழிபாட்டுப் பொருட்களுடன் சென்று, அவரிடமும் வேண்டிக் கொண்டாள். கடல் நாகம் ஒன்று, கடலின் அரசனான டிராகனிடம் சென்று பெண்மணி ஒருவள் கரையில் அவரை வழிபட்டு வருவதாகத் தெரிவித்தது. கடல் அரசனும், மீன் ஒன்றை அனுப்பி அவளது வேண்டுதல் என்ன என்று கண்டு வர சொன்னார். அவளது வேண்டுதலை கேட்டுக் கொண்ட மீனும், திரும்பி வந்து, அவள் பேரனை வேண்டுவதாகத் தெரிவித்தது. கடல் அரசனும் சிரித்து விட்டு "இங்கே நம்மிடம் மனித குழந்தைகள் இல்லை; இருப்பதெல்லாம் ஓட்டு மீன்களும், கடல் மீன்களும் மட்டுமே இருக்கின்றன. அவள் வேண்டுவதைப் பெற வேறெங்காவதுதான் செல்ல வேண்டும்" என்றார். ஆனால், அவள் வருவதை நிறுத்தவில்லை. மீண்டும், மீண்டும் வந்து கொண்டிருந்தாள். இறுதியில் டிராகனும் சலிப்படைந்துவிட்டு "அவளுக்கு நான்தான் பேரன் தர வேண்டும் என்றால், ஒரு சங்கைதான் என்னால் தரமுடியும்." என்றார்.

காலம் சென்றது. அந்த வயதான பெண்மணியும் அவளுடைய விருப்பம் நிறைவேற போகிறது என்ற எதிர்பார்ப்பில் இருந்தாள். கடல் அரசனின் சக்தியை பாராட்டியும், வாழ்த்தவும் செய்து கொண்டிருந்தார். ஒரு வழியாகக் குழந்தையும் பிறந்தது. ஆனால் குழந்தை ஒரு சுருள் சங்கின் உள்ளே இருந்தது. அதன் தலை மட்டுமே வெளியே தெரிந்தது. அவர்கள் மிகவும் செல்வந்தர்கள் என்பதால், அந்தக் குழந்தையை நல்ல முறையில் பார்த்துக் கொண்டனர். அவன் வளர, வளர சில நேரங்களில், நத்தையைப் போலச் சற்று நேரம் வெளியே வருவான். ஆனால் உடனே பயந்து போயோ, கலைப்பினாலோ திரும்பவும் ஓட்டிற்குள் சென்று விடுவான். பெரியவனாக வளர்ந்த பிறகு, அவன் ஓட்டின் வெளியே வந்து, அதன் மீதே அமர்ந்திருப்பான். ஆனால், ஓட்டை பிரிந்து இருக்கவே மாட்டான். நன்கு படித்தும், பணிவாகவும் இருந்ததால் அவனை அனைவர்க்கும் பிடித்திருந்தது. அவன் ஓட்டோடு பிறந்தது பற்றியும், அவனுடைய அது வளர்ந்திருப்பது பற்றியும் அனைவர்க்கும் தெரிந்தே இருந்தது. அவனுக்குத் திருமண வயது வந்தவுடன், அவனது குடும்பத்தினர் அவனுக்கு அழகான பெண் ஒருத்தியை திருமணம் செய்து வைத்தனர். திருமணம் முடிந்த பின்னர், வயதான பெண்மணி, அவன் மனைவியுடன், அவன் இரவில் ஓட்டில் இருந்து வெளியே வருகிறானா அல்லது இரவிலும் கட்டிலுக்கு அருகில் ஓட்டின் உள்ளேயே உறங்குகிறானா என்று கேட்டாள். அவன் மனைவியும், இரவில் அவன் ஓட்டை வெளியே விட்டுவிட்டு, தன்னருகில் படுத்தே உறங்குவதாகக் கூறினாள். உடனே வயதான பெண்மணி, இரவில் தூங்குவது போல நடித்து, அவன் உறங்கியவுடன், ஓட்டை சத்தமில்லாமல் எடுத்துக் கொண்டு வந்து தன்னுடைய அறையில் வந்து கொடுக்கும் படியாகக் கூறினாள். இதை வெற்றிகரமாக அவள் செய்து முடித்தாள். அவனும் காலையில் ஓட்டை காணவில்லை என்பதாலும், அதை யார் வைத்திருக்கிறார்கள் என்பது தெரியாததாலும், அவன் ஓடில்லாமல் இருக்கப் பழகிக்கொண்டான். சாதாரண மனிதர்கள் போலவே வாழ ஆரம்பித்தான்.

இப்படியாகச் சில வருடங்கள் மகிழ்வுடன் கழிந்தது. அவனது மனைவிக்கு மகன்கள் பிறந்தார்கள். அவர்கள் குடும்பமே மகிழ்ச்சியாக இருந்தது. ஒருநாள், அவளது பேரன் வீட்டில் இல்லாத நேரத்தில், அவனது ஓட்டை வெளியே காய வைத்திருந்தாள். எதிர்பாராத விதமாக அவன் திரும்பிவிடவே, ஓட்டை பார்த்தவுடன், மகிழ்வுடன் அதன் உள்ளே வேகமாகச் சென்று, அப்படியே கடலுக்குச் சென்றுவிட்டான். அங்கிருந்து அவன் திரும்பவே இல்லை.

கடவுளிடம் வேண்டுவதன் மூலம் ஒருவருக்கு ஆண் குழந்தை பிறக்கலாம். ஆனால் அப்படிப் பிறக்கும் குழந்தை பேயாகவோ, தெய்வமாகவோ இருக்கலாம்.



தன்னுடைய ஒன்பதாவது கோப்பை தேநீரை குடித்த பெண்ணொருத்தி, ஆண் குழந்தைகளை விடப் புத்திசாலித்தனமான பெண் குழந்தைகள் மேல்தான் என்றும், ஆனால் அவர்கள் பெற்றோர்களுடன் இறுதி வரை இருக்கவேண்டும் என்றாள். ஆனால் எவ்வளவு திறமை அல்லது அறிவு கொண்டவளாக இருந்தாலும், பெண் குழந்தைகள் வேறு வீட்டிற்குச் சென்று விடுகிறார்கள். சீனத்துப் பெண்கள், கூண்டில் இருக்கும் கோழிகளைப் போன்றவர்கள். அவர்கள் எவ்வளவு வேகமாக ஓடினாலும், அவர்களது கூண்டின் கம்பிகளைத் தாண்டி செல்ல முடிவதில்லை. எனவே, பெண்கள் அதிகபட்சம் எதிர்பார்க்க கூடியது, அவர்களின் திறமைகள் மூலம், அவர்களது கணவரின் வீட்டில் அதிகாரமாக வாழலாம் என்பதை மட்டுமே. அது போல இருந்த பெண்ணின் கதைதான் இது.



ஒரு கிராமத்தில் குடும்பம் ஒன்று வாழ்ந்து வந்தது. அதில் தந்தை, அவரது மூன்று மகன்கள், இரண்டு மருமகள்கள் இருந்தனர். அவரது இரண்டு மருமகள்களும் அருகில் இருந்த ஒரே கிராமத்தை சேர்ந்தவர்கள். அவர்கள் இருவருக்கும் திருமணம் அப்போதுதான் நடந்திருந்தது. அவர்களது மாமியார் உயிருடன் இல்லை என்பதால் அவர்கள் தங்களது தாய் வீடுகளுக்குச் செல்வதற்கு, அவர்களது மாமனாரின் அனுமதியை பெற வேண்டியிருந்தது. புதிதாகத் திருமணமானவர்கள் என்பதால் அடிக்கடி அவர்கள் தனிமையாகவும், தாய் வீட்டிற்குச் செல்லவும் விரும்பினார்கள். அதற்கு அனுமதி கேட்டு அவரை அடிக்கடி தொந்தரவு செய்தார்கள்.

அவரும் இதனால் மிகவும் எரிச்சலடைந்து, இதற்கு முடிவு கட்டவேண்டும் என்று எண்ணி, அவர்களை அழைத்து "உங்கள் தாய் வீட்டிற்குச் செல்லவேண்டும் என்று என்னை அடிக்கடி தொந்தரவு செய்கிறீர்கள். நான் அதற்கு அனுமதி தராததால் என்னைக் கல்நெஞ்சக்காரன் என்றும் நினைத்துக் கொண்டு இருக்கிறீர்கள். உங்களுக்கு நான் அனுமதி தரவேண்டும் என்றால், என்னுடைய நிபந்தனைக்கு நீங்கள் ஒத்துக் கொள்ள வேண்டும். நீங்கள் உங்கள் தாய் வீட்டிற்குச் சென்று திரும்ப வரும் போது, ஒருவர் நெருப்பைக் காகிதத்தில் வைத்து சுற்றியும், இன்னொருவர் காற்றைக் காகிதத்திலும் கொண்டு வர வேண்டும். இதைக் கொண்டு வருவோம் என்று உறுதி கொடுத்தால் மட்டுமே, நீங்கள் இங்கிருந்து செல்ல வேண்டும். அப்படிச் சென்று விட்டு, உங்களால் கொண்டு வர முடியவில்லை என்றால், திரும்ப இங்கே வரவே கூடாது."

இதை அவர்கள் ஒத்துக் கொள்வார்கள் என்று அவர் நினைக்கவில்லை. ஆனால். முட்டாள்களான அந்தப் பெண்களோ, அவர் கேட்கும் பொருட்களைக் கொண்டு வருவதில் இருக்கும் சிரமங்களை உணராமல், எப்படியாவது அங்கிருந்து கிளம்ப வேண்டும் என்ற எண்ணத்தில், அவர்களது தாய் வீட்டிற்குக் கிளம்பி விட்டார்கள். தங்களது சொந்த ஊருக்குச் செல்லும் ஆர்வத்தில், வேகமாக நடந்து கொண்டு இருந்தார்கள். அவர்களது கிராமத்திற்குச் சென்று என்ன செய்வது, யாரை சென்று பார்ப்பது என்றெல்லாம் பேசிக் கொண்டே வெகு தூரம் நடந்து விட்டார்கள். அப்போது, அவர்களில் ஒருத்தி அணிந்திருந்த செருப்பு அறுந்து போகவே, அவள் கீழே விழுந்து விட்டாள். எனவே அங்கேயே நின்று, செருப்பைச் சிறிது சரி செய்து மாட்டிக் கொண்டு, பயணத்தைத் தொடர முடிவு செய்தார்கள். அப்போதுதான் அவர்கள் தங்களது கணவர்களின் வீட்டிற்குச் செல்ல வேண்டும் என்றால் கொண்டு வரவேண்டிய பொருட்கள் பற்றிய உண்மை அவர்களுக்கு உறைத்தது. அதை எண்ணியவுடன் அங்கேயே அழ ஆரம்பித்துவிட்டனர்.

எருமையின் மீது வீட்டிற்கு திரும்பும் இளம் பெண்.

அப்படி அவர்கள் சாலையோரம் அழுது கொண்டிருந்த பொழுது, அந்த வழியே எருமை மாட்டின் மீது அமர்ந்தவாறு ஒரு பெண் வந்தாள். அவர்களைக் கண்டு, அங்கே நின்று, அவர்களுக்கு எதாவது உதவி வேண்டுமா என்று கேட்டாள். அவர்கள் அவளால் தங்களுக்கு உதவ முடியாது என்று கூறினார்கள். ஆனாலும் அவள் வற்புறுத்திக் கேட்கவும் அவர்களுக்குச் சற்று நம்பிக்கை ஏற்படவே, அவளிடம் தங்களது கதையைச் சொன்னார்கள். அவள் உடனே, தன்னுடைய வீட்டிற்கு வந்தால், தான் அவர்களது குழப்பத்தைத் தீர்த்து வைப்பதாகக் கூறினாள். அவர்களுக்குச் சிறிதும் நம்பிக்கை இல்லை என்றாலும், அவளும் மிகுந்த நம்பிக்கையுடன் கூறியதால், அவளுடைய தந்தையின் வீட்டிற்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே அவள் அவர்களின் மாமனார் கேட்ட பொருட்களை எப்படிக் கொண்டு செல்வது என்று கூறினாள்.

முதல் பொருளுக்கு ஒரு காகித விளக்கு வேண்டும். விளக்கை சுற்றி காகிதம் அலங்கரித்திருந்தாலும், விளக்கெரியும் பொழுது, அதன் உள்ளே நெருப்பு இருக்கும். எனவே அதுவே 'காகிதத்தில் சுற்றப்பட்ட நெருப்பு' ஆகும். இரண்டாவதற்கு, காகித விசிறியே போதுமானது. அதை அசைக்கும் பொழுது, அதில் இருந்து காற்று வரும். எனவே அதில் 'காற்றுக் காகிதத்தில் இருக்கிறது'. இவற்றை அவர்களது மாமனாருடன் கொண்டு சென்றால் போதும் என்றாள்.

அந்த இரண்டு பெண்களும், அவளுக்குத் தங்களது நன்றியை தெரிவித்து விட்டு, தங்களது கிராமத்திற்குச் சென்றனர். அவர்களது வீடுகளுக்குச் சென்று இருந்து விட்டு, மேற்சொன்னது போலக் காகித விளக்கையும், காகித விசிறியையும் எடுத்துக் கொண்டு அவர்களது மாமனாரின் வீட்டிற்குச் சென்றனர். அவர்களைக் கண்டவுடன், அவர் தனது நிபந்தனைகளைக் கூறிக் கோபமாகப் பேசினார். அவர்கள் தாங்கள் அவரது நிபந்தனைகளைச் சரியான முறையில் நிறைவேற்றிவிட்டதாகக் கூறி, அவர்கள் கொண்டு வந்த பொருட்களை எடுத்துக் காட்டினார்கள். அதைக் கண்டு மிகுந்த ஆச்சரியமடைந்த அவர், அவர்கள் எப்படித் திடீரென்று இவ்வளவு அறிவாளிகள் ஆனார்கள் என்று கேட்டார். அவர்களும் தங்களுடைய பயணத்தைப் பற்றியும், வழியில் தாங்கள் சந்தித்த பெண்ணைப் பற்றியும் கூறினார்கள். அந்தப் பெண் திருமணமானவளா என்று கேட்டார். அவளுக்கு இன்னமும் திருமணம் ஆகவில்லை என்று தெரிந்து கொண்டு, தன்னுடைய மூன்றாவது மகனுக்கு அவளை மணமுடிக்க முடியுமா என்று விசாரித்தார்.

அவளைத் தன்னுடைய மூன்றாவது மகனுக்கு மணமுடித்து, அவளை வீட்டிற்கு இளைய மருமகளாகக் கூட்டி வந்தார். அவரது குடும்பத்தினர் அழைத்து, அவர்களது தாயும், மாமியாரும் உயிருடன் இல்லை என்பதாலும், இளைய மருமகள் மிகுந்த புத்திசாலியாக இருப்பதாலும், அவளே அவர்களது வீட்டுத் தலைவியாக நிர்வாகம் செய்ய வேண்டும் என்று கூறிவிட்டார்.

திருமண நிகழ்வுகள் எல்லாம் முடிந்த பின்னர், மூன்று மகன்களும் தங்களுடைய வயல்களுக்கு மீண்டும் வேலை செய்யத் திரும்ப வேண்டிய நாளும் வந்தது; அவர்களது தந்தையின் விருப்பப்படி, அவர்கள் மூன்றாவது மருமகளிடம் எதாவது அறிவுரை இருக்கிறதா என்று கேட்க வந்தார்கள். அவளும் அவர்களிடம் எப்போதும் வயல்களுக்கு வெறும் கையுடன் செல்லவோ, திரும்ப வரவோ கூடாது என்றாள். அவர்கள் வயலுக்குச் செல்லும் போது, ஏதேனும் உரத்தை எடுத்துக் கொண்டு செல்லவேண்டும். திரும்ப வரும் போது, அடுப்பெரிக்க விறகுகளைக் கொண்டு வரவேண்டும். அவர்களும் அப்படியே செய்ய, அவர்களது வயல்களின் விளைச்சல் அதிகரித்தது. விறகுகளை நிறையக் கொண்டு வந்ததால், பணத்திற்கு வாங்க வேண்டிய தேவை இல்லாமல் போனது. விறகுகள் தேவைக்கு அதிகமாகச் சேர்ந்த பின்னர், அவள் அவர்களைக் கற்களைக் கொண்டு வரச்சொன்னாள். அதை அவர்கள் வீட்டின் அருகே இருந்த இடத்தில் கொட்டி வைத்தனர்.

ஒரு நாள் அந்த வழியே வந்த இரத்தின வியாபாரி ஒருவன், அங்குக் கிடந்த கற்குவியலில், பச்சை இரத்தின கல் ஒன்றையும் பார்த்தான். அதைக் கற்குவியலோடு சேர்த்து குறைந்த விலையில் பெற, வீடு கட்ட கற்களை வாங்குவது போல வந்தான். இளையமருமகள் மிகவும் அதிகமான விலை சொன்னாள். அவன் அதைக் கேட்டு அதிர்ச்சி அடைந்தாலும், அவனால் அவளை விலையைக் குறைக்க வைக்க முடியவில்லை. எனவே விலையை

ஏற்றுக் கொண்டு, தான் இரண்டு நாட்களில் வந்து பணத்தைக் கொடுத்து, கற்களை எடுத்துச் செல்வதாகக் கூறிவிட்டுச் சென்றான். அன்றிரவு, இளைய மருமகள், அவன் அதிகமாக விலை கொடுத்துக் கற்களை வாங்க விரும்புவதை எண்ணி கொண்டிருந்தாள். அந்தக் கற்களில் ஏதெனும் விலை உயர்ந்த ரத்தினம் இருக்க வேண்டும் என்று முடிவுக்கு வந்தாள். மறுநாள், அவளது மாமனாரிடம் சென்று, அந்த வியாபாரியை விருந்துக்கு அழைக்கவேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். மூன்று மகன்களையும் எல்லா வித கேளிக்கைகளையும் நிகழ்த்த கேட்டுக் கொண்டாள். உயர்ரக மதுவை கொடுக்க வேண்டும் என்றும், அவளது மாமனார் வியாபாரியிடம் தந்திரமாகப் பேசி, சாதாரணக் கற்களில் இருந்து, இரத்தின கற்களை எப்படிக் கண்டறிவது என்று தெரிந்து கொள்ளவேண்டும் என்றும் அவரிடம் கூறினாள்.

இரத்தின வியாபாரி மது மயக்கத்தில், இரத்தின கற்களைக் கண்டறிவது எப்படி என்று கூறுவதை அவள் திரைக்குப் பின்னால் மறைந்து இருந்து கேட்டுக் கொண்டாள். வேகமாகச் சென்று, கற்குவியலில் இருந்து அந்த இரத்தின கல்லை எடுத்து விட்டாள். விருந்தின் மயக்கத்தில் இருந்து இரத்தின வியாபாரி எழுந்த பொழுது, கற்குவியலில் ரத்தினக்கல் இல்லை என்பதை அறிந்து கொண்டான். திரும்பவும் அவன் இளைய மருமகளிடம் சென்று விலை பேசினான். அவள் திறமையாகப் பேசி, கற்குவியலுக்கு முன் பேசிய விலையையே கொடுக்க வேண்டும் என்றும் தனியாக ரத்தினக்கல்லிற்கு ஒரு பெரிய தொகையும் பேசி முடித்துவிட்டாள்.

இப்போது அவர்களது குடும்பம் மிகுந்த செல்வதுடன் இருந்தது. எனவே அவர்களது முன்னோர்களை வழிபடுவதற்காக, மிகுந்த செலவுடன், அழகாகவும், அலங்காரமாகவும், தங்களது வீட்டின் முன், ஒரு கோயிலை எழுப்பினார்கள். அதன் மேலே 'வருத்தம் இல்லை' என்று எழுதி வைத்தனர். சில காலம் கழித்து, அந்த வழியே சென்ற அரசாங்க அதிகாரி ஒருவன், இந்த வார்த்தைகளைப் படித்துவிட்டு ஆச்சர்யம் அடைந்து, தன்னுடைய பல்லக்கை நிறுத்தச் சொன்னான். வருத்தமில்லாமல் வாழும் இந்தக் குடும்பத்தைப் பற்றி விசாரிக்கப் போவதாகக் கூறினான். அந்தக் குடும்பத் தலைவரை தன்னை வந்து பார்க்கும்படியாகக் கூறினான். மிகவும் சிறிய பெண் ஒருத்தி வரவே ஆச்சர்யமடைந்து, அவளிடம் "உங்களுடைய குடும்பம் மிகவும் விசித்திரமானது. இதுவரை வருத்தமில்லாத எவரையும் நான் பார்த்ததில்லை. இவ்வளவு இளைய குடும்பத் தலைவியையும் நான் பார்த்ததில்லை. எனவே உங்களது அகங்காரத்திற்கு நான் அபராதம் போடப்போகிறேன். இந்தச் சாலை நீளத்திற்கு ஒரு துணியை நெய்துவிடு." என்றான்.

அவளும் பதிலுக்கு "சரி, சாலையின் இரண்டு முனைகளையும் நீங்கள் கண்டறிந்து, அதன் நீளத்தை எனக்கு அடிகளில் கூறிவிட்டால், நான் நெய்வதை ஆரம்பித்து விடுவேன்." என்றாள்.

தன்னை அவள் முட்டாளாக்குவதை உணர்ந்த அதிகாரி "அப்படியென்றால், கடலில் இருக்கும் நீரளவிற்கு எண்ணெய்யை உனக்கு அபராதமாக விதிக்கிறேன்." என்றான்.

"கட்டாயமாக" என்ற அவள் "நீங்கள் சரியாகக் கடலை அளந்து, எத்துணை லிட்டர் நீர் இருக்கிறது என்று சொன்னால், இப்பவே எண்ணெய்யை செக்கில் ஆட்ட ஆரம்பித்து விடுவேன்." என்றாள்.

"ஓஹோ! நீ பெரிய புத்திசாலியாக இருப்பதால், என்னுடைய எண்ணங்களையும் தெரிந்து வைத்திருப்பதை என்று எண்ணிகிறேன். என் கையில் காடை பறவை இருக்கிறது. நான் அதை அழுத்திக் கொல்ல போகிறேனா அல்லது சுதந்திரமாகப் பறக்க விடப்போகிறேனா என்று சொல், பார்ப்போம்!" என்று அதிகாரி கூறினான்.

"நானோ சாதாரணப் பெண். நீங்களோ பெரிய அதிகாரி. எனவே, உங்களுக்கு என்னைவிட அதிகமாகத் தெரிந்திருக்கவில்லை என்றால், எனக்கு நீங்கள் அபராதம் விதிக்கக் கூடாது. நான் இப்போது ஒரு காலை வீட்டின் உள்ளும், இன்னொன்றை வெளியிலும் வைத்து நின்று கொண்டிருக்கிறேன். நான் உள்ளே போகப் போகிறேனா, வெளியே வரப் போகிறேனா என்று சொல்லுங்கள். இதற்கு உங்களால் பதில் சொல்ல முடியவில்லை என்றால், நீங்களும் என்னிடம் பதில் கேட்க கூடாது" என்றாள்.

அவள் நினைப்பதை தெரிந்து கொள்ளமுடியாத அதிகாரியும், அங்கிருந்து சென்றுவிட்டார். அதன் பின்னர் அவர்களது குடும்பம் மிகுந்த செல்வத்துடனும், நல்ல பெயருடனும் வாழ்ந்து வந்தது.



"புத்திசாலியான மகளை நல்ல திருமணத்தின் மூலம் இழப்பது ஒன்றும் பெரிய கவலை அல்ல." என்று அங்கே வெள்ளை முடியுடன் அமர்ந்திருந்த பெண் ஆரம்பித்தாள். "தன்னுடைய மகள் மோசமான திருமணத்தில் இருப்பதைப் பார்ப்பதுதான் கொடுமையானது. தரகுப்பணத்திற்காகத் தரகர்கள், மாப்பிள்ளை மற்றும் அவர்களின் குடும்பத்தைப் பற்றி உண்மை இல்லாத பலவற்றையும் தெரிவிக்கிறார்கள். இப்படியாக ஏமாற்றப்பட்டு ஒரு பெண்ணைப் பைத்தியத்திற்குத் திருமணம் செய்து வைத்தது எனக்குத் தெரியும். இன்னொருவளை குள்ளனுக்கும், இன்னொருவளை முட்டாள் ஒருவனுக்கும் திருமணம் செய்து வைத்தனர். அது போலவே பிச்சைக்காரர்களுக்கு வாழ்க்கைப் பட்டவர்களையும் தெரியும்." என்று முடித்தாள்.

"ஆமாம்!" என்ற திருமதி. ஹாடின் "'பறவையை மணந்தால், பறக்கத்தான் வேண்டும்; நாயை மணந்தால், ஓடத்தான் வேண்டும்; நரியை மணந்தால், தோண்டத்தான் வேண்டும்.' என்றுதானே பழமொழி சொல்கிறது." என்றாள்.

"ஆனால் எல்லா முறையும் ஆண்கள் மட்டுமே ஏமாற்ற முயலுவதில்லை." என்ற இன்னொரு பெண்மணி "பெண்களும் சில சமயம் தரகர்கள் மூலம், அவர்களது தகுதிக்கு மீறிய பணக்கார ஆண்களைத் திருமணம் செய்ய முயலுகிறார்கள். ஆணும், பெண்ணும் ஒருவரை ஒருவர் திருமணத்தில் ஏமாற்ற முயன்ற ஒரு வேடிக்கையான கதை எனக்குத் தெரியும். அதைச் சொல்கிறேன்." என்று ஆரம்பித்தாள்.



கூன் உடைய ஒரு செல்வந்தன், எவ்வளவு செலவானாலும் தனக்கு ஒரு அழகான பெண்ணைத் திருமணம் செய்துவிக்க வேண்டும் என்று தரகரிடம் சொல்லியிருந்தான். தரகு பெண்ணும் அந்த வேலையை எடுத்துக் கொண்டு, அதைப் பற்றி இன்னொரு தரகு பெண்ணிடம் பேசிக் கொண்டிருந்தான். அவள் தன்னுடைய தோழியிடம், அந்தச் செல்வந்தன் உட்கார்ந்து கொண்டு, தனது முகத்தை மட்டும் காட்டினால் நன்றாகத்தான் இருப்பான் என்று கூறினாள். ஆனால் அவனது கூன் ஒட்டகத்தைப் போல இருப்பதால், எந்தப் பெண்ணும் அவனைப் பார்த்தவுடன் பயந்துதான் போவாள் என்றும் கூறினாள். திருமணம் செய்ய விரும்பும் எந்த மனிதனும், பெண்ணின் பார்வையில் தன்னைப் பார்த்துக் கொள்வதில்லை என்றும் கூறினாள்.

இரண்டாவது பெண், தனக்கும் அதுபோலவே சுயநலமான ஒரு பெண்ணைத் தெரியும் என்றாள். உதடுகள் பிளந்து போன கைம்பெண் ஒருத்தி, தனக்குத் திருமணம் செய்ய விருப்பம் என்றும், அழகான மனிதனை தனக்குத் திருமணம் செய்துவித்தால், வழக்கத்தைவிட இரண்டு மடங்கு தரகுப்பணத்தைத் தருவதாகக் கூறியிருப்பதாகவும் தெரிவித்தாள். ஒரு கைம்பெண் திரும்பவும் திருமணம் செய்ய முடிவெடுத்துவிட்டால், என்ன விதத்திலாவது அதை அடைந்து விடுவாள் என்றும் கூறினாள்.

இப்படியாக உலகைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்து விட்டு, அவர்கள் கூன் விழுந்த செல்வந்தருக்கும், பிளந்த உதட்டைக் கொண்ட கைம்பெண்ணிற்கும் திருமணம் செய்து வைத்து விடுவது என்றும், கிடைக்கும் தரகுப்பணத்தைச் சரிபாதியாகப் பிரித்துக் கொள்வது என்றும் முடிவு செய்தார்கள். எனவே முதல் தரகுப் பெண், கூன் விழுந்த செல்வந்தரிடன் சென்று, தான் அவருக்கு ஒரு அழகான பெண்ணைப் பார்த்திருப்பதாகவும், ஆனால் பேச்சுவார்த்தையை ஆரம்பிப்பதற்கு முன் அவரும் பெண்ணை ஒரு முறை பார்த்து சரி சொல்லிவிட்டால் நன்றாக இருக்கும் என்றும் கூறினாள். ஒரு குறிப்பிட்ட தெருவில் இருக்கும் வீட்டின் வழியாகச் சென்றால், அவள் அந்த வீட்டில் இருக்கும் பழ மரத்தின் கீழே இருப்பதைப் பார்க்கலாம் என்றும் கூறினாள். செல்வந்தருக்கும் திருமணத்திற்கு முன்பே பெண்ணைப் பார்த்துவிட முடியும் என்பது மகிழ்வாக இருந்தது. தரகுப்பெண் குறிப்பிட்ட தெரு வழியே செல்ல தயாரானார்.

இரண்டாவது தரகுப்பெண், அதே போல, கைம்பெண்ணிடம் சென்று, மனைவியின்றி இருக்கும் ஒரு செல்வந்தர், அந்த வழியே பல்லக்கில் செல்வார் என்றும், அவள் பழத்தோட்டத்தில் மறைந்து இருந்து, அவரைப் பார்த்துக் கொள்ளலாம் என்றும், அவர் அவளுக்குக் கணவராக இருக்கும் அளவிற்கு அழகாக இருக்கிறாரா என்று பார்த்துக் கொள்ளலாம் என்றும் கூறினாள்.

அப்படியே, மணமகன் பல்லக்கில் தனது கூனை மறைத்துக் கொண்டு, பழத்தோட்டத்தில் தன்னுடைய முகத்தின் கீழ் பகுதியை அழகான விசிறியால் மறைத்துக் கொண்டு இருந்த அழகான பெண்ணைப் பார்த்தார். இருவருக்கும் பிடித்துப் போகவே, அவர்களது திருமண நிச்சயதார்த்தம் நடைபெற்றது. அவர்களது குறைகள் தெரிவதற்கு முன்பே வேகமாகத் திருமணமும் நடக்க வேண்டும் என்று இருவரும் விரும்பியதால், திருமணமும் உடனடியாக நடைபெற்றுவிட்டது.

முகத்தை மறைத்துக் கொண்டு மணப்பெண், மணமகனின் வீட்டிற்கு வந்தாள். திருமணச் சடங்குகள் முடிந்தவுடன், அவளது முகத்தை மறைத்திருந்த துணியைப் பெண்ணொருத்தி விலக்கினாள். உடனே அவளும் தனது விசிறியால்

உதட்டை மறைத்துக் கொண்டு, மேசையின் மறுபக்கம் அமர்ந்திருந்த மணமகனைப் பார்த்தாள். அவர்கள் இருவரும் தங்களது முதல் திருமண உணவை அந்த மேசையில் எடுப்பதற்காகக் காத்திருந்தனர். மணமகனும் அவளின் பளபளக்கும் கூந்தல், கரிய விழிகள், நேரான நாசி முதலியவற்றைப் பார்த்து அவளது அழகின் முன் தன்னால் நிற்கமுடியாது என்று எண்ணினார். அவள் இருந்த இடத்தில் இருந்து மணமகன் உட்கார்ந்திருந்த நாற்காலியை திரைகள் மறைத்திருந்தன. இருந்தாலும் மிகவும் உயர்ந்த ரக ஆடைகளை அணிந்து, செல்வந்தருக்கு உரிய செருக்குடன் இருந்த அவரைப் பார்த்தாள். அவளுக்கு மிகவும் பிடித்திருந்தாலும், அவருக்கு முன் தன்னை நினைத்து பயந்தாள். தரகுப்பெண்கள் தங்களுக்குச் சேர வேண்டிய பணத்தைப் பெற்றுக் கொண்டு சென்றார்கள். திருமணத்தை நடத்திக் கொடுப்பவள் மட்டுமே மேசை அருகே நின்று கொண்டிருந்தாள். அவளும் சற்று நேரம் வெளியே சென்றாள். மணப்பெண்ணிற்குத் தான் எப்போதும் இப்படியே விசிறியை வைத்துக் கொண்டு உட்கார முடியாது என்று தோன்றியது. எல்லாத் திருமணங்களும் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்பட்டவை என்று சொல்வது அவளுக்கு நினைவிற்கு வந்தது. சட்டென்று தன்னுடைய விசிறியை கீழே இறக்கிவிட்டு "நமது எதிர்பார்ப்புகள் விதியால் நிர்ணயிக்கப்படுகின்றன." என்றாள். அவனும் அவளை ஒரு நொடி உற்றுப் பார்த்தான். உண்மை அவனுக்கு உரைத்தது. எனவே நாற்காலியில் இருந்து எழுந்து, திரும்பி தன்னுடைய கூனை அவளிடம் காட்டி "உன் எதிர்பார்ப்பு, என் பின்பக்கத்தைப் போல மோசமாக இருந்திருக்காது." என்றான்.

ΔΔΔ

"தரகு பேசுபவர்களைக் குற்றம் சொல்வதும் சரிதான்." என்று அதுவரை அமைதியாக இருந்த ஒரு இளம் பெண் ஆரம்பித்து, "ஆனால், திருமணத்தில் ஒருவரின் விதியை மாற்ற முயல்வது முடியாத விஷயம் என்றே சொல்கிறார்கள். பல வருடங்களாகத் திருமணம் செய்தவர்களும், தங்களுக்குள் எந்த வேறுபாடும் வந்ததில்லை என்று கூறுவதில்லை. "ஒரே மேசையில் பல வருடங்களாக உபயோகத்தில் இருக்கும் தட்டுக்கள், சில நேரங்களில் மோதிக் கொள்ளும்' என்பது பழமொழி. என்னுடைய மாமியாரும், மாமனாரும் எப்போதும் ஒத்துப்போவதில்லை. ஆனால் அவர்களை ஒரு குறை சொல்லி விட்டால், இருவரும் ஒன்று சேர்ந்து கொள்வார்கள். என் தாய் அடிக்கடி சொல்லும் ஒரு பாடல் எனது நினைவிற்கு வருகிறது.

"[illegible];

[illegible];

[illegible];

[illegible],

[illegible], [illegible], [illegible]

[illegible]; [illegible]

[illegible].

[illegible],

[illegible], [illegible]"

"எனக்கு திருமணம் ஆகும் முன்பு, என்னுடைய மிகவும் படித்த சகோதரன், கன்பியூசியசின் வார்த்தைகளை எனக்கு சொன்னான் 'சிறிய விஷயங்களில் பொறுமை இல்லாததால் பெரிய திட்டங்களும் பாழாகின்றன'. என் அம்மாவும் 'கொழுக்கட்டை கிடைக்காவிட்டால், அதை வேக வைத்த தண்ணியை குடித்துக் கொள்ள வேண்டியதுதான்.' என்ற பழமொழியை கூறுவாள். பெண்களாகிய நமக்கு பொறுமை தேவை. வாழ்க்கை கடினமாக இருக்கும் போது, நன்றியுடன் இருக்கவேண்டும். என்ன நடக்க போகிறதோ, அதுவே நடக்கும். அதனாலேயே ஆண்களும்,பெண்களும் தங்களுடைய திருமணம் முன்பே நிச்சயிக்கப்பட்டது என்பதை உணரவேண்டும். அதற்கு ஒரு கதை சொல்கிறேன்." என்று கதையை ஆரம்பித்தாள்.

ஒரு பெண்மணி இரண்டு பெண் குழந்தைகளுடன் வாழ்ந்து வந்தாள். மூத்தவள் பனிரெண்டு வயது நிரம்பியவள். இரண்டாவது சிறு குழந்தை. தன்னுடைய இரண்டாவது குழந்தைக்குச் சரியான மணமகனை கண்டறிந்து, அவன் தரும் பரிசுகளைக் கொண்டு வந்து தருமாறு அவள் தரகுப்பெண்ணிடம் தெரிவித்தாள். அதே தரகரிடம் ஒரு இருபது வயது வாலிபனும் தனக்குச் சரியான பெண்ணாகப் பார்க்கும்படி கூறியிருந்தான். எனவே தரகுப்பெண்ணும் அவனிடம் சென்று, தான் அவனுக்குப் பொருத்தமான பெண்ணொருத்தியை பார்த்திருப்பதாகவும், ஆனால் திருமணத்தைப் பேசுவதற்கு முன், அவனும் அவளைப் பார்த்துச் சம்மதம் தெரிவித்து விட்டால், தான் திருமணத்திற்கு ஏற்பாடு செய்வதாகக் கூறினாள். மூத்த சகோதரி, அவளது தங்கையைத் தூக்கிக் கொண்டு தினமும் காற்று வாங்க வருவது தரகுப்பெண்ணிற்குத் தெரியும். எனவே, தரகுப்பெண், இளைஞனை சாலையோரத்தில் இருந்த புதர் ஒன்றில் மறைத்து வைத்து, அவர்கள் இருவரும் வரும் நேரத்தில், அவர்களைச் சுட்டிக்காட்டி, அவனிடம் "அதோ! அவள்தான்!" என்றாள். இளைஞன் மூத்த பெண்ணைத்தான் அவள் சுட்டுகிறாள் என்று எண்ணி, தன்னுடைய சம்மதத்தைத் தெரிவித்து விட்டான். தரகுப்பெண்ணும் திருமண நிச்சயத்தை முடித்து வைத்தாள். திருமண நாளை முடிவு செய்ய இளைஞன் ஆர்வமாக இருந்தான். ஆனால், தரகுப்பெண்ணோ, மணப்பெண் இன்னமும் சிறு பெண்ணாக இருப்பதாகப் பெண்ணின் பெற்றோர் கூறுவதாகச் சொல்லி தள்ளிப் போட்டுக் கொண்டிருந்தாள்.

இப்படியாக மூன்று வருடங்கள் கழிந்தன. இதற்கு மேலும் காத்திருக்க விரும்பாத இளைஞன், தான் பெண்ணைப் பார்த்த பொழுதே அவள் மிகவும் உயரமாக இருந்ததாகவும், இப்போது மூன்று வருடங்கள் கழிந்த பின்னரும் அவளை அவனுக்குத் திருமணம் செய்து கொடுக்காமல் இருப்பது சரியல்ல என்றும் தெரிவித்தான். அப்போதுதான் நடந்ததை உணர்ந்த தரகுப்பெண், அவனிடம் மூத்தவள் மணப்பெண் அல்ல என்றும் அவளது கையில் இருந்த குழந்தையே மணப்பெண் என்றும் தெரிவித்தாள். சட்டரீதியாக நிச்சயமான திருமணத்தை மறுக்க முடியாது என்பதை இளைஞன் உணர்ந்தான். "நிச்சயமான பெண் மெதுவாக வளர்கிறாள்" என்ற பழமொழியின் அர்த்தத்தையும் உணர்ந்தான். எனவே, வணிகத்தில் கவனத்தைச் செலுத்தி, பல வருடங்களை வெளிநாடுகளில் கழித்தான்.

பல நாட்களுக்குப் பின்னர், தன்னுடைய கிராமத்திற்குத் திரும்ப நினைத்தான். அத்தோடு, தனக்கு நிச்சயிக்கப்பட்ட பெண் எப்படி இருக்கிறாள் என்ற ஆர்வமும் அவனுக்கு இருந்தது. முன் போலவே, புதர் ஒன்றில் ஒளிந்து கொண்டு, அவள் வரும் சாலையில் காத்திருந்தான். அவள் இன்னமும் வளராமல், குட்டையாக இருப்பதைக் கண்டவுடன், கோபம் கொண்டு, கல் ஒன்றை அவளை நோக்கி வீசினான். அவளது நெற்றியில் கல் பட்டவுடன், அவள் கீழே மயக்கமாக விழுந்தாள். தான் கொலை செய்துவிட்டதாகப் பயந்து போன அவன், அங்கிருந்து வெளிநாடுகளுக்குச் சென்றுவிட்டான். அந்த நிகழ்வை பற்றி விசாரிக்கவும் அவனுக்குத் தைரியம் இல்லை. அவனுடைய வணிகம் வளர்ந்தது, பெரும் செல்வம் சேர்ந்தது. அவனுக்கும் வயது ஏறிக்கொண்டே போனது. ஆனாலும் அவன் திருமணம் செய்யாமலேயே நாட்களைக் கடத்தி வந்தான். அவனுடைய இதயம் எப்போதும் அவனது நாட்டிலும், அவனது கிராமத்திலும் இருந்தது. பல வருடங்களுக்குப் பின்னர், அவன் கொன்ற பெண்ணை அனைவரும் மறந்திருப்பார்கள் என்றும், தன்னுடைய கிராமத்திற்குச் சென்று இறுதி நாட்களைக் கழித்துவிட முடிவு செய்தான். அவனுடைய கிராமத்திற்கு வந்து, அழகான வீடு ஒன்றை கட்டிக்கொண்டான். திருமணமும் செய்து கொள்ள வேண்டும் என்று எண்ணினான். எனவே தனக்கு அழகான,

இளம் பெண் ஒருத்தியை பார்த்து தரும்படி தரவுப்பெண்ணிடம் கூறினான். தனக்கு வயதாகிவிட்டதால், இருமடங்கு தரகுப்பணம் தருவதாகவும் கூறினான். அப்படியே, தரகுப்பெண்ணின் முயற்சியால், அழகான, இளம் பெண் ஒருத்தியை மணமுடித்தான். அவனுக்கு முன்பு நிச்சயிக்கப் பட்டிருந்த பெண் உயிரோடிருந்திருந்தால் என்ன வயதிருக்குமோ அவ்வளவே அவளுக்கும் இருக்கும். அவளுடைய நெற்றியிலும் காயத்தின் தழும்பு இருந்தது!



திருமண வரன் கொண்டு வரும் தரகர்.



"திருமணங்கள் நிச்சயிக்கப் பட்டிருக்கலாம்." என்ற திருமதி. ஹாடின், "ஆனால் நான் 'உன்னால் முடிந்த அளவு உழைத்துவிட்டு, கடவுளின் செயலை எதிர்பார்' என்ற பழமொழியை நம்புபவள். சரியான தரகுபெண்ணைத் தேர்ந்தெடுத்தல், எல்லா வரன்களையும் கவனமாக ஆராய்தல் போன்றவை திருமணம் நல்ல முறையில் நடக்க உதவும். 'வேகமாக நெய்வது துணியைப் பாழாக்கும்.' என்பது பழமொழி. ஒருவருக்குத் திருமணம் ஆனவுடன், எப்படி இருக்கிறோம் என்பது அவர்களது கையிலேயே இருக்கிறது. 'கெட்ட வாசனைக்காக மூக்கை வெட்டுவது உதவாது' அல்லவா? 'வெற்றியோ, தோல்வியோ போர்வீரர்களுக்குக் காயம் நிச்சயம்' என்பது போலவே சரியாக வாழ்வதாகும். ஆனால் மோசமான நிலை வரும் போது எப்படி நடந்து கொள்வது என்பதற்கு ஒரு கதை இருக்கிறது." என்று ஆரம்பித்தாள்.



திருமணமாகி தன் கணவனின் வீட்டிற்கு வந்த பெண் ஒருத்தி, அவளது கணவன் ஒரு முட்டாள் என்பதைக் கண்டுகொண்டாள். இருந்தாலும், அவளது நிலையை உணர்ந்த அவள், எப்படியாவது அவளது கணவனுக்குப் புத்தியை வர வைக்க முடிவு செய்தாள். அவனும் சொல்வதை எல்லாம் கேட்பவனாக இருந்ததால், அவனது அன்பும், அழகும் கொண்ட மனைவி சொல்வதை எல்லாம் கேட்டான். அவளும் அவனுக்கு உலகைப் பற்றிக் கற்றுக் கொடுக்க ஆரம்பித்தாள்.

அவர்கள் திருமணம் நடந்து சில மாதங்களில், அவளது தந்தையின் பிறந்த நாள் வந்தது. மரபுப்படி, அவரது மகள்கள் அனைவரும் சேர்ந்து அவரது வீட்டில் விருந்து சமைத்துக் கொடுப்பது வழக்கமாகும். ஆனால், அவரது இளைய மகளுக்குத் தன்னுடைய முட்டாள் கணவனுடன் அங்குச் செல்ல விருப்பமில்லை. அவளது மகிழ்வான சகோதரிகளும், அவர்களது அறிவான கணவர்களும் இருக்கும் இடத்திற்குச் செல்லாமல் இருக்க எதாவது காரணம் கிடைக்காதா என்று யோசித்துக் கொண்டிருந்தாள். ஆனால், அவளது கணவனோ கட்டாயம் அந்த விருந்துக்குச் செல்ல வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். எனவே அவளும் கடைசி நிமிடத்தில், ஒத்துக் கொண்டாள். அவனிடம் சிறிது பணத்தைக் கொடுத்து, நல்ல அழகான ஆடைகளை வாங்கிக் கொள்ளுமாறு கொடுத்தாள். தன்னுடைய தந்தையின் வீட்டிற்குச் செல்லும் போது, தான் உமியை தரையில் உதிர்த்துக் கொண்டே செல்வதாகவும், அவன் அதைச் சரியாகத் தொடர்ந்து வந்து சேரவேண்டும் என்றும் கூறினாள். மேலும், அவன் அங்கே வந்து சேர்ந்த பிறகு எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்றும் மிகவும் விரிவான விளக்கங்களைக் கொடுத்தாள். அவன் இரவு விருந்தில் அமரும் போது, அவனது கணுக்காலில் தான் ஒரு நூலை கட்டி விடுவதாகவும், தான் அதை இழுக்கும் போது மட்டுமே, அவன் பொதுவான சட்டியில் இருந்து அவன் உணவை எடுத்து வாயில் வைக்கவேண்டும் என்றும் கூறினாள். இதன் மூலம் அவன் உணவை மெதுவாகவும், பணிவாகவும் எடுப்பான் என்றும், எனவே அவனது கரடுமுரடான முட்டாள்தனம் மற்றவர்களுக்குத் தெரியாமல் போய்விடும் என்றும் நினைத்தாள். இப்படியாக நன்கு திட்டமிட்டு, அவள் அவளது தந்தையின் வீட்டிற்குச் சென்றாள். சீனாவில் பெண்கள் தங்களது கணவர்களுடன் சேர்ந்து வெளியே செல்வது பழக்கமில்லை என்பதால், அவள் தனியாக அவளது தந்தையின் வீட்டிற்கு வந்தது தவறாகக் கருதப்படவில்லை. அவளது சகோதரிகளுடன் சேர்ந்து விருந்துக்கான ஏற்பாடுகளைக் கவனிக்க ஆரம்பித்தாள்.

அவளுடைய கணவனும் அடுத்து விருந்திற்குக் கிளம்பினான். ஆனால், நல்ல துணிகளை வாங்குவதற்குப் பதிலாக, சாவு வீடுகளில் எரிப்பதற்காகச் செய்யப்படும் காகித உடைகளை வாங்கினான். அவை பசையால் ஒட்டப்பட்டுச் செய்யப்படுபவை. இந்த உடைகளை அணிந்து கொண்டு, அவன் மனைவி போட்டுச்சென்ற உமியை தொடர்ந்து நடக்க ஆரம்பித்தான். ஆனால் செல்லும் வழியில் ஓரிடத்தில், காற்று உமியை அருகில் இருந்த சிறு குளத்தில் தள்ளி இருந்தது. உமியை தொடர்ந்து வந்தவன், குளத்தில் உமி மிதப்பதை பார்த்தவுடன், குளத்தில் இறங்கி நடக்க ஆரம்பித்தான். சிறிது தூரம் கழித்து வெளியே வந்த பொழுது, அவனது காகித உடை நனைந்து, பசையெல்லாம் வெளியேறி, கிழிந்து தொங்கியது. அப்படியே அவன் அவனது மாமனாரின் வீட்டிற்கு வந்து சேர்ந்தான். அவனைக் கண்டு ஏமாற்றத்துடன் அவனது மனைவி வேறு துணிகளைக் கடன் வாங்கி அவனுக்குக் கொடுத்தாள். மறுபடியும் அவன் விருந்தின் போது நடக்க வேண்டிய விதம் குறித்துக் கூறினாள். அவனது கணுக்காலில் சிறிய நூலை கட்டி, அவள் திரைக்குப் பின்னே மற்ற பெண்களுடன் சேர்ந்து கொண்டாள். அங்கிருந்து அவளால் அவனைப் பார்த்து, அவன் சாப்பிடுவதைக் கட்டுப்படுத்த முடியும். அவள் கூறியதை நினைவில் வைத்திருந்த அவனும், அவள் நூலை இழுத்த போது மட்டுமே அவனது குச்சிகளில் உணவை எடுத்து உண்டான். அவனை முட்டாள் என்று நினைத்துக் கொண்டிருந்த மற்றவர்கள், அவன் பணிவுடன் சாப்பிடுவதைப் பார்த்து, தாங்கள் தவறாக நினைத்திருக்க வேண்டும் என்று நினைத்தார்கள். ஆனால், அங்கே ஓடிக் கொண்டிருந்த கோழி ஒன்றின் கால்கள் நூலில் சிக்கிக் கொண்டது. அதிலிருந்து தப்பிக்க அது வேகமாக நூலை இழுக்க ஆரம்பித்தது. தன் மனைவி தன்னை வேகமாகச் சாப்பிட சொல்கிறாள் என்று எண்ணிய அவன்

வேகமாகச் சாப்பிட ஆரம்பித்தான். தட்டில் இருந்த வற்றைத் தீர்ந்தவுடன், தன் தலையில் இருந்த தொப்பியை எடுத்து அதில் உணவை போட ஆரம்பித்தான். அவனுடைய மேசையில் இருந்தவர்கள் அவனைப் பைத்தியம் என்று நினைத்து அங்கிருந்து அப்புறப்படுத்தினார்கள்.

இந்த அவமானத்திற்குப் பின்னர், அவனது மனைவி அவனை வெளியே அழைத்தே செல்லக் கூடாது என்று நினைத்தாள். வீட்டிலேயே அவனுக்குப் பாடம் எடுத்துக் கொண்டிருந்தாள். சிறிது நாட்களில், அவர்களின் வீட்டுக்காரர், அவளின் கணவன் தன் கூரை ஓடுகள் மீது கல் எரிந்து உடைத்துவிட்டதாகக் குறை சொன்னார். அவளது கணவன், கூரையில் இரண்டு பறவைகள் சண்டையிடுவதைப் பார்த்ததாகவும், அவற்றை விலக்கவே தான் கற்களை இருந்ததாகவும் கூறினான். உடைந்த ஓடுகளுக்கான பணத்தைக் கொடுத்து விட்டு, அவளது கணவனிடம், சண்டையிடும் பறவைகளைக் கைகளில் பிடித்துப் பிரிக்கவேண்டும் என்றும் கற்களை ஏறிய கூடாது என்றும் தெரிவித்தாள். சில நாட்கள் கழித்து, தன் உடைகள் எல்லாம் கிழிந்து போய் அவளது கணவன் வந்தான். இரண்டு காளைகள் சண்டையிடுவதைப் பார்த்ததாகவும், அவள் கூறியது நினைவில் இருந்ததால், அவன் அவற்றின் தலையைப் பிடித்துப் பிரித்து விட முயற்சித்ததாகவும், அவை தன்னைத் தாக்கி காயப்படுத்திவிட்டன என்றும் கூறினான். அவனின் உடைகளைச் சரி செய்த அவள், காளைகள் சண்டையிடும் போது, அவற்றின் தலைகளைப் பிடிக்கக் கூடாது என்றும், வாலை பிடித்துப் பிரித்து விட வேண்டும் என்றும் கூறினாள். அடுத்த நாளும் அவன் காயங்களோடு வீட்டிற்கு வந்தான். என்ன நடந்தது என்று அவள் கேட்க, இரண்டு நாய்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்ததாகவும், அவற்றை அவள் கூறியது போல வாலை பிடித்துப் பிரித்து விட முயற்சித்ததாகவும், அவை இரண்டும் ஒன்றாகச் சேர்ந்து தன்னைத் தாக்கிவிட்டதாகவும் கூறினான். அவன் தவறாகச் செய்திருக்கிறான் என்ற அவள், நாய்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்தால், அவற்றின் மீது தண்ணீரை ஊற்ற வேண்டும் என்று கூறினாள். அப்படியே அடுத்த முறை செய்வதாகக் கூறினான். சிறிது நேரம் கழித்து, அவன் அழுது கொண்டே வந்தான். இரண்டு ஆண்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்ததாகவும், அவள் கூறியது போல அவர்கள் மீது தண்ணீரை ஊற்றியதாகவும் கூறினான். அவர்கள் இருவரும் அவன் மீது பாய்ந்து, அடித்து விட்டார்கள் என்று கூறினான்.

அவன் எதாவது வேலை செய்தால் மட்டுமே அவனை இது மாதிரியான முட்டாள்தனங்களில் இருந்து காப்பாற்ற முடியும் என்று நினைத்த அவள், அவனிடமே என்ன வேலை செய்ய விருப்பம் என்று கேட்டாள். அவன் தனக்கு வாங்கவும், விற்கவும் விருப்பம் என்று கூறினான். எனவே அவனுக்குச் சிறிது பணம் கொடுத்து, நதிக்கரையில் நண்டு வாங்கி, அதைக் கிராமங்களில் சென்று விற்றுவிட்டு வருமாறு கூறினாள். அவனும் அப்படியே சென்று, தோளில் ஒரு கம்பில் இரண்டு கூடைகளில் நண்டுகளை எடுத்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தான். மிகவும் வெப்பமாக இருந்த நாளில் நடந்து கொண்டிருந்த போது, கூடையில் இருந்த நண்டுகள் சத்தமிட ஆரம்பித்தன. மிகவும் வெப்பமாக இருப்பதால் அவை சத்தமிடுகின்றன என்று நினைத்தான். அப்படியே நண்டுகளிடம் வெப்பமாக இருக்கிறதா என்றும் கேட்டான். பதிலுக்கு அவை ஆமாம் என்று சொல்வது போல இருந்தது. அவற்றைக் கட்டுகளில் இருந்து விடுவித்து, அருகில் இருக்கும் குளத்தில் விடலாம் என்றும், ஆனால் அவன் கூப்பிடும் போது திரும்ப வந்துவிட வேண்டும் என்றும் கேட்டான். பதிலுக்கு அவை கொடுத்த சத்தம் அதை ஆமோதிப்பதை போல இருந்தது. எனவே, நண்டுகளைக் குளத்தில் விட்டுவிட்டு, அருகில் இருந்த மரத்தின் கீழே படுத்துத் தூங்கினான். வெயில் தாழ்ந்தவுடன், கூடைகளை எடுத்துக் கொண்டு, குளக்கரையில் நின்று கொண்டு நண்டுகளைக் கூப்பிட்டான். ஆனால் எந்த நண்டும் திரும்ப வரவில்லை. வெகு நேரம் கழித்து, களைப்புடன் வீட்டிற்குத் திரும்பி, நடந்ததை அவனது பொறுமையான மனைவியிடம் தெரிவித்தான். அவள் நண்டுகளின் கட்டுகளை அவிழ்த்துவிட்டு, அவற்றைக் கூடையில் இருந்து வெளியே எடுத்தது தவறு என்று கூறினாள். அவன் நண்டுகளைக் கூடையுடன் குளத்தில் வைத்திருந்தாலே போதுமானதாக இருக்கும் என்றும் கூறினாள். அடுத்தமுறை தான் புத்திசாலித்தனமாக இருப்பதாகக் கூறி, மறுநாள் மறுபடியும் தன்னுடைய வியாபாரத்திற்குச் சென்றான். அன்று அவன் வாத்துகளை வாங்கினான். அவற்றின் கால்களைக் கட்டி, கூடையில் போட்டுக் கொண்டு நடக்க ஆரம்பித்தான். அவன் மனைவி சொன்னது நினைவில் இருந்ததால், குளத்திற்கு அருகில் வந்தவுடன், கூடையை நீரில் வைத்துவிட்டு, அருகில் இருந்த மரத்தடியில் ஓய்வெடுத்தான். அவன் திரும்பவும் கூடையை எடுத்து பார்த்த பொழுது, வாத்துகள் எல்லாம் நீரில் மூழ்கி இறந்து போயிருந்தன.

அன்று மாலை அவனது மனைவியிடம் அவனது பிரச்சினைகளுக்குக் காரணம் சிறிய அளவில் வியாபாரம் செய்வதுதான் என்று கூறினான். அவள் அவனுக்கு நிறையப் பணம் கொடுத்தால், பெரிய அளவில் வியாபாரம் செய்து லாபம் சம்பாதிக்க முடியும் என்றான். அதிகமாகப் பணம் செலவானாலும், அவன் எதையாவது கற்றுக்கொண்டால் நல்லது என்று நினைத்த அவளும், அவனுக்குப் பணம் கொடுத்தாள். அவன் திரும்பவும்

நிறைய வாத்துகளை வாங்க எண்ணி சென்றான். செல்லும் வழியில் இருந்த வயல்கள் எல்லாம் அப்போதுதான் அரிசி விதைப்பதற்காக, நீர் பாய்ச்சப்பட்டிருந்தன. அதில் இருக்கும் சிறிய தவளைகளைத் தின்பதற்காக நாரைகள் நிறையவும் அங்கே நின்று கொண்டிருந்தன. கொஞ்சம் தூரத்தில் இருந்து நாரைகளைப் பார்த்த அவன், அவற்றை வாத்துகள் என்று தவறாக எண்ணி விட்டான். அங்கே அருகில் இருந்த மனிதனை பார்த்து, அவன் வாத்துகளுக்குச் சொந்தக்காரன் என்று நினைத்து, அந்த வாத்துகளுக்கு விலை என்ன என்று அவனிடம் கேட்டான். இவனுடைய முட்டாள்தனத்தை அறிந்து கொண்ட அந்த விவசாயி, சற்று நேரம் பேரம் பேசிவிட்டு, அவனுடைய பணத்திற்கு எல்லா வாத்துகளையும் தருவதாகக் கூறினான். மேலும், அந்த விவசாயி, வாத்துகள் அவன் மீது மிகவும் பாசம் கொண்டவை என்றும், அவனைத் தவிர வேறு எவரிடம் அவை செல்லாது என்பதால், தான் சத்தமில்லாமல் அங்கிருந்து சென்று விடுவதாகவும், அதன் பின்னர் அவன் அவற்றைக் கூட்டி செல்லலாம் என்றும் கூறினான். அது போலவே விவசாயி பணத்தைப் பெற்றுக் கொண்டு சென்ற பிறகு, அங்கு நின்று கொண்டிருந்த நாரைகளை நோக்கி முட்டாள் சென்றவுடன், அவை அனைத்தும் பறந்து சென்றன.

மறுபடியும் அவன் தன் மனைவிடம் ஒரு சோகமான கதையோடு சென்றான். அத்துடன் அவளும் அவனுக்குப் படிப்பிப்பது வீண் வேலை என்று, அவனை விறகு பொறுக்க அனுப்பினாள்.



"உன் கதையில் வரும் பெண்ணின் ஒழுக்கம் மிகவும் போற்றுதலுக்குரியது." என்று அங்கிருந்த வயதான பெண் கூறினாள். "'எரிக்கப்படும் நிலமே வளமாக இருக்கும்' அல்லவா? 'முட்டாளுடன் வாழ்வதை விட, புத்திசாலியுடன் சாவது மேல்' என்பது பழமொழி, இல்லையா? ஆனால் இந்தக் கதைக்கு அது ஒத்து வராது. சென்ஷு அன்று சொன்ன கன்பியூசியஸ் வார்த்தை நினைவுக்கு வருகிறது, 'தன்னை நம்பி இருப்பவனும், பிறரை எதிர்பார்க்காதவனுக்கும் எதிரிகள் இருப்பதில்லை.' பெண்களும் தங்களை நம்பி இருக்கப் பழக வேண்டும். அப்போதுதான் அவர்களுக்குப் பிரச்சினைகள் இருப்பதில்லை. திருமணம் கசந்தால் தற்கொலைதான் தீர்வு என்று பல பெண்கள் நினைக்கிறார்கள். நானும் ஒரு முட்டாளை திருமணம் செய்த பெண்ணின் கதையைக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவள் எப்படித் தற்கொலையில் இருந்து தப்பினாள் என்று சொல்கிறேன்." என்று கதையைச் சொன்னாள்.



அழகும், அறிவும் கொண்ட பெண் ஒருத்தி, முட்டாள் ஒருவனை மணமுடித்திருந்தாள். அவர்களது முன்னோர்களின் வீட்டில் அவர்கள் தனியாக வாழ்ந்து வந்தார்கள். அவள் நன்றாக நெய்யக் கூடியவள். ஒரு முறை அவள் மிகவும் அழகான துணியை நெய்து வைத்திருந்தாள். அதைச் சந்தையில் விற்கலாம் என்று எண்ணினாள். ஆனால், அதை அவளது கணவனிடம் கொடுத்தால், அவன் அதை முட்டாள்தனமாக விற்றுவிடுவான் என்றும், அவளே துணி சந்தைக்குச் செல்லலாம் என்றால், அவள் மிகவும் வயது குறைந்தவள். யாரிடமும் இது குறித்துப் பேசவும் அவளுக்கு முடியவில்லை. எனவே, இறுதியாக அவள் கணவனிடமே இது குறித்துப் பேசினாள். அவளை மகிழ்ச்சிப்படுத்த நினைத்த அவன், தானே சந்தைக்குச் சென்று விற்றுவிட்டு வருவதாகக் கூறினான். தயக்கத்துடன் அவள், அவனிடம் துணியைக் கொடுத்து, அதைச் சந்தையில் நல்ல விலைக்கு விற்க வேண்டும் என்று கூறினாள். ஏமாற்றுபவர்களிடம் இருந்து அவனைக் காப்பாற்ற, பொதுவாக மனிதர்களைப் பற்றியும், ஏமாற்றுப் பேர்வழிகள் பற்றியும் கூறிவிட்டு "யாருக்கெல்லாம் நாசி கீழ் நோக்கி இருக்கிறதோ, அவர்கள் அனைவரும் நேர்மையானவர்கள் இல்லை." அவனும், அவளுடைய நல்ல எண்ணத்தைப் பெற விரும்பியதால், அவள் கூறியதை திரும்ப, திரும்பச் சொல்லி நினைவில் வைத்துக் கொண்டான். "யாருக்கெல்லாம் நாசி கீழ் நோக்கி இருக்கிறதோ, அவர்கள் அனைவரும் நேர்மையானவர்கள் இல்லை." கையில் துணியை வைத்துக் கொண்டு, சந்தையில் அங்கும் இங்குமாக நடந்து கொண்டிருந்தான். வாங்குபவர்கள் அனைவரின் நாசியும் கீழ் நோக்கியே இருந்தது. அவர்கள் நேர்மையற்றவர்கள் என்று அவனது மனைவி கூறியிருந்ததால், அவர்களிடம் பேச முனையவில்லை. இறுதியாக, மாலை நேரத்தில், அங்கு ஒருவன் மேலே ஒட்டியிருந்த அறிக்கையை வாசித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அவனுடைய நாசி மேல் நோக்கி இருந்ததால், அவனை நெருங்கி "ஐயா, நாள் முழுவதும் உங்களைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன். கீழ் நோக்கி நாசி இருப்பவர்கள் அனைவரும் நேர்மையற்றவர்கள் என்று என் மனைவி கூறினாள். உங்களுடைய நாசி மேல் நோக்கி இருந்ததால், என்னிடம் இருக்கும் துணியை உங்களுக்குச் சந்தை விலைக்கே விற்க வேண்டுகிறேன்." என்றான். அவன் பேசியதைக் கேட்டவுடன் அவன் ஒரு முட்டாள் என்பதை உணர்ந்து கொண்ட அவர், துணியை வாங்கிக் கொண்டு, அவனிடம் "வீட்டிற்குச் சென்று, உன் மனைவியிடம் துணியைத் திரு. ஏழு-எட்டு வாங்கிக் கொண்டார் என்று சொல். அவரது வீடு தேன்கூட்டிற்கு அருகிலும், கண்ணியில்லாத மூங்கில்களுக்குப் பின் புறமும் இருக்கிறது. நாளை அங்கே வந்து பணத்தை வாங்கிக் கொள்ளலாம்." என்றார். முட்டாளும் அப்படியே சென்று அவனது மனைவியிடம் இந்தச் செய்தியை சொன்னான். அவனைக் குறை சொல்ல முடியாததால், அந்தச் செய்தியின் அர்த்தத்தைப் புரிந்து கொள்ள முயன்றாள். ஏழும், எட்டும் பதினைந்து என்பதால், செய்தியை கூறியவர் அவரது தந்தையின் பதினைந்தாவது வயதில் பிறந்திருக்க வேண்டும். தேன்கூடு என்பது சத்தமான இடமாக இருப்பதால், ஆண்கள் பள்ளிக்கூடமாக இருக்க வேண்டும். கண்ணியில்லாத மூங்கில்கள் பெரிய வெங்காயம் போல இருக்கும். எனவே, அவள் அவளுக்குத் தெரிந்த பெண்களிடம், அந்தப் பக்கத்தில் வாழ்பவர்கள் யாருக்காவது பதினைந்தாவது வயதில் ஆண் பிள்ளை பிறந்திருக்கிறதா என்று விசாரித்தாள். அப்படியாக இருவர் இருப்பதாகத் தெரிந்தவுடன், அவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்பதையும் தெரிந்து கொண்டாள். அவளுடைய கணவனை, அவர்கள் இருவரின் வீட்டிற்கும் சென்று பார்த்து விட்டு வரச் சொன்னாள். இருவரின் வீட்டு முன்னரும் வெங்காயத் தோட்டம் இருந்தாலும், ஒருவரின் வீட்டின் அருகில் ஒரு ஆண்கள் பள்ளியும் இருந்தது. எனவே பள்ளியின் அருகில் இருந்தவரின் வீட்டிற்கு, பணத்தைப் பெற்று வர, மறுநாள் அவளுடைய கணவனை அனுப்பினாள். திரு. ஏழு-எட்டு அங்குதான் இருந்தார். முட்டாள், தன் மனைவி அனுப்பியதை கூறியவுடன், அவனுக்குப் பணத்தைக் கொடுத்தார். மேலும் மூடிய கூடை ஒன்றையும் அவனிடம் கொடுத்து, அவனது மனைவிடம் அதைத் திறக்காமல் கொண்டு சேர்க்க வேண்டும் என்றும் கூறினார். அது போலவே சென்று கொடுத்தவுடன், அவனது மனைவியும் அவள் தனியாக இருக்கும் நேரம் வரை திறக்காமல் காத்திருந்தாள். அதன் உள்ளே ஒரு களிமண் உருண்டையும், மாதுளை பழமும் இருந்தது. அவள் மாதுளை போன்றவள் என்றும், அவளது கணவன் களிமண் போன்ற அறிவுடையவன் என்றும் கூறுகிறார் என்பதை உணர்ந்தார். அதுவரை பலரும் அது போல அவளிடம் தெரிவித்திருந்தாலும், இந்த முறை அவள் அதைப் புரிந்து கொண்டதும், தன்னுடைய விதியை நினைத்து அவளால் அழாமல் இருக்க முடியவில்லை. நிறுத்தாமல் அவள் அழுது கொண்டே இருக்கவே, அவளது கணவன் திரும்பவும் திரு. ஏழு-எட்டிடம் சென்று, அவர்

பணத்தைக் குறைத்துக் கொடுத்ததால், தனது மனைவி அழுது கொண்டிருக்கிறாள் என்று கூறினான். திரு.ஏழு-எட்டு அவள் அழுகையின் காரணத்தைப் புரிந்து கொண்டார். மேலும், அவள் அடுத்து தற்கொலைக்கு முயலக்கூடும் என்றும், அப்படி முயன்றால், அவள் வீட்டிற்கு அருகில் இருக்கும் குளத்திற்கே வருவாள் என்பதையும் உணர்ந்தார். அவளைத் தற்கொலை நோக்கி தள்ளியதற்குத் தானே காரணம் என்ற குற்ற உணர்ச்சி உந்த, சல்லடை ஒன்றை எடுத்துக் கொண்டு அந்தக் குளத்திற்குச் சென்றார். அந்தச் சல்லடையில் நீரை எடுத்து அருகில் இருந்த சாலையில் ஊற்றினார். சிறிது நேரம் கழித்து, அந்த வழியே அழகாக உடையணிந்த பெண்ணொருத்தி வருவதைப் பார்த்தார். அவர் குளத்தில் இருப்பதைப் பார்த்தவுடன், அவள் திரும்பி செல்ல ஆரம்பித்தாள். தான் சரியான நேரத்திற்குக் குளத்திற்கு வந்திருப்பதாக அவருக்குத் தோன்றியது. மறுபடியும் அவள் நடுஇரவில் வந்த போது, அவர் சல்லடையில் நீரை சலித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். அப்போதே திரும்பி சென்று விட்டாள். மறுநாள் காலையில் திரும்பவும் சென்று, அந்தப் பாதையை அவன் மிகவும் சகதியாக ஆக்கிவிட்டதாகவும், எப்போது அவன் குளத்தில் இருந்து வெளியே செல்வான் என்று கேட்க வேண்டும் என்றும் முடிவு செய்தாள். மறுநாள், அது போலவே அவனிடம் சென்று, அவன் எதற்காகச் சாலையை இப்படிச் சகதியாக்கிக் கொண்டிருக்கிறான் என்று கேட்டாள். அவனும் அதற்குப் பதிலாக, தன்னுடைய மனைவி அந்தப் பக்கமாக நடந்து கொண்டிருந்தபோது கையிலிருந்த ஊசியைத் தொலைத்து விட்டாள் என்றும், அதைத் தான் தேடிக் கொண்டிருப்பதாகவும் கூறினான். எனவேதான், குளத்தில் விழுந்திருக்கலாம் என்று எண்ணி, தான் சல்லடை வைத்து அதைத் தேடிக் கொண்டிருப்பதாகவும் தெரிவித்தான்.

அவள் தனக்குத்தானே யோசித்தாள்; "இதோ, தொலைந்து போன ஊசியைத் தேடி ஓடும் நீரை சல்லடையில் சலித்துக் கொண்டிருக்கிறான். எனக்கிருக்கும் கணவன் மட்டுமே முட்டாள் அல்ல. இவன் என் கணவனை விட அதிக வயதுடையவனாக இருக்கிறான். எனவே இவனது மனைவி என்னை விட அதிக வயதுடையவளாக இருக்க வேண்டும். அவள் தற்கொலையோ செய்து கொள்ளவில்லை. என் கணவனை விடப் பெரிய முட்டாளுடன் அவள் வாழ்கை நடத்த முடியும் என்றால், நானும் என் கணவனுடன் வாழலாம்." இப்படியாக யோசித்துவிட்டு, அவள் வீட்டிற்குத் திரும்பினாள். திரு. ஏழு-எட்டும், அவரது எண்ணம் நிறைவேறி விட்டதால், வீட்டிற்குத் திரும்பினார்.



"ஆனால்" என்று ஆரம்பித்த திருமதி. ஹாடின் "முட்டாளையோ, கூனனையோ, கஞ்சா குடிப்பவனையோ திருமணம் செய்வதால் மட்டுமே பெண்ணின் வாழ்வு நரகமாவதில்லை. நியாயமான மாமியார், நல்ல மாமனார், அன்பான நாத்தனார்கள் இருந்தால், அவள் கணவனின் குற்றங்களையும் தாண்டி மகிழ்வாக இருக்க முடியும். மிகச் சிறந்த கணவனாக இருந்தாலும், அவனது உறவினர்கள் மோசமாக இருந்தால், மனைவியைச் சந்தோசமாக வைத்திருக்க முடியாது. எந்தச் சட்ட உதவியும் இல்லாமல், சொத்துரிமையும் இல்லாமல் பெண்கள் இருக்கும் வரை, அவளது கணவனது வீட்டின் பெரியவர்களின் கீழேயே இருக்கவேண்டும். அதில் அவளுக்கு மகிழ்ச்சியை விடத் தொந்தரவுகளே அதிகமாக இருக்கும். அவள் பெரியவளாகி, தனக்கென ஒரு அதிகாரத்தை அடையும் வரை, இப்படியே இருக்கும். அதுவும், வளர்ந்த குழந்தைகளைக் கொண்ட மனிதனை திருமணம் செய்யும் பெண்ணின் வாழ்வு கடினமானது; 'மனைவி இறந்தால், அடுத்த மனைவி இளையவளாக இருப்பாள். கணவன் இறந்தால், அடுத்தக் கணவன் மூத்தவனாக இருப்பான்.' என்பது பழமொழி. என் அத்தை சொன்ன கதை ஒன்று நினைவிற்கு வருகிறது." என்று ஆரம்பித்தாள்.



மனைவியை இழந்த செல்வந்தர் ஒருவர், தன்னுடைய நிலங்களுக்கு வாடகை வசூலிக்கும் போது, ஒரு அழகான இளம் பெண்ணைப் பார்த்தார். பார்த்தவுடனே அவள் மீது காதலும் கொண்டார். அவளைப் பற்றி விசாரித்த அவர், அவள் ஒரு அனாதை என்பதையும், அவளது பாட்டியுடன் வாழ்ந்து வந்தாள் என்பதையும் அறிந்து கொண்டார். அவளது பாட்டியை சந்தித்து, அவளுக்கு நானூறு அவுன்சுகள் வெள்ளி கொடுத்து, அவளது பேத்தியை திருமணம் செய்யச் சம்மதம் வாங்கினார். அவளது பேத்திக்குத் திருமணத்தில் விருப்பம் இல்லை என்றாலும், அவளது பாட்டியின் பேச்சை அவளால் மீற முடியாது என்பதால், ஒத்துக்கொள்ள வேண்டியதாகியது. சில நாட்களில் திருமணம் முடிந்து, அவளது வயதான கணவன் வீட்டிற்குப் பல்லக்கில் வந்து சேர்ந்தாள்.

மணமகனின் வீட்டை பல்லக்கு அடைந்த போது, மணமகனின் மணமான மகன், தன் தந்தை தனக்குத்தான் இரண்டாவது மனைவியாகப் பெண்ணை எடுத்திருப்பதாக எண்ணி மகிழ்ந்திருந்தான். ஆனால், பெண்ணின் பல்லக்கு அவனது தந்தையின் இடத்திற்குச் செல்லவே, அவன் அவனது மனைவியை அழைத்து, இப்படி நடந்து கொள்ளும் தந்தையை என்ன செய்வது என்று ஆலோசித்தான். அவர்கள் இருவரும் அவளை எப்போதும் தங்களது சொந்தமாகக் கருதப்போவதில்லை என்றும், அவள் வீட்டில் இருப்பதையே அவர்கள் ஒப்புக்கொள்ளப் போவதில்லை என்றும் முடிவு செய்தனர்.

வயதான கணவனோ, அவளை மிகவும் நன்றாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அவளுக்குத் தேவைப்பட்ட பணத்தைக் கொடுத்து, அவள் வேலைகளைச் செய்வதற்காகப் பல வேலைக்காரர்களையும் நியமித்தார். அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தவுடன், அவளும் அவளது வாழ்வை ஏற்றுக் கொண்டாள். அவளுடைய குழந்தைக்கு ஏழு வயதான போது, அவன் பள்ளிக்கு செல்ல ஆரம்பித்தான். அதே பள்ளியில் தான், அவளது கணவனின் முதல் மகனின் மகனும் படித்து வந்தான். அவர்கள் இருவருக்கும் பள்ளியில் சண்டை ஏற்பட்டு அது கைகலப்பில் முடிந்தது. அவர்கள் இருவரும் அவர்களது பெற்றோரிடம் சென்று அதைப் பற்றிச் சொல்லவும் செய்தார்கள். இரண்டாவது மனைவிக்கு, தன்னால் அவர்களுடன் மோதி வெற்றி பெற முடியாது என்று நினைத்தாள். அவளது கணவனுக்கு வயது மிகவும் அதிகமாக ஆகிவிட்டது. அவளுக்கும் அவர்களுடன் சண்டையிடும் அளவிற்குத் தைரியமும் இல்லை. அவளது மகனும் மிகவும் சிறுவன். எனவே தன்னுடைய உரிமைகளைத் தன்னால் கைவைத்துக் கொள்ள முடியாது என்று அவளுக்குத் தெரிந்தது. எனவே, அவளது கணவனிடம் சென்று, சொத்தை இரண்டாகப் பிரித்து விடும்படியும், அவரது காலத்திற்குப் பின்னர், அவள் இருப்பதற்கு ஒரு வீடாவது மிஞ்சும் என்றும் கேட்டுக் கொண்டாள்.

ஆனால், அவளது வயதான கணவனோ, தான் எந்த ஏற்பாடு செய்தாலும், தன்னுடைய காலத்திற்குப் பின்னர் அவளுக்கு நடக்கும் அநீதியில் இருந்து எந்த விதத்திலும் காப்பாற்ற முடியாது என்று கூறினார். அவர் எழுதும் எந்த உயிலையும் அவரது முதல் மகன் குடும்பம், அழிக்கவோ, அதைத் தட்டிக்கழிக்கவோ செய்து விடலாம். ஆனால், அவர் அவளுக்கு அவருடைய ஓவியம் ஒன்றை கொடுத்தார். அவளுக்குத் தேவை வரும் போது, அதை ஒரு நீதிபதியிடம் எடுத்துச் செல்லுமாறு கூறினார். அப்போது, அவர் அவளுக்குத் தேவையானவற்றைச் செய்வார் என்றும் கூறினார்.

சில காலத்திலேயே, அவர் இறந்தும் போனார். அவரது இறுதி சடங்குகள் எல்லாம் முடிவதற்கு முன்னரே, அவள் நினைத்தது போலவே நடந்துவிட்டது. அவளுக்கும், அவளது மகனுக்கும் வெளியே ஒரு சிறு குடிசை ஒதுக்கப்பட்டது. அவளது கணவனின் அனைத்து சொத்துக்களையும், அவரது மூத்த மகனே எடுத்துக் கொண்டார்.

எனவே, அவள், தன்னுடைய மறைந்த கணவனின் விருப்பப்படி, அந்த ஓவியத்தை எடுத்துக் கொண்டு நீதிபதியை சென்று பார்த்து, அவளது கதையைச் சொல்லி, தனக்கு நீதி வேண்டும் என்று அவரிடம் கேட்டுக் கொண்டார்.

அவர்கள் குடும்பத்தைப் பற்றியும், அங்கு நிகழ்ந்தவற்றைப் பற்றியும் அனைவருக்கும் தெரிந்திருந்ததால், நீதிபதியும் தான் சரியான தீர்ப்பை வழங்கவேண்டும் என்று நினைத்தார். அதில்தான் தன்னுடைய பெருமையும் இருக்கிறது என்றும் நினைத்தார். அவளை அனுப்பி விட்டு, அந்த ஓவியத்தைப் பார்த்து யோசனையில் ஆழ்ந்தார். அவளது கணவன், உயில் என்று எதையும் எழுதவில்லை. அப்படி எழுதினால், அதை அழித்துவிடுவார்கள் என்பதைத் தெரிந்து வைத்திருந்தார். அவரது மூத்த மகன் பணபலமும், உடல்பலமும் கொண்டிருந்தார். நீதிபதியாக, அவளை, அவன்தான் பார்த்துக் கொள்ளவேண்டும் என்று தீர்ப்பளித்தாலும், அதை அவனை நிறைவேற்ற செய்வது எளிதாக இருக்காது. அவளை வேறு விதமாகப் பார்த்துக் கொள்ளச் செய்வதும் சரியாக இருக்காது.

எனவே, இந்த வழக்கின் கவலையால் அவரால் உண்ணவோ, உறங்கவோ முடியவில்லை. எனவே, இரவு முழுவதும் அந்த ஓவியத்தைப் பார்த்துக் கொண்டே, அவரது பழைய நண்பர் அதன் மூலம் தன்னிடம் தெரிவிக்க முயன்றது என்ன என்று யோசித்துக் கொண்டிருந்தார். அவரது வேலையாள் அவருக்குத் தேநீரும், வேறு சில உணவு பண்டங்களும் கொண்டு வந்தான். அவர் தேநீரை மட்டும் எடுத்துக் கொண்டு, யோசித்துக் கொண்டு இருந்தார். யோசனையில், அவரது கையில் இருந்த தேநீர் கோப்பை ஓவியத்தின் மீது விழுந்தது. நனைந்த காகிதத்தில் இப்போது சில எழுத்துக்கள் தெரிய ஆரம்பித்தன. நீதிபதி வெளியில் இருந்த காகிதத்தை அகற்றிவிட்டு, ஓவியத்தின் கீழே இருந்த மடிக்கப்பட்ட காகிதத்தைக் கண்டறிந்தார். அந்தக் காகிதமே அவரின் கடைசி உயிலாகும். அவருடைய சொத்துக்கள் எல்லாவற்றைப் பற்றிய விவரங்களும், அவர் மறைத்து வைத்திருந்த சொத்துக்கள் பற்றிய விவரங்களும் இருந்தது. அத்தோடு, அவரது உதவிக்காகத் தனியாக இரண்டாயிரம் அவுன்சுகள் வெள்ளியை எங்கே மறைத்து வைத்திருக்கிறார் என்ற விவரமும் அதில் இருந்தது. நீதிபதி அதில் இருந்த எல்லா விவரங்களையும் நினைவில் ஏற்றிக் கொண்டு, அதை அழித்து விட்டார். அப்படியே, இறந்தவரின் மகனிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டி இருப்பதாகச் செய்தி அனுப்பினார்.

## நீதிபதியின் முன்.

மூத்தமகன் வந்தவுடன், அவரை ஒரு இருக்கையில் அமரவைத்து விட்டு, உடனே எழுந்து இன்னொருவரை வரவேற்றார். ஆனால், நீதிபதியையும், மகனையும் தவிர அங்கு யாரும் இல்லை. ஆனாலும் நீதிபதி இந்த மூன்றாவது நபரை மரியாதையுடன் பேசி, இன்னொரு நாற்காலியில் அமரச்செய்து அமைதியாகப் பேசிக் கொண்டிருந்தார். இந்த வினோதமான காட்சியை மூத்த மகன் ஆச்சர்யமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். நீதிபதிக்கு மூளை குழம்பிவிட்டது போல என்று எண்ணிக்கொண்டார்.

இப்போது நீதிபதி மயக்கத்தில் பேசுவது போல அவனைப் பார்த்து, "குழந்தாய்! என் மரணத்திற்குப் பின் நீ என் மனைவியைத் துரத்தி விட்டுவிட்டு, உன் தம்பிக்கும் சொத்தில் எந்தப் பங்கும் தரவில்லை. என்னுடைய இறப்பிற்குப் பின்னரும் என்னை நீ கோபப்படுத்துகிறாய். உன்னுடைய தவறை உணர்ந்து, சொத்தை சரிபாதியாகப் பிரித்துக் கொடுத்தால், இனியாவது நன்றாக இருப்பாய்; ஆனால் நீ இன்னமும் அதற்கு ஒத்துக்கொள்ளமால் இருந்தால், என்னுடைய சொத்துக்களை நான் மறைத்து வைத்திருக்கும் இடங்களைச் சொல்ல மாட்டேன்." என்றார்.

அவனோ, நீதிபதியை ஏதோ கெட்ட ஆவி பிடித்திருக்கிறது என்றும், அவரது வார்த்தைகளுக்கு எந்த மதிப்பும் இல்லை என்றும் சொல்லிவிட்டான். அவனது தந்தையின் ஆவி, அங்கேதான் நாற்காலியில் இருப்பதாக நீதிபதி கூறினார். அவன் அதை நம்ப மறுத்துவிட்டான்.

எனவே அவர் "அப்படியென்றால் உண்மையை நாம் சோதித்துப் பார்த்துவிடலாம். உன் தந்தையின் ஆவி என்னிடம் சொத்துக்கள் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் இடங்களைச் சொல்லட்டும். அதன்படி அந்த இடங்களில் சொத்துக்கள் இருந்தால், நான் உனது தந்தையின் ஆவியின் சொல்படித்தான் நடக்கிறேன் என்பது உறுதியாகிவிடும்." என்றார்.

அவனும் அதற்கு ஒத்துக் கொள்ளவே, அருகில் இருக்கும் ஊர் பெரியவர்கள், அதிகாரிகள், கிராமத்து முக்கியஸ்தர்கள் மற்றும் கைம்பெண்ணும் அவளது மகனும் ஒன்றாகக் கூடினார்கள். நீதிபதி, அவரது வாதிக்காக ஒரு நாற்காலியை ஒதுக்கி இருந்தார். அவர் அங்கிருப்பது போலவே பேசிக்கொண்டு நடந்து கொண்டிருந்தார். வழக்கின் விவரங்கள் சொல்லப்பட்டு, இரண்டு பேரின் ஒப்புதலும் வாங்கப்பட்டது. நீதிபதி எல்லாவற்றையும் யாருமில்லாத நாற்காலியிடம் பேசி ஒப்புதலை பெற்றார். மறைத்து வைக்கப்பட்டிருக்கும் சொத்துக்கள் அனைத்தும், அவரது கைம்பெண்ணிற்கும், அவளது மகனுக்கும் கொடுக்கப்பட வேண்டும் என்று ஒத்துக் கொள்ளப் பட்டது. மேலும் மறைக்கப்பட்டிற்கும் சொத்தில் இருந்து இரண்டாயிரம் அவுன்சுகள் வெள்ளியை நீதிபதிக்கு, அவரது உழைப்பிற்கு ஈடாகக் கொடுக்கவேண்டும் என்பதும் ஒத்துக் கொள்ளப் பட்டது.

இவை அனைத்தும் பேசப்பட்டு, ஒத்துக் கொள்ளப்பட்டதும், அனைவரும் நீதிபதியை பின்தொடர்ந்து சென்றனர். நீதிபதியும் ஆவியுடன் பேசிக் கொண்டே முன்னே சென்று கொண்டிருந்தார். அவர்கள் கைம்பெண் தங்கியிருக்கும் குடிசையைச் சென்றடைந்தார்கள். அங்கே கோடரி, மண்வெட்டிக் கொண்டு வெட்டி, மறைந்திருந்த சொத்துக்களைக் கண்டறிந்தனர். கைம்பெண்ணும், அவளது மகனும் மற்ற எவரையும் விடச் செல்வந்தர்களானார்கள். அங்கேயே இரண்டாயிரம் அவுன்சு வெள்ளியையும் கண்டறிந்தனர். அதை அப்படியே நீதிபதிக்கு கொடுத்துவிட்டனர்.

கைப்பெண்ணும், அவளது மகனும், இறந்து போனவரின் ஆவியால் காக்கப்படுவதாக எண்ணியதால், அவர்களை ஊர்மக்கள் மிகுந்த மரியாதையுடன் நடத்தினார்கள். அதன் பின்னர், அவர்களும் வசதியுடன் வாழ்ந்தார்கள். அவளது மகனும், நல்ல முறையில் படித்து, அரசாங்கத்தில் பெரிய அதிகாரி ஆனான்.



மூன்றாம் ஜாமம் வந்து விட்டதைச் சேவல் அறிவிக்கவே, கதையைச் சொல்லிக் கொண்டிருந்த கிழவியும், மற்றவர்களும் தங்களது வீட்டிற்குத் திரும்ப ஆரம்பித்தார்கள். சென்ஷு, தான் ஜின்ஷியிடம் இருந்து பிரிய நேர்ந்தால், ஏற்படப்போகும் வருத்தத்தை எண்ணி இரவு முழுவதும் தூங்காமல் இருந்தாள். மறுநாள், பள்ளிக்குத் திரும்புவதற்கு முன்பு, அவளிடம் சம்மதம் வாங்காமல் திருமணம் நிச்சயிக்கக்கூடாது என்று அவளது பெற்றோரிடம் சம்மதம் வாங்கினாள். இப்போதைக்கு அது அவளை ஆபத்தில் இருந்து காப்பாற்றினாலும், சீக்கிரமே, மற்ற பெண்களைப் போல அவளுக்குத் திருமணம் பேச்சு ஆரம்பித்து விடும் என்பதைத் தெரிந்தே இருந்தாள். பள்ளிக்கு, தன்னுடைய ஆண் வேடத்தில் திரும்பியவுடன், தன்னுடைய பெண்மையை வெளிக்காட்டாமல், ஒருவிதமாகத் திருமண நிச்சயம் செய்ய முடிவு செய்தாள்.

ஒருநாள் மாலை, நகரசுவர்களுக்கு அருகே நடந்து செல்லும் போது, அவள் அம்பொன்றை எடுத்து, அதில் ஒரு காகிதத்தில் "இந்த அம்பை கண்டறிபவர்களுக்கு, என்னுடைய சகோதரியை திருமணம் செய்து வைப்பேன் - ஹாடின்" என்று எழுதி கடவுளை வேண்டிக்கொண்டு, மேல்நோக்கி அம்பை விட்டாள். அது ஜின்ஷியின் கைகளை அடைய வேண்டும் என்றே வேண்டிக் கொண்டாள். அவள் அம்பை அவர்களது பள்ளி இருந்த இடத்திற்கு அருகிலேயே விட்டிருந்தாள். அந்த நேரத்தில், ஜின்ஷி அங்கே படித்துக் கொண்டிருப்பான் என்பதைத் தெரிந்தே இருந்தாள். அம்பு கீழே விழுந்த போது, ஜின்ஷி அந்த அம்பை எடுத்தான். ஆனால், அதே நேரத்தில் அங்கு வந்த அவர்களது வேலையாள், ஜின்ஷியின் தந்தையின் உடல்நிலை மோசமாக இருப்பதால், அவனை உடனே அழைத்துவர சொல்லியிருப்பதாகக் கூறினான். எனவே, அம்பை அங்கிருந்த மேசையில் வைத்துவிட்டு, உடனே கிளம்பினான். அப்போது அங்கு வந்த சாங்ஜி, மேசையில் இருந்த அம்பை எடுத்து, அதில் இருந்த சிறிய காகிதத்தை வாசிக்கவும் செய்தான். உடனடியாகத் தனக்காக அந்தப் பெண்ணைப் பெற்றுவிட வேண்டுமென்று, உடனே ஹாடினிடம் சென்று, அவர்கள் பள்ளிப்படிப்பை முடித்துத் தேர்வடைந்தவுடன், தனக்கே அந்தப் பெண்ணைத் திருமணம் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். சென்ஷு தன்னுடைய விதியை எண்ணி வருந்திக் கொண்டே, அவளுடைய வேலைகளைத் தொடர்ந்தாள்.

சிறிது நாட்களிலேயே அவர்களது பள்ளிப்படிப்பு பல வருடங்களுக்குப் பின்னர் முடிவுக்கு வந்தது. ஜின்ஷி, சென்ஷு மற்றும் சாங்ஜி மூவரும் தங்களது இறுதி தேர்வை எழுதுவதற்காக நகரத்திற்குச் செல்ல வேண்டி வந்தது. பள்ளியின் மற்ற மாணவர்களுடன் சென்றால், தன்னைப் பெண் என்று அவர்கள் தெரிந்து கொள்ள வாய்ப்பிருக்கிறது என்று எண்ணிய சென்ஷு, தனக்கு உடல்நிலை சரியில்லை என்று தனியாகச் செல்ல தயாரானாள். அவர்கள் கிளம்பிய சிறிது நேரத்திலேயே, சென்ஷுவின் தந்தை, திரு. ஹாடின், கடன் சம்பந்தமான வழக்கில், அநியாயமாகக் கைது செய்யப்பட்டிருக்கிறார் என்ற செய்தி வந்தது. திருமதி. ஹாடினும், நகரத்திற்கு வந்து, அவரது கணவரை எப்படி நிரபராதி என்று நிரூபித்து, சிறையில் இருந்து வெளியே கொண்டு வருவது என்று சென்ஷுவிடம் ஆலோசித்தாள்.

திரு.ஹாடினிற்கு எந்தச் சகோதரர்களும் இல்லை. அவரது பெற்றோரும் உயிருடன் இல்லை. எனவே அவரது சார்பாக நீதிமன்றத்தை நாட எந்த உறவினரும் இல்லை. அவரது மனைவியின் உறவினர்களும், அவரது இரண்டு மாமாக்களும், வழக்கைப் பற்றிப் பேச ஒன்று கூடினார்கள். தன்னுடைய கணவர் எப்போதும் அதிகாரத்தில் இருந்தவர்களுடன் நட்பாக இருக்க முயன்றதில்லை என்றும், சட்டத்தை மதித்து, வழக்குகள் இல்லாமல் இருக்கவே முயன்றார் என்றும் கூறினாள். அவர்கள் இந்தக் கதையில் வரும் மனிதனைப் போலவே இருக்க முயன்றார்கள் என்று



'பணக்காரர்களுடன் இருப்பது ஒருவனை ஏழையாக்கும். பிச்சைக்காரர்களுடன் இருந்தால் ஒரு கைப்பிடி அரிசியாவது கிடைக்கும்.' என்பது பழமொழி. ஒரு திறமையான வக்கீலின் வீட்டிற்கு அருகில் ஒரு ஏழை மனிதன் வாழ்ந்து வந்தான். எல்லோருடனும் மிகவும் நல்ல முறையில் பழகி வந்தாலும், எப்போதாவது தனக்குத் தேவை ஏற்பட்டால் உதவியாக இருக்கும் என்று, வக்கீலுக்கு மீன், இறைச்சி, கோழி போன்றவற்றைப் பரிசாகக் கொடுத்து வந்தான். அப்படியே வக்கீலின் நட்பை பெற்று, தேவைப்படும் நேரங்களில் அவரது உதவியைப் பெற்றுக் கொள்ளலாம் என்பது அவனது எண்ணம்.

வக்கீலும், ஒவ்வொரு முறை அவன் பரிசுகளைத் தரும் போது அதை எதையும் பேசாமல் வாங்கிக்கொண்டார். ஆனால் பதிலுக்கு எந்தப் பரிசையோ அல்லது வேறு பொருட்களையோ அவர் தருவதில்லை. எனவே ஏழைக்கு எப்போதாவது அவர் உதவ வேண்டும் என்பதை அவரும் அறிந்தே இருந்தது போலத்தான் இருந்தது. ஏழை மனிதனும் அவருக்குப் பல இனிப்புகளையும் அனுப்பிக் கொண்டிருந்தான். வக்கீலும் அவற்றை எதுவும் சொல்லாமல் வாங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து, அவரது மனைவிக்கும் இது ஆச்சரியமாகவே இருந்தது. எதையும் திரும்பத் தராமல் எப்படி அவர் எல்லாவற்றையும் வாங்கிக் கொள்கிறார் என்றே அவளும் யோசித்துக் கொண்டிருந்தார். எனவே, ஒரு நாள், அவனிடம் இருந்து வழக்கம் போலக் கூடை நிறையப் பரிசுகள் வந்ததும், கூடையில் திரும்பவும் எதுவும் வைக்காமல் அப்படியே திருப்பி அனுப்பியதைப் பார்த்ததும், அவள் அவரிடம் அவனுக்கு எப்படி அவர் இதை எல்லாம் ஈடு செய்யப் போகிறார் என்று கேட்டாள். அவனுக்கு எதாவது முக்கிய உதவி செய்ய முடிவு செய்திருக்கிறாரா அல்லது வேறு எதுவும் அதிகமாக மதிப்பான பொருளைக் கொடுக்க முடிவு செய்திருக்கிறாரா என்றும் கேட்டாள். வக்கீல் பதிலுக்குத் தான் அந்த மனிதன் கொடுத்த எல்லாப் பரிசுகளையும் வாங்கு கொள்வதாகவும், அவர் இல்லாத நேரத்தில் எது வந்தாலும் வாங்கிக் கொள்ளவும் முடிவு செய்திருப்பதாகவும், சிறிது காலம் கழித்து, அவனை எதாவது ஒரு வழக்கில் சிக்கவைத்து, அவனுக்கு உதவியும் செய்து, அவனுடைய எல்லா உதவிகளுக்கும் பதில் உதவி செய்ததாகவும் இருக்கும். அவனுக்கு வழக்கில் உதவி செய்வது, அவனுக்குப் பட்டிருக்கும் எல்லாக் கடனையும் நேர்செய்தது ஆகிவிடும்.

ஆனால் அப்போது அந்த ஏழை மனிதனிடம் இருந்து பரிசைக் கொண்டு வந்தவன் அங்குதான் இருந்தான். அவன் வக்கீலும், அவரது மனைவியும் பேசியதை எல்லாம் அப்படியே கேட்டுக் கொண்டிருந்தான். அவசரமாகக் கிளம்பி, ஏழை விவசாயிடம் சென்று அப்படியே சொல்லிவிட்டான். அதைக் கேட்ட விவசாயி, தன்னிடம் அந்த வக்கீல் கடன்படாமல் இருப்பதே நல்லது என்று முடிவு செய்தான். அவருக்குப் பரிசுகள் அனுப்புவதையும் நிறுத்தி விட்டான்.



"யார் மீதும் உதவிக்காகக் கடன்பட்டு நிற்பது சரியில்லாமல் இருக்கலாம். ஆனால் அப்படியென்றால் ஒருவர் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும் இல்லையென்றால் துயரப்பட வேண்டியதுதான். எனக்கும் அதிகாரபூர்வமாக யாரின் உதவியையும் பெற பிடிக்காதுதான். 'புலி வாலை பிடித்தவன்' கதைதான் அவர்கள் உதவியைப் பெறுவது. நாமும் நீதிபதியிடம் செல்லாமல் வழக்கை முடிக்க முடியும் என்றால், அதைச் செய்துவிட வேண்டும். ஆனால் நாம் சிறை அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுக்கவில்லை என்றால், என் மருமகன்தான் சிரமப்பட வேண்டும். பாலைவனத்தைக் கடக்கும் போது, மிகுந்த தாகம் எடுக்கவே, ஒரு அழகிய பிளம் பழத்தை வரைந்துக்கொண்டார். அது அப்படியே உண்மையான பழம் போல இருந்ததால், அதைப் பார்க்கும் போதெல்லாம் அவருக்கு எச்சில் ஊறி, தாகத்தைத் தணித்துக்கொள்ளலாம். என் மருமகன் அது போன்றவர் அல்ல. அல்லது கதையில் வருவது போல நன்றாகப் பேசி தனக்கு விடுதலை வாங்கிக் கொள்ளவும் தெரியாது." என்று கதையை ஆரம்பித்தாள்.



நண்பர்களே இல்லாத மனிதன் ஒருவன் சிறையில் இருந்தான். அவனது கைகளையும், கால்களையும் கட்டி வைத்திருந்தனர். சிறையில் அவன் உணவும், துணையும் இல்லாமல் இருந்தான். அவன் எப்படியும் சிறையில் இருந்து போகப்போவதில்லை என்பதாலும், அழுது கொண்டிருப்பது எதற்கும் உதவாது என்பதாலும், அவன் இருக்கும் இடத்திலேயே மகிழ்வாக இருப்பது எப்படி என்று யோசிக்க ஆரம்பித்தான். அவனுக்குத் தெரிந்த நாடகங்களை எல்லாம் சத்தமாகப் பேசி பொழுதை கழித்தான். அவனுக்கு அருமையான குரல் வளம் இருந்ததாலும், நாடகத்தின் எல்லாப் பாத்திரங்களையும், கதாநாயகன், பெண், திருடன், காவல்காரன் என்று அனைத்தையும் அவன் சிறப்பாகப் பேசி, நடித்தான். அதனால் அங்கிருந்த சிறைக்கைதிகள் அனைவருக்கும் அவனைப் பிடித்துப் போனது. தங்கள் உணவை அவனுடன் பகிர்ந்து கொண்டிருந்தார்கள். சிறைக் காவலாளியும் அவனது கை, கால் விலங்குகளை விலக்கி, அவனைச் சுதந்திரமாக, சத்தமாக நடிக்க உதவினார்கள். அவனுக்கு நல்ல அறை ஒன்றையும் அவர்கள் கொடுத்தார்கள். அதிகாரிகளும் அவனுடைய நாடக கதைகளை மற்றவர்களிடம் தெரிவித்தார்கள். அப்படியே அவனைச் சிறையில் இருந்து காப்பாற்றவேண்டும் என்ற கோரிக்கையும் எழ ஆரம்பித்தது. இப்படியே நீதிபதி வரை சென்ற அவனது பெருமைகள், அவனைச் சிறையில் இருந்து விடுவிக்க வைத்தது.



"இல்லை." என்ற சென்ஷுவின் தாத்தா "நீங்கள் அவனுக்கு எப்படிப்பட்ட உணவும், செய்திகளும் அனுப்பினாலும், ஹாடின் சோகமாக இருப்பதில் இருந்து மாறப்போவதில்லை. ஆனால் அவன் மீது எந்தக் குற்றமும் இல்லை. 'தவறு செய்யாதவன் மனதில் பயமில்லை.' நமது நீதிமன்றங்கள் ஊழல் நிரம்பியவையாக இருப்பது உண்மைதான். 'குழாய் சரியாக வேலை செய்யவில்லை என்றால், வீடு சாக்கடையாகும்.' என்பது பழமொழி. அந்தச் சாக்கடையில் விழும் நமது நீதிமன்றமும் மூழ்கிவிடும். இருந்தாலும் நல்லதே நடக்கும் என்று நினைப்போம். இந்தக் கதையில் வருபவனைப் போல, ஹாடின் தன்னைத் தானே காட்டி கொடுக்கப்போவதில்லை." என்று கதையை ஆரம்பித்தார்.



தன்னுடைய தந்தையின் வீட்டில் இருந்து கிளம்பிய மனிதன் ஒருவன், வெளிதேசங்களில் வணிகம் செய்யக் கிளம்பினான். பல வருடங்கள் கழித்துத் திரும்பிய அவன், அவனுடைய அறையில் கழுத்து நெரிக்கப்பட்டு மரணமடைந்தான். அவனுடைய மரணத்திற்கான காரணம் யாருக்கும் தெரியவில்லை. யார் அவனைக் கொலை செய்தார்கள் என்பதையும் கண்டறிய முடியவில்லை. அவனது பெற்றோர்கள், நீதிபதியிடம் எப்படியாவது கொலையாளியை கண்டுபிடிக்க வேண்டினார்கள். சந்தேகத்தின் பேரில் ஏழு பேரை கைது செய்திருந்தார்கள். அவர்களில் யாரும் கொலையை ஒத்துக் கொள்ளவும் இல்லை. அவர்கள் சிறையில் இருந்தார்கள். நீதிபதி அவர்களில் கொலையாளியை கண்டு பிடிக்கத் தேவையான ஆதாரத்தைத் தேடிக் கொண்டிருந்தார்.

சில நாட்கள் கழித்து, அவர்கள் நகருக்கு மேல் நீதிமன்றத்தின் நீதிபதி வந்திருந்தார். அவரிடம் இந்தக் குற்றத்தைப் பற்றிய விவரங்களைக் கூறினார். அவரும் குற்றம் சாட்டப்பட்டவர்களைத் தன் முன்னே அழைத்தார். அவர், தான் குற்றம் செய்தவனைக் கண்டுபிடிக்க உதவும் கடவுளின் துணையைக் கேட்டிருப்பதாகவும், அந்தக் கடவுள் அவர்களில் குற்றவாளியை காட்டிக் கொடுப்பார் என்றும் கூறினார். அவர்கள் அன்றைய இரவை, அந்தக் கடவுளின் சிலை இருக்கும் அறையில் நிர்வாணமாகக் கழிக்கவேண்டும் என்றும், அன்றிரவு கடவுள் அவர்களில் குற்றவாளியின் முதுகில் அடையாளமிட்டு விடுவார் என்றும் கூறினார். குற்றவாளியை தவிர மற்றவர்களை மறுநாள் விடுதலை செய்து விடுவதாகவும் கூறினார்.

அந்தக் கடவுளின் மிகப்பெரிய, வினோதமான சிலை இருந்த அறையில், அவர்கள் அனைவரும் நிர்வாணமாக அடைத்து வைக்கப்பட்டினர். பயங்கரமான கடவுளின் சிலை அறையின் நடுவில், அதற்கான மந்திரங்களை உச்சாடனம் செய்யப்பட்டது. அதிகாலையில் நீதிபதியும், சிறை அதிகாரிகளும் அங்கே வந்து, அவர்கள் ஏழு பேரையும் கடவுளுக்கு முதுகைக் காட்டியவாறு நிற்க சொன்னார்.

அந்தச் சிறையின் சுவர்கள் அனைத்திலும் கரி பூசப்பட்டிருந்தது. கைது செய்யப்பட்டவர்களில் ஒருவனின் முதுகில் மட்டும் கரி பூசியிருந்தது. கடவுள் முதுகில் அடையாளமிட்டுவிடுவார் என்று அதை அழிக்க அவன் முயற்சி செய்து, தன்னுடைய முதுகை சுவற்றில் தேய்த்திருக்கிறான். எனவே அவன் தான் குற்றவாளி என்று நீதிபதி குற்றஞ்சாட்டினார். அவனும் தன்னுடைய குற்றத்தை ஒத்துக்கொண்டான். அவனுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டது.



"தெளிவான மனதை விட, புத்திசாலித்தனமே ஒருவரை முட்டாள்களிடம் இருந்து காப்பாற்றும். 'புலிக்குட்டிகளை அமைதியாக எடுக்க முடியாது.' சிறை அதிகாரிகளின் வருமானத்தை எதிர்ப்பில்லாமல் நிறுத்தமுடியாது. எனவே, ஹாடின் தான் எந்தப் பணத்தையும் தர தேவையில்லை என்று சொல்வதைவிட, எல்லாப் பணத்தையும் கொடுத்து விட்டேன் என்று சொல்லவேண்டும். அப்படித்தானே நிலவில் இருந்து விழுந்த கரண்டியை வைத்திருந்த இளம்பெண் செய்தாள்" என்று கதையை ஆரம்பித்தார்.



வெகு நாட்களுக்கு முன், வயதான பெண் ஒருத்தி, தன்னுடைய தந்திரத்தால் அவளது உறவினர்கள் மற்றும் பக்கத்து வீட்டுக்காரர்களை ஏமாற்றி வாழ்ந்து வந்தாள். அவளுடைய கணவனின் சகோதரர், அவளது வீட்டிற்கு அருகிலேயே தனது ஒரே மகனுடன் வாழ்ந்து வந்தார். அவரது மகனுக்குத் திருமணம் முடிந்து புது மணப்பெண் வந்தவுடன், அவளைப் பார்க்க சென்றாள். அவளிடம் பேசிக் கொண்டிருந்த போது, அவள் வந்த பின்னர், வீட்டில் அவளது திருமண உடைகளை வைத்திருக்கும் பெட்டிகளில் இருந்து ஏதாவது சத்தம் கேட்கிறதா என்று கேட்டார். புதுப்பெண்ணும் இல்லை என்று பதில் சொன்னாள். சில நாட்கள் கழித்து, வயதான பெண் திரும்பவும் வந்த போது, புதுப்பெண் தான் வந்த போது எந்தச் சத்தமும் கேட்கவில்லை என்றும், ஆனால் இப்போது தினமும் இரவில் தனக்குச் சத்தம் கேட்கிறது என்றும் கூறினாள். வயதான கிழவி, அவள் தன்னுடைய துணிகளை நல்லபடியாகப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும், அவளுடைய வீட்டில் எலிகள் இருப்பது போலத் தெரிகிறது என்றும், அவை துணிகளைச் சின்னாபின்னமாக்கிவிடும் என்றும் கூறினாள். கிழவிக்கு அவர்கள் வீட்டில் பூனை இல்லை என்பது தெரியும் என்றாலும், பூனை இருக்கிறதா என்று கேட்டாள். புதுப்பெண் இல்லை என்று பதில் சொன்னவுடன், தன்னிடம் ஒரு கருப்பு-வெள்ளை பூனை இருப்பதாகவும், அதை அவளுக்குக் கடனாகக் கொடுப்பதாகவும், அவள் வீட்டு எலிகள் எல்லாவற்றையும் கொன்றுவிடும் என்றும் கூறினாள். புதுப்பெண்ணும் அதற்குச் சம்மதிக்கவே, கிழவியும் பூனையைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு சென்றாள். சில மணி நேரங்களிலேயே பூனை அங்கிருந்து மறைந்துவிட்டது. அவளும், பூனை கிழவியிடம் திரும்பியிருக்க வேண்டும் என்று எண்ணி அப்படியே விட்டுவிட்டாள். பூனையும் அதன் வீட்டிற்குத்தான் சென்றுவிட்டது. கிழவி அதை உடனே மறைத்து வைத்துவிட்டாள். பல நாட்களுக்குச் சென்ற பின்னர், பூனை அவள் வீட்டில் இருந்து சென்ற பின்னர், கிழவியின் வீட்டில் எலிகள் அதிகமாக இருப்பதாகவும், எனவே, தான் கடன் கொடுத்திருந்த பூனையைத் திரும்ப வாங்கிச் செல்ல வந்திருப்பதாகவும் தெரிவித்தாள். புதுப்பெண்ணும், பூனை வந்த அன்றே திரும்பவும் சென்றுவிட்டதாகவும், அது கிழவியின் வீட்டிற்குச் சென்றிருக்க வேண்டும் என்று எண்ணியதாகவும் கூறினாள். பூனை தன்னுடைய வீட்டிற்கு வரவில்லை என்று கிழவி கூறினாள். அதைத் தானே வளர்த்ததால், அதை ஈடு செய்யக் கூட முடியாது என்றும், அது போன்ற எலியை பிடிக்கும் பூனையை யாரும் கண்டதில்லை என்றும், அது போன்ற பூனையை எப்போதும் பார்க்கமுடியாது என்றும் கூறினாள். மேலும், "கரியைப் போன்ற எலி பிடிக்கும் பூனை, வெள்ளை பின்புறம் கொண்டது, அதன் எடைக்கு எடை வெள்ளி கொடுத்தாலும் தகும்." என்று இது போன்ற பூனைகளைப் பற்றிச் சொல்வார்கள் என்றும், தன்னுடைய பூனையின் எடை இருநூறு அவுன்சுகள் என்றும் கூறினார்.

தொலைந்து போன பூனையின் விலையைக் கேட்ட புதுப்பெண் ஆச்சர்யமும், அதிர்ச்சியும் அடைந்தாள். எனவே நேராக அவளது மாமனாரிடம் சென்று, நடந்தது அனைத்தையும் கூறினாள். கிழவியை நன்றாக அறிந்திருந்த அவளது மாமனார், இருநூறு அவுன்சுகளைக் கொடுக்கும் வரை, அவருடைய மருமகளை அவள் தொந்தரவு செய்து கொண்டே இருப்பாள் என்பதையும் எண்ணி அவருக்கு உணவும் உண்ண முடியவில்லை. தூக்கமும் இல்லை. ஆனால், புதுப்பெண் இதையெல்லாம் அறியாதவள் என்பதால், இது குறித்துப் பெரிதாக எண்ணிக் கொள்ளவில்லை. ஆனால், கிழவி அடிக்கடி வந்து தனது பூனையை நினைவுப்படுத்தவே, எனவே, எப்படியாவது தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்று நினைத்தாள். எனவே அவளுடைய மாமனாரிடம், கிழவி அவர்களிடம் எதையாவது கடன் வாங்கி இருக்கிறாளா என்று கேட்டாள். அவர் தனக்கு அப்படி எதையும் கொடுத்ததாக நினைவில்லை என்றவுடன், நன்கு யோசித்துச் சொல்லுமாறு கேட்டாள். இறுதியாக அவர், வெகுநாட்களுக்கு முன் ஒரு பழைய மரக்கரண்டியை வாங்கிச் சென்றதாகவும், அது சில காசுகளே மதிப்புடையது என்றும் சொல்லிக் கொள்ளும் அளவிற்கு எதுவும் இல்லை என்றும் கூறினார்.

மறுமுறை கிழவி தன்னுடைய பூனையைக் கேட்டு வந்த போது, புதுப்பெண்ணும் தன்னுடைய கரண்டியைத் திருப்பித் தரும்படி கேட்டாள். கிழவியும் அது மிகவும் பழைய கரண்டி என்றும், அதைக் குழந்தைகளிடம் விளையாடக் கொடுத்ததாகவும், அவர்கள் அதைப் பாழாக்கிவிட்டதால், அதை விறகாக எரித்துவிட்டதாகவும்

தெரிவித்தாள். புதுப்பெண்ணும் "பூனையை வைத்துப் பணம் சேர்க்க எண்ணுகிறாய். என்னுடைய குடும்பத்திற்கும் பணம் தேவைப்படுகிறது. உன்னால் கரண்டியை கொடுக்கமுடியாததால், நாம் நீதிபதிக்கு முன் சென்று, நமது வழக்கை வாதாடுவோம். உன்னுடைய பூனை, என் கரண்டியை விட அதிக மதிப்புள்ளதாகத் தீர்ப்பு வந்தால், நான் உனக்குப் பணத்தைத் தந்துவிடுகிறேன்; மாறாக, என்னுடைய கரண்டியின் மதிப்பு அதிகம் என்றால் நீ எனக்குப் பணம் தரவேண்டும்." என்றாள். எந்த நீதிபதியும் தன்னுடைய பூனையையே அதிக மதிப்புடையதாகக் கருதுவார் என்று எண்ணிய கிழவியும், இதற்கு ஒத்துக்கொண்டாள். நீதிபதியும் முன், முதலில் தன் வாதத்தை எடுத்து வைக்கக் கிழவி கேட்க, புதுப்பெண்ணும் அதற்கு ஒத்துக்கொண்டாள். கிழவியும் தன்னுடைய பூனையைப் பற்றி எடுத்து சொல்லி, அதற்கு இருநூறு அவுன்சுகள் வெள்ளி வேண்டும் என்று கூறினாள். அவளுடைய வாதம் முடிந்தவுடன், நீதிபதி, இளம்பெண்ணைப் பேசும்படி கூறினார். அவளும் தான் கிழவியின் வாதத்தை நம்புவதாகவும், ஆனால் தன்னுடைய மரக்கரண்டியின் மதிப்பு பூனையின் மதிப்பைவிட அதிகமாக இருப்பதால், இரண்டிற்கும் சரியாகப் போய்விட்டது என்றும் கூறினாள். மேலும்

'[illegible]

[illegible], [illegible]'

என்பது அனைவர்க்கும் தெரியும். அதில் இருந்த கிளை ஒன்று, ஒருநாள் இரவு, காற்றில் ஒடிந்து எனது மாமனாரின் வீட்டில் விழுந்தது. அதைக் கொண்டே அவர் அந்த கரண்டியை செய்திருந்தார். அதை எவ்வளவு உபயோகித்தாலும். தேய்ந்தே போகாது. அது போலவே, கரண்டியை மது, அரிசி, பணம், எண்ணெய் என்று எதை எடுக்க உபயோகித்தாலும், அந்தப் பொருளின் அளவும் குறையாது. இதன் பெருமையை கேள்விப்பட்ட ஒருவர், என் மாமனாரிடம் ஒரு முறை மூன்றாயிரம் அவுன்சுகள் வெள்ளிக்கு விலைக்கு கேட்டார். அதையும் அவர் மறுத்துவிட்டார். இந்தக் கரண்டியைத்தான் கிழவி கடன் வாங்கி, அழித்துவிட்டார்.

இதைக் கேட்ட நீதிபதி, பூனையை வைத்து கிழவி பணம் பறிக்க பார்த்திருக்கிறாள் என்பதை தெரிந்து கொண்டார். எனவே, இருவரது பொருட்களின் மதிப்பும் ஒன்றுக்கொன்று சரியாக போய்விட்டது என்று தீர்ப்பு சொல்லிவிட்டார்.

∆∆∆

"அறிவே செல்வம்." என்றார் இன்னொரு மாமா. "இந்த மோசமான காலத்தில், நம்மை மோசமான மன்னர்கள் ஆண்டுவருகிறார்கள். முன்பு போல, நீதிபதிகளிடம் நீதி கிடைப்பதில்லை."

சென்ஷு உடனே "ஒருவேளை நீதி வேண்டும் என்று நீதிபதியிடம் போகிறவர்களும் நேர்மையானவர்களாக இல்லாமல் இருக்கலாம். நான் எப்பவும் தனக்கு இழைக்கப்பட்ட அநீதிக்கு, தானே தண்டனை கொடுத்த பெண்ணின் கதையை ரசித்திருக்கிறேன்." என்று சொல்லிவிட்டு, கதையை ஆரம்பித்தாள்.



சோயா தயிர் செய்து விற்கும் ஒருவன், அவனது வயதான தாயாரோடும், அழகான மனைவியோடும் வாழ்ந்து வந்தான். கடைக்குப் பின்புறத்தில் அவனது மனைவி தயிர் செய்ய உதவிக் கொண்டிருந்தாள். கடையின் முன்புறம், அவனும், அவனது தாயாரும் அதை விற்றுக் கொள்வார்கள். அந்த நகரில் இருந்த பெரிய செல்வந்தரின் மகன், அவர்கள் இருக்கும் தெரு வழியே அடிக்கடி செல்வான். அப்போது அவளை அவன் பார்க்க வேண்டி வந்தது. அவளது அழகால் ஈர்க்கப்பட்ட அவன், அடிக்கடி அங்கே தயிர் வாங்க வந்தான். அங்கிருந்த கதவின் வழியே அவள் தெரிகிறாளா என்று பார்த்துக் கொண்டே இருப்பான். இதைப் பல மாதங்களாகச் செய்து வந்தான். அவள் கணவனுடனும், தாயாருடனும் ஏதேனும் பேசிக் கொண்டே, அங்கே நேரத்தைக் கழிப்பதை பழக்கமாக்கி வைத்திருந்தான். அவர்களும் அவனை ஒரு நல்ல, நேர்மையான வாடிக்கையாளராக மட்டுமே நினைத்து வந்திருந்தனர். பல நாட்களாக அவர்கள் பழகி வந்ததால், இப்போது தங்களது சொந்த விஷயங்களையும் பேச ஆரம்பித்தனர்.

அவளைப் பார்க்க, பார்க்க அவனுக்கு அவள் மீதான மையல் அதிகரித்துக் கொண்டே போனது. அவளது கணவன் மீது பொறாமை கொள்ளவும் ஆரம்பித்தான். அவனுடன் நட்பாக இருப்பது போல இருந்தாலும், அவனை ஒழித்துக் கட்டிவிட வேண்டும் என்று முடிவு செய்தான். அவளது கணவனிடம் தான் தன்னுடைய தந்தையின் கப்பல் ஒன்று வெளிதேசம் சென்று வணிகம் செய்யப் போவதாகவும், அவன் வருவதாக இருந்தால், தானே பாதி முதலீட்டை செய்வதாகவும், அவன் பொருட்களைக் கொண்டு வந்தால் போதும் என்றும் கூறினான். இது நல்ல வாய்ப்பாகத் தெரியவே, அவனும் அதற்குச் சரியென்று சொல்லி, பயணத்திற்குச் சென்றான். அவனுக்கு நல்ல லாபம் கிடைக்கவே, அதன் பின்னர் இரண்டாவதும் மூன்றாவது என்று பயணம் செய்தான். மூன்றாவது பயணத்தில், முன்பே திட்டமிட்டது போல, கப்பலின் மேலே அவனும், செல்வந்தனும் மட்டும் இருந்தார்கள். அங்கே அவனைக் கடலில் தள்ளிவிட்டான். கணவனோ நல்ல முறையில் நீச்சல் அடிப்பவன் என்பதால், படகை நோக்கி வேகமாக நீந்தி வந்தான். ஆனால் செல்வந்தனோ தன்னுடைய துடுப்பால் அவனை அடித்து மீண்டும் தண்ணீரில் தள்ளிவிட்டான். இப்படியாகச் சில முறை நடந்த பின்னர், இறுதியில் அவன் களைத்து போய் நீரில் மூழ்கி இறந்து போனான். கப்பல் துறைமுகத்திற்குத் திரும்பியது. செல்வந்தன், தயிர் வணிகன் இறந்த விவரத்தை அவனது தாயார் மற்றும் மனைவியிடம் கூறினான். அவனைக் காப்பாற்றமுடியவில்லை என்றும், அவனது உடலும் கிடைக்கவில்லை என்று கூறினான்.

இதன் பின்னர், அந்தக் கொலைகாரன், இரண்டு பெண்மணிகளுடனும் நட்பாக இருந்து கொண்டிருந்தான். அவர்களின் ஏழ்மை நிலையையும், கையறு நிலையையும் அவர்கள் எப்போதும் உணர்ந்து கொண்டிருக்க வேண்டும் என்பதில் கவனமாக இருந்தான். அப்படியே இருந்த போது, ஒருவனை அனுப்பி, அவர்களிடம் மெதுவாக, அந்த இளம் கைம்பெண், கொஞ்சம் வசதியான மனிதனை மறுமணம் செய்தால், அது அவளுக்குப் பாதுகாப்பாகவும், அவளது வயதான மாமியாரை பார்த்துக் கொள்ளவும் சரியாக இருக்கும் என்றும் கூறினான். அவர்கள் இந்த அறிவுரையை யோசித்து, அப்படி வசதியான யார் அவளைத் திருமணம் செய்வார்கள் என்று யோசித்த வேளையில், அவன் அவளைத் திருமணம் செய்யத் தயாராக இருப்பதாகவும், அவளது தாயாரை பார்த்துக் கொள்வதாகவும் செய்தி அனுப்பினான். அவளும், அவளது தாயாரின் நன்மையை யோசித்துக் கவலை பட்டிருந்ததாலும், அவன் அவர்களுக்குச் செய்திருந்த பல உதவிகளை எண்ணியும், அவள் அவனைத் திருமணம் செய்யச் சம்மதம் தெரிவித்தாள். அவனும் அவளது அழகில் மயங்கி, அவளை மிகவும் விரும்பினான். அவன் தாராளமாக அவர்களுக்கு உதவுவதை எண்ணியும் அவர்கள் ஒன்றாக மகிழ்வுடன் வாழ்ந்து வந்தனர். இரண்டு வருடங்களில், அவர்களுக்கு மகன் ஒருவனும் பிறந்தான். ஒரு திருவிழா நாளன்று அவள், அவனிடம் தான் இன்னமும் அவர்களது வீட்டின் தோட்டங்கள் அனைத்தையும் பார்த்ததில்லை என்றும், அன்று அனைவரும் கேளிக்கைகளில் ஈடுபட்டிருப்பதால், அவனும் அவளுக்குச் சுற்றிக் காட்டவேண்டும் என்றும் கேட்டுக் கொண்டாள். அவனும் அதற்குச் சம்மதித்து, அவர்களது பூந்தோட்டங்களுக்கும், மீன் தொட்டிகளுக்கும்

அழைத்துச் செல்வதாகக் கூறினான். அவர்கள் தங்கமீன்களைப் பார்த்துக் கொண்டிருந்த போது, அந்தக் குளத்தில் இருந்து தவளை ஒன்று குதித்துக் கரைக்கு வந்தது. அதை ஒரு குச்சியைக் கொண்டு அவள் குளத்தின் உள்ளே தள்ளிவிட்டாள். அது திரும்பவும் வரவே, அவளும் திரும்பத் தள்ளினாள். இப்படியே அவள் சிலர் முறை செய்யவும். அவளது கணவன் சிரிப்பதை கேட்டாள். எதற்காகச் சிரிக்கிறான் என்று அவனிடம் கேட்டாள். அவனும் அவள் தவளையைத் தள்ளிவிடுவது வேடிக்கையாக இருப்பதாகக் கூறினான். அவள் அந்தப் பதிலால் திருப்தி அடையவில்லை. அவன் சிரித்ததற்கு உண்மையான காரணத்தைச் சொல்லாததால் கோபமடைந்த அவள், அப்படியே வீட்டிற்குச் சென்று விட்டாள். அவனும், அவனால் முடிந்த அளவிற்கு அவளைச் சமாதானப்படுத்திப் பார்த்தான். அவன் தன்னிடமிருந்து எதையோ மறைப்பதாக அவள் கோபித்துக் கொண்டிருந்தாள். அவன் தன்னிடம் இருந்து எதையும் மறைத்ததில்லை என்று நினைத்துக் கொண்டு பல வருடங்களாக வாழ்ந்து வந்த அவளிடம் அவன் எதையோ மறைப்பதை அவளால் தாங்க முடியவில்லை. அவன் சிரித்ததற்கு வேறு ஒரு அர்த்தம் இருக்கிறது என்று அவள் நம்பினாள். ஆனால் அது என்ன என்று சொல்வதற்கு அவன் தயாராக இல்லை. அப்படியே சில நாட்கள் கழிந்தன. அவள் கோபித்துக் கொண்டும், தன்னை அலங்கரித்துக் கொள்ளாமலும் இருந்து வந்தாள். நாட்கள், வாரங்கள் ஆனது. அவனும் உண்மையைத் தவிர எல்லாவற்றையும் சொல்லிப் பார்த்தான். அவள் எதையும் நம்புவதாகத் தெரியவில்லை. அவனும் இந்தப் பிணக்கை தாண்டி சென்றுவிடலாம், அவள் முன்போல அவனுடனும், அவர்களது குழந்தையுடனும் மகிழ்வுடன் இருப்பாள் என்று எதிர்பார்த்தான். அவள் முன்போல இல்லை என்பதை அவனாலும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவளுடைய காதலுக்காகத் தான் செய்திருந்த பாவத்தை அவள் மன்னித்துவிடுவாள் என்று அவனுக்குத் தோன்றியது. பல நாட்களாகத் தனக்குள்ளேயே பல முறை யோசித்து, இறுதியில் அவளுடைய மௌனத்தை இன்னமும் தாங்க முடியாத நிலையில், எல்லா உண்மையையும் சொல்லிவிடுவது என்று முடிவெடுத்தான். அப்படியே அவளுடன் தனிமையில் அமர்ந்து, எல்லா உண்மைகளையும் அவளிடம் சொல்லப்போவதாகக் கூறினான். அவளும் மிகவும் மகிழ்வுடன் சிரிக்கவே, அவனுக்கு இன்னமும் தைரியம் வந்தது. அவள் அந்தத் தவளையைத் திரும்ப, திரும்பக் குச்சியால் குத்தி தண்ணீரில் தள்ளியது, தான் அப்படியா அவளுடைய காதலுக்குத் தடையாக இருந்தவனைச் செய்ததை நினைவுபடுத்தியது என்றான். அவன் சொல்வதைக் கேட்க, கேட்க அவளுக்கு ஏற்பட்ட பயங்கரத்தை முழுவதுமாகத் தனது முகத்தில் இருந்து மறைந்துக் கொண்டாள். சிரித்துக் கொண்டும், கேள்விகளைக் கேட்டுக் கொண்டும் அவனிடம் எப்போதும் போலவே பேசி, அவளது முதல் கணவனின் கொலையைப் பற்றிய அனைத்து விவரங்களையும் அறிந்து கொண்டாள். அவளுடைய இதயத்தில் கனன்ற கோபத்தீயை மறைத்துக் கொண்டு, "இறந்தவர்கள் திரும்பப் போவதில்லை. வாழும் நாமாவது மகிழ்வுடன் இருப்போம்." என்றாள். அதைப் பற்றி அவள் திரும்பவும் பேசவில்லை. எப்போதும் போலத் தன்னுடைய வேலைகளைத் தொடரவே, அவளது கணவனும் அவள் தான் சொன்னதை நல்லவிதமாக எடுத்துக் கொண்டாள் என்று எண்ணி பெருமூச்சு விட்டான். அன்றிரவு அவன் தூங்கும் போது, அவனைக் கத்தியால் குத்திக் கொன்றாள். அவன் படுக்கையில் இருந்து உருண்டு, கீழே விழுந்து இறந்து போனான். அவன் சடலத்தின் மீது ஒரு சாக்குப்பையைப் போட்டுவிட்டு, தலையை விரித்துக் கொண்டு, இடுப்பை இறுக்கமாகக் கட்டிக்கொண்டு அருகிலேயே, விடிவதற்காகக் காத்திருந்தாள்.



தாமரைக் குளம்.

அவர்கள் அறையில் இருந்து எந்தச் சத்தமும் வராமல் இருக்கவே, அவளது மாமியார் காலையில், அவர்களை உணவருந்த அழைக்க வந்தாள். கதவைத் திறந்தவுடன், சடலத்தையும், அதைக் கொலை செய்தவளையும் பார்த்தாள். நீதிபதியிடம் சொல்லப்பட்டு, வழக்கு நடத்தப்பட்டது. அவளுடைய இரண்டு கணவர்களின் உறவினர்களும் அங்கிருக்க, அவள் முழுக்கதையையும் கூறினாள். நீதிபதி, "உன் முதல் கணவரின் கொலையை நீ பழிவாங்கி விட்டாய்; உன் இரண்டாவது கணவனின் கொலையை யார் பழிவாங்குவார்கள்?" என்று கேட்டார். "நானேதான்." என்று சொல்லிவிட்டு, மறைத்து வைத்திருந்த குத்துவாளை எடுத்து, தன்னுடைய நெஞ்சில் குத்திக் கொண்டு இறந்து போனாள்.



"சென்ஷு" என்ற அவளது தாத்தா "உன் கல்வி உனக்குத் தன்னம்பிக்கையை வழங்கி இருக்கிறது. என்றாவது ஒருநாள், ஆட்சியாளர்கள் எவ்வளவு ஊழல் புரிபவர்களாக இருந்தாலும், நீதி வழங்குவதைத் தனிப்பட்ட நபர்கள் கையில் எடுத்துக் கொள்வதை விட நீதிபதிகள் வழங்குவதுதான் அபாயம் அற்றது என்பதை நீ புரிந்து கொள்வாய். தனிப்பட்ட நபர்கள் தங்களுக்கு நேர்ந்த அநீதிக்கு, அவர்களே நியாயம் செய்யக் கூடாது. ஏனென்றால் அவர்களால் சூழ்நிலையைப் புரிந்து கொள்ள முடியாது. பழைய காலங்களில், நீதிபதிகள் லஞ்சம் வாங்காமல், மக்கள் மீதிருந்த அன்பினால், உண்மையைக் கண்டறியவே எப்போதும் முயன்றார்கள் என்று நமக்குத் தெரியும். அவர்கள் பல விதங்களில் விசாரித்தும், தங்களது புத்திக்கூர்மையை உபயோகித்தும் நீதி வழங்கினார்கள். அது போன்ற ஒரு பழைய கால நீதிபதியை பற்றி எனக்கு ஒரு விஷயம் ஞாபகத்திற்கு வருகிறது." என்று சொல்ல ஆரம்பித்தார்.



ஏழை ஒருவன் தன் சிறு நிலத்தில் பூண்டு பயிரிட்டு இருந்தான். அவனிடம் வேறு நிலமும் இல்லை என்பதால், ஒவ்வொரு செடியையும் கவனமாக வளர்த்து வந்தான். செடிகளும் நன்றாக வளர்ந்தவுடன், அவன் நிலத்தின் அருகிலேயே ஒரு கட்டிலைப் போட்டுக் கொண்டு, இரவு முழுவதும் திருடர்களை எதிர்பார்த்து காவலுக்கு இருந்தான். பல இரவுகள் கழிந்தன. அவன் எதிர்பார்த்த திருடர்கள் வரவேயில்லை. எனவே யாரும் திருடப்போவதில்லை என்று, வீட்டில் தூங்க ஆரம்பித்தான். அவன் கட்டிலை மட்டும் நிலத்தில் போட்டு வைத்திருந்தான். மறுநாள் தண்ணீர் விடுவதற்காக நிலத்திற்கு வந்த போது, செடிகள் எல்லாம் பிடுங்கப்பட்டு, அவனது பூண்டு தோட்டம் முழுவதும் நாசமாகி போயிருந்தது.

மிகுந்த கவலையுடனும், கண்ணீருடனும் நீதிபதியிடம் சென்று, அவனது நஷ்டத்தைப் பற்றிப் புகாரளித்தான். நீதிபதி அவனை விசாரணைக்கு அழைத்து, அவன் ஏன் திருடனைப் பிடிக்கவில்லை என்று கேட்டார்.

"ஐயா! அவன் வந்த பொழுது நான் அங்கே இல்லை."

"அப்படியென்றால் நீ ஏன் அவனைப் பார்த்த எவரையும் சாட்சியாகக் கூப்பிடவில்லை?"

"ஐயா! ஏனென்றால் யாரும் அவனை யாரும் பார்க்கவில்லை."

"அப்படியென்றால் உன்னுடைய பூண்டு தோட்டத்தில் இருந்து, அவனைக் கண்டறிவதற்கு எதாவது துப்புக் கொண்டு வந்திருக்கலாமே?"

"அங்குக் கிடந்த என்னுடைய கட்டிலைத் தவிர, வேறு எந்தத் துப்பும் கிடைக்கவில்லை."

"அப்படியா? அப்படியென்றால், திருட்டு நடந்த நேரம் உன்னுடைய கட்டில் மட்டுமே அங்கே கிடந்திருக்கிறது. அதன் மீதே நாம் குற்றம் சாட்ட வேண்டும். புகாரளித்த நீயும் நாளை காலை இங்கே வர வேண்டும்." என்று நீதிபதி கூறினார்.

திருடு போன விவரமும், முதல் விசாரணை பற்றிய விவரமும் நகரம் முழுவதும் பரவியது. கட்டிலை திருட்டுக்காக விசாரிக்கப் போகிறார்கள் என்ற விவரமும் பரவலாகப் பரவியது. இது போன்ற வழக்கு விசாரணை முன்பு எப்போதும் நடைபெற்றதில்லை என்பதால், நகரம் முழுவதும் இது பற்றியே பேச்சாக இருந்தது.

எனவே வழக்கு விசாரணைக்கு வந்த போது, நீதிமன்றத்தில் மிகவும் கூட்டமாக இருந்தது. காவல்துறையினர் கட்டிலைக் கொண்டு வந்து சிறைக்கைதிகள் இருக்கும் இடத்தில வைத்தார்கள். கட்டிலின் மீது அதிகாரபூர்வமாகக்

குற்றம் சாட்டப்பட்டது. பதிலுக்குக் கட்டில் எதுவும் சொல்லாமல் இருக்கவே, நீதிபதி அதன் குற்றத்தை ஒப்புக் கொள்ளும் வரை அடிக்குமாறு காவலர்களுக்கு உத்தரவிட்டார். அவர்களும் கட்டிலை பலவாறாக அடிக்க, கட்டிலும் மொத்தமாக உடைந்து விழுந்தது. தண்டனை நிறைவேற்றப்படும் போது, முதலில் ஆச்சர்யமாகப் பார்த்த மக்கள், சிறிது நேரத்திலேயே அவர்கள் பார்த்துக் கொண்டிருந்த காட்சியின் விசித்திரம் அவர்களுக்கு உறைத்தது. கட்டில் உடைந்து விழுந்த போது, பார்த்துக் கொண்டிருந்தவர்கள் விழுந்து, விழுந்து சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் சிரிப்பதைக் கண்டு எரிச்சலடைந்த நீதிபதி, அவர்கள் நீதிமன்றத்தை அவமதித்து விட்டதாகக் கூறி, நீதிமன்றத்தின் அனைத்து வாயில்களையும் அடைந்துவிட்டார். சிரித்த ஒவ்வொருவரும் ஒரு பவுண்டு பூண்டை அபராதமாகக் கட்டவேண்டும் என்றும் சொல்லிவிட்டார். அதன் பின்னரே அவர்கள் வெளியே செல்ல அனுமதிக்கப்படுவார்கள் என்றும் கூறிவிட்டார். வெளியே சென்று பூண்டு வாங்க விரும்பியவர்களுடன் காவலர்கள் துணையாக அனுப்பப்பட்டார்கள். வெளியே செல்ல விரும்பியவர்கள் சில காசுகளைச் செலவழித்து, பூண்டை வாங்கிக் கொடுத்து விட்டுச் சென்றார்கள்.

அன்றைய நாள் முடிந்த போது, நகரின் சந்தையில் இருக்கும் பூண்டு அனைத்தும் வாங்கப்பட்டுவிட்டது. நகரின் அருகில் இருந்த அனைத்து இடங்களில் இருந்த பூண்டும் வாங்கப்பட்டு, அபராதமாக நீதிமன்றத்தில் செலுத்தப்பட்டது. ஒவ்வொருவரும் தங்களது அபராதத்தைக் கட்டும் போதும், அவர்கள் எங்கே பூண்டை வாங்கினார்கள் என்று கேட்கப்பட்டு, அது பதிந்து வைத்துக் கொள்ளப்பட்டது.

அனைவரும் அபராதம் கட்டி முடித்தவுடன், நீதிபதி ஏழையைக் கூப்பிட்டு, அங்கிருந்த பூண்டு செடிகளைப் பார்த்து, அதில் அவனுடையது எதாவது இருக்கிறதா என்று கேட்டார். அவனும், அதில் இருந்த சில செடிகள் அவனுடையதே என்று கூறினான். அவர்கள் பதிந்து வைத்திருந்த விவரங்களைப் பார்த்து, அந்தச் செடிகளை விற்ற கடை எது வென்று பார்த்த பொழுது, அவை அனைத்தும் ஒரே இடத்தில் வாங்க பட்டிருப்பது தெரிய வந்தது. அந்தக் கடைக்காரன் கைது செய்யப்பட்டு, அவன் எங்கே திருட்டுப் பொருட்களை வாங்கினான் என்று கேட்கப்பட்டது. அவனும் தான் அதை ஒரு கிராமத்து மனிதனிடம் இருந்து வாங்கியதாகவும், அதைத் தவிர வேறெதுவும் தெரியாது என்றும் கூறிவிட்டான். அந்தக் கிராமத்து மனிதன் கைது செய்யப்பட்டு, அவன் மீது திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டது. நீதிபதி அவரது நுண்ணறிவுக்காக அனைவராலும் பாராட்டப்பட்டார்; திருட்டை செய்தவனுக்கு நாற்பது கசையடிகள் கொடுக்கப்பட்டது; திருடுகொடுத்த ஏழை தோட்டக்காரனுக்கு அபராதமாகக் கொடுக்கப்பட்ட அனைத்து பூண்டுகளும் அவனிடமே கொடுக்கப்பட்டது.

ΔΔΔ

**"துரதிர்ஷ்டவசமாக, இந்தக் கதையில் சொல்லப்பட்டிருப்பது பழைய காலத்து நீதிபதி. இன்றைய காலத்து நீதிபதி அல்ல. படித்தவர்களில் யாரேனும் திரு.ஹாடினின் வழக்கை எடுத்துக் கொண்டால், அவரை விடுதலை செய்து விடலாம்." என்று அங்கிருந்த மாமா ஒருவர் கூறினார்.**

**சென்ஷு "என்னுடன் படித்த மாணவர்களில் ஒருவன், அவனது சட்டபடிப்பை முடித்து விட்டு வரப்போகிறார். அவர் எனது தந்தையைச் சிறையில் இருந்து வெளியே கொண்டுவர உதவுவார்." என்று கூறினாள்.**

**அவர்கள் அங்கிருந்து கலைந்து செல்வதற்கு முன், சென்ஷு, அவர்களின் தலைநகரத்திற்குச் செல்ல வேண்டும் என்றும், அங்கு ஜின்ஷி மற்றும் சாங்ஜியின் உதவியை அவர்களது தந்தையின் வழக்கிற்குக் கேட்பது என்றும் முடிவு செய்தார்கள். எனவே முன்போலவே, ஆண் வேடமணிந்து, தன் மாணவர் உடைகளை அணிந்து கொண்டு, வழியில் பல தங்கும் விடுதிகளில் தங்கிக் கொண்டே சென்றாள். அப்போது பல வழிப்போக்கர்களைச் சந்திக்கவும் செய்தாள். ஒரு இரவில், அவளுக்குத் தனியாகத் தங்க அறை கிடைக்கவில்லை. எனவே, பல பிரயாணிகள் போலப் பொது அறையில், ஒரு ஓரத்தில் சாய்ந்து தூங்க வேண்டியதாகப் போனது. கொசுக்களும், வெப்பமும் அவர்களைத் தூங்க முடியாமல் செய்யவே, விழித்திருந்த ஒரு பிரயாணி கதைகளைச் சொல்லலாம் என்று கூறினார். அவரே முதல் கதையைச் சொல்லி ஆரம்பிக்கவும் செய்தார்.**



கஞ்சன் ஒருவன் பிரயாணம் செய்து கொண்டிருந்தான். அவன் வழியில் சமைத்து உண்பதற்காக அரிசியும், அதனுடன் தொட்டுக்கொள்ள உப்பிட்ட இறாலும் கொண்டு சென்றான். அரிசிக்குத் தேவைப்பட்ட போதெல்லாம் இறாலை மோந்து கொண்டான். இப்படியாக அவன் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது, அருகிலேயே இன்னொருவன் தன்னுடைய சாப்பாடு குச்சிகளை ஒரு சிறிய ஜாடிகளுக்குள் விட்டு, எதையும் எடுக்காமல் வாயில் வைத்துக் கொள்வதைப் பார்த்தான். அவனை விடக் கஞ்சத்தனமாகச் சாப்பிடும் அவன் யார் என்று அவனுக்கு அறிந்து கொள்ள ஆர்வமாக இருந்தது. எனவே அவனிடம் சென்று, அவன் என்ன செய்கிறான் என்று கேட்டான். அவனும், முதல் கஞ்சன் சுருக்கமாகச் சாப்பிடுவதைப் பார்த்திருந்த அவன், தன்னுடைய ரகசியத்தைச் சொல்ல ஆர்வமாகவே இருந்தான். தான் ஜாடியில் உப்புத்தண்ணீரை வைத்திருப்பதாகவும், அவனுடைய சாதத்திற்குக் கொஞ்சம் தொட்டுக்கொள்ள வேண்டிய போது அதைத் தொட்டுக் கொள்வதாகத் தெரிவித்தான்.

இருவரும் அவர்களது கஞ்சத்தனத்தை எண்ணி பெருமைபட்டுக் கொண்டனர். ஒன்று போன்ற மனங்களின் இடையே மட்டும் தோன்றும் நட்பு அவர்களிடையே தோன்றியது.

உப்புநீரை தொட்டுக் கொண்டவனுக்கு ஒரு மகன் இருப்பதாகவும், இறாலை மோப்பம் பிடித்தவனுக்கு மகள் இருப்பதாகவும் தெரிந்தவுடன், அவர்கள் இருவருக்கும் திருமணம் செய்ய முடிவு செய்தனர். இவ்வாறாகத் தங்களது உறவை பலப்படுத்திக் கொண்டு, அவர்கள் செல்ல வேண்டிய இடங்களுக்குச் சென்றனர். உப்புநீர் தொட்டுக் கொண்டவன் வீட்டிற்குச் சென்றதால், அவன் முதலில் சென்றுவிட்டான். இறால் மனிதன், இன்னமும் சில நாட்கள் சென்று அந்த வழியாகச் சென்ற போது, அவனது புதிய உறவினரை பார்த்து செல்ல முடிவு செய்தான். அவனை மிகவும் மகிழ்வுடன் வரவேற்று, உபசரித்த உப்புநீர் மனிதன், உடனடியாக ஆறு இஞ்சுகளுக்குக் குறையாத நீளமுள்ள மீன் ஒன்றை வாங்கி, இரவிற்குச் சமைக்க வேண்டும் என்றும் கூறிவிட்டான். மீன் கொண்டு வரப்பட்டவுடன், அது ஒரு வேளை சமையலுக்கு மிகவும் அதிகமாக இருப்பதாகக் கருதி, அதை இரண்டாக வெட்டி, தலைப்பகுதியை ஊறப் போட்டுவிட்டு, வால் பகுதியை பொரித்துவிட வேண்டும் என்றும் கூறினான். இறால் மனிதன் உண்ண அமர்ந்த போது, இந்த ஆடம்பரமான விருந்தைப் பார்த்து, தான் இன்னொரு முறை அவனுக்கு அப்படியான செலவை வைக்க விரும்பாததால், காலையில் உணவிற்கு முன்பே கிளம்பப் போவதாகத் தெரிவித்தான். அதன் பின்னும், தான் இப்படியாகச் செலவு வைத்துவிட்டதற்குப் பல முறை மன்னிப்பு கேட்டுக் கொண்டிருந்தான்.

அங்கிருந்து கிளம்பி வீட்டிற்கு வந்து சேர்ந்த போது, அவனது வீட்டிற்கு ஒரு விருந்தாளி வந்திருப்பதைப் பார்த்தான். அவன் மனைவி கூறியது போல, ஒரு பையை எடுத்துக் கொண்டு சாப்பிட எதாவது வாங்க கிளம்பினான். மலிவாக என்ன வாங்குவது என்று யோசித்துக் கொண்டே சென்றவனுக்கு, முந்தைய தினம் நடந்தது நினைவிற்கு வந்தது. உடனே ஒரு சிறுவனைக் கடிதத்துடன் அனுப்பினான்: "என் வீட்டிற்கு எதிர்பாராதவிதமாக ஒரு விருந்தாளி வந்துவிட்டார். உங்கள் வீட்டில் இருக்கும் ஊற வைத்த மீனை அனுப்பி வைத்தால், என் வீட்டை அது அலங்கரிக்கும்."

சிறுவனும் சிறிது நேரத்தில் மீனுடன் வந்தான். அதனுடன் ஒரு கடிதம் இருந்தது: "நீங்கள் கேட்டதனால் இத்துடன் மீனை அனுப்பி வைத்திருக்கிறேன். ஆனால் அதில் நீரை சேர்த்து மென்மையாக்க வேண்டாம். கடினமாகும் வரை வறுத்து எடுக்கவும். அதனால் சாப்பிடும் குச்சிகள் அதைப் பாதிக்காது. கடினமாக வறுத்து எடுத்தால், எனக்குத் திருப்பிக் கொடுக்கும் போது அப்படியே இருக்கும்."



சென்ஷு தங்கியிருந்த விடுதியின் சொந்தக்காரரின் மகன் அனைவர்க்கும் தேநீர் கொண்டு வந்து கொடுத்தான். கொடுக்கும் போது, மனிதர்கள் பெரும் தொகையை உடனடியாகக் கொடுப்பதற்கு யோசிப்பதில்லை என்றும், ஆனால் சிறு தொகையைப் பல தவணைகளாகக் கொடுப்பதற்கு வெகுவாக யோசிக்கிறார்கள் என்றான். அவனுடைய உறவினர்களில் ஒருவருக்கு மூன்று மகன்களும், மூன்று மருமகள்களும் இருந்தார்கள். அவர்கள் அனைவரும் ஒரே இடத்தில், ஒன்றாக வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் குடும்பம் பெரிதாகிவிடவே, ஒவ்வொருவருக்கும் வீட்டை கட்டிக் கொடுத்து, தன்னுடைய நிலங்கள் அனைத்தையும் பிரித்துக் கொடுத்துவிட்டார். அவர்கள், அவரை விட்டுச் செல்லும் போது, அவர் தனது மருமகள்களை அழைத்து, அவர்கள் அங்கிருக்கும் சாமான்கள் எதையும் எடுத்துச் செல்லக் கூடாது என்றும், அவர்களுக்கு என்ன தேவை என்று கூறினால் தான் அவற்றை அவர்களுக்கு வாங்கித் தந்துவிடுவதாகக் கூறினார். முதல் மருமகள் தனக்குத் தேவையானவற்றை ஒவ்வொன்றாகக் கூறினாள். சாமான், சட்டிகள், பானைகள், கரண்டி, ஜாடிகள், கோப்பைகள், தட்டுகள் என இன்னமும் பல சாமான்களை அடுக்கிக் கொண்டே சென்றாள். அப்போதுதான் இந்தப் பட்டியலை ஆரம்பித்திருப்பதாக எண்ணிய போதே, அவர் அவளை நிறுத்த சொல்லி விட்டார். கோபத்துடன் அவளை அனுப்பியும் விட்டார். இரண்டாவது மருமகள் இதற்குள் தன்னுடைய பட்டியலை ஒரு தாளில் எழுதி வைத்திருந்தாள். பட்டியலை மரச்சாமான்கள், படுக்கை, சமையலறை என்று பிரித்தும் எழுதி வைத்திருந்தாள். அவள் மீதும் கோபப்பட்ட அவர், தன்னை ஏழையாகச் செய்ய முயல்வதாகக் கூறி, அவளையும் அனுப்பிவிட்டார். மூன்றாவது மருமகள் வந்த போது, அவள் மிகவும் எரிச்சலில் இருந்தார். அவளுக்கு எவ்வளவு பொருட்கள் வேண்டும் என்று கேட்டார். அவள் தனக்கு ஒரே பொருள்தான் வேண்டும் என்றாள். அதை அவளுக்குத் தருவதாக அவர் கூறியவுடன், அவள் தனக்குப் பணமாகத் தரக்கேட்டு, ஒரு தொகையைச் சொல்லிவிட்டாள். அவரும், அதை அவளுக்குத் தந்துவிட்டாள். அவளுடைய அண்ணிகள் கேட்டதைவிட அதிகமான பொருட்களை அதைக் கொண்டு வாங்கிய அவள், தனக்குச் சிறிது தொகையை வைத்துக் கொள்ளவும் முடிந்தது.

குதிரைவாலால் செய்யப்பட்ட தொப்பியில் சிவப்பு பட்டு துணியைச் சேர்த்து அணிந்திருந்த ஒருவர், சில மனிதர்கள் அவர்கள் ஊரில் கன்பியூசியஸ் கோயில் கட்டுவதற்கு ஆயிரம் வெள்ளிகளைத் தந்தாலும், அவர்களது மனைவிகள் விளக்குமாறு வாங்க சில செப்புக் காசுகள் கேட்டால் கோபித்துக் கொள்வார்கள் என்றார்.

சென்ஷுவிற்கும், தான் பெண் என்று தெரியவந்தால் ஜின்ஷி, இப்போது தன்னை ஆண் என்று சமமாக நடத்துவதைப் போலவே நடத்துவானா என்று சந்தேகம் வந்தது. அதை யோசிக்க, யோசிக்க அவளுடைய மனம் கலங்கியது. அதற்குள் அங்கு இருந்த பிரயாணி ஒருவர், மேலே சொன்ன கதை அவருக்கு இன்னொரு கதையை நினைவுக்குக் கொண்டு வருவதாகக் கூறி, கதையைச் சொல்ல ஆரம்பித்தார்.



அந்த நாட்டிலேயே பெரும் கஞ்சனாக அறியப்பட்டிருந்த ஒருவன், உலகத்திலேயே பெரும் கஞ்சனாக இருந்த ஒருவனைப் பற்றிக் கேள்விப்பட்டான். அவன் தனது மகனிடம் "நாம் இப்போது சிறிது செலவு பண்ணியே வாழ்ந்து வருகிறோம். இன்னமும் சிக்கனமாக ஒன்றும் செலவே செய்யாமல் வாழ்ந்து விடலாம். எனவே, இன்னமும் சிக்கனமாக வாழ்வது எப்படி என்று உலகில் பெரிய கஞ்சனிடம் சென்று கற்றுக் கொள்ளலாம்." என்றான். அதற்கு அவனது மகனும் ஒத்துக் கொண்டான். எனவே, அந்தப் பெரும் கஞ்சனிடம், மகன் சென்று, அவர் கற்றுக் கொடுக்க ஒத்துக் கொள்வாரா என்று விசாரிப்பது என்று முடிவு செய்தார்கள். அப்படிச் சென்று பார்ப்பதற்குப் பரிசைக் கொண்டு செல்ல வேண்டும் என்பதால், கஞ்சனும் மகனுக்கு ஒரு காசை கொண்டு சென்று இருப்பதிலேயே மலிவான தாளை வாங்கி வருமாறு கூறினான். அவனும் பேரம் பேசி ஒரு காசிற்கு இரண்டு தாள்களை வாங்கிவந்தான். அவனுடைய தந்தையும் அதில் ஒரு தாளை எடுத்து வைத்துக் கொண்டு, இன்னொரு தாளை பாதியாகக் கிழித்து, ஒரு பாதியை அவனிடம் கொடுத்தான். மகனும் அந்தப் பாதித் தாளில் ஒரு பன்றியின் தலையை வரைந்து, அதை ஒரு பெரிய கூடையில், உண்மையான பன்றி தலையை வைப்பது போல வைத்துக் கொண்டு சென்றான். அங்கிருந்து நீண்ட பயணம் செய்து உலகிலேயே பெரிய கஞ்சனின் வீட்டிற்குச் சென்றார்.

அப்போது கஞ்சன் வீட்டில் இல்லை. எனவே அவரது மகன் வரவேற்றான். அவன் எதற்காக வந்திருக்கிறான் என்பதைத் தெரிந்து கொண்டு, பரிசையும் பெற்றுக் கொண்டான். கூடையில் இருந்து பன்றியின் தலை சித்திரத்தை எடுத்துக் கொண்ட அவன், மிகவும் வருத்தத்துடன் "நீங்கள் கொண்டு வந்திருக்கும் பன்றி தலையைப் போல விலையுயர்ந்த பொருள் எங்கள் வீட்டில் இல்லை என்று வருந்துகிறேன். இருந்தாலும், நீங்கள் இவ்வளவு தூரம் வந்திருப்பதை மதித்து, நான்கு ஆரஞ்சு பழங்களை நான் இந்தக் கூடையில் வைக்கிறேன்." என்றான்.

இப்போது அவன், கைகளில் ஆரஞ்சு பழங்கள் இல்லாமலேயே, கூடைக்குள் அவற்றை வைப்பது போலக் கைகளிலேயே சைகை செய்தான். நாட்டின் பெரிய கஞ்சனின் மகன் இதைப் பார்த்துக் கொண்டு, தன்னை விடக் கஞ்சத்தனத்தில் மிஞ்சியவனின் சிக்கனத்தைச் சொல்ல, அவனது தந்தையிடம் சென்றான்.

உலகின் மிகப்பெரிய கஞ்சன் திரும்பியவுடன், அவனது மகன் அங்குக் கஞ்சத்தனத்தைக் கற்றுக் கொள்ள வந்திருந்தவனைப் பற்றிக் கூறினான். கஞ்சனும், அவன் என்ன பரிசைக் கொண்டு வந்தான் என்று கேட்டான். மகனும், தாளில் வரையப்பட்டிருந்த பன்றியின் தலையைக் கொண்டு வந்து காட்டினான். அதைப் பார்த்துவிட்டு, பதிலுக்குப் பரிசாக அவன் என்ன கொடுத்தான் என்று கேட்டான். அவன் மகனும், தான் நான்கு ஆரஞ்சுகளைக் கொடுத்ததாகக் கூறி, அதை எப்படி அவன் கூடையில் வைத்தான் என்று தன் கைகளில் சைகை செய்து காண்பித்தான். அதைப் பார்த்த அவனது தந்தை மிகுந்த கோபம் கொண்டு, அவன் மகனின் காதுகளைத் திருகி "அடப்பாவி! இப்படி விரல்களை அகலமாக வைத்தால், நீங்கள் பெரிய ஆரஞ்சுகளைக் கொடுத்திருக்கிறாய். சிறிய ஆரஞ்சுகளாகக் கொடுத்திருக்கலாமே?" என்றான்.



அப்போது ஒரு பருமனான மனிதன், தனக்கு ஒரு கதை நினைவுக்கு வருவதாகக் கூறினான்.

ஆனால் அதை ஆரம்பிப்பதற்கு முன்பு, சட்டென்று தனது காலணியைக் கழட்டி, அங்கு இருந்த சாம்பல் நிற பல்லியை அடித்தான். அதை எடுத்து போட்ட பின்னர், அவர்களின் பேச்சு இது போன்ற சிறிய விஷப்பிராணிகளைப் பற்றித் திரும்பியது. பல்லியை தின்றதாக எண்ணி, சாவின் வாசலை எட்டிப்பார்த்த தன்னுடைய உறவினரை பற்றிக் கூறினான். தன்னுடைய மதிய உணவை சமைத்துக் கொண்டிருந்த போது, பானையை மூடாமல் விட்டு விட்டதால், அதன் உள்ளே ஒரு பல்லி விழுந்துவிட்டது. அன்றைய மதியம் கஞ்சியில் இருந்த பல்லியின் வாலை கடித்துவிட்டான். எனவே தான் முழுப் பல்லியையும் தின்றுவிட்டதாக எண்ணினான். அன்றிலிருந்து அவனது பசியும் போய்விட்டது. கொஞ்சகொஞ்சமாக மிகவும் பலவீனமாகவும், நோய்வாய்பட்டவனாகவும் உணர ஆரம்பித்தான். தான் மரணத்தை நோக்குச் செல்வதாக அவனுக்குத் தெரிந்தது. நகரில் இருந்த பெரிய மருத்துவர்களிடம் எல்லாம் சென்று பார்த்தான். அவர்களும் பல மருந்துகளும் கொடுத்து பார்த்தார்கள். எதற்கும் பயனில்லை. இறுதியாக அங்குப் போலி மருத்துவம் பார்த்து வந்த ஒருவன் இதைப் பற்றிக் கேள்விப்பட்டான். அவனுக்கு நிகழ்ந்த கதையையும் ஓரளவிற்குப் புரிந்து கொண்டான். அவனே நோயாளியிடம் வந்து தான் அவன் உயிரைக் காப்பாற்றுவதாகவும், அப்படிச் செய்தால், அவன் நலமான பின்னர், நல்ல முறையில் தனக்குப் பணம் தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டான். இதற்கு ஒத்துக் கொண்டவுடன், தன்னிடம் மிகவும் விலையுயர்ந்த, சக்தி வாய்ந்த மருந்து ஒன்று இருப்பதாகவும், அது எந்த விஷத்தையும் முறித்துவிடும் என்றும் கூறி, ஒரு குளிகையை அவனிடம் கொடுத்தான். நோயாளியும் அதை உட்கொண்டான். அவனுக்கு வாந்தி வர ஆரம்பித்தது. அப்போது, போலி மருத்துவனும் தான் முன்னமே கொண்டு வந்திருந்த, வேகவைத்த பல்லியை அதனுள்ளே போட்டு விட்டான். அதை நோயாளியிடம் காட்டி, அது அவனது வாயில் இருந்து வெளியே வந்து விட்டதாகக் கூறினான். நோயாளியும் தன்னுடைய வயிற்றில் இருந்து விஷம் வெளியேறிவிட்டதாக மகிழ்ந்தான். அப்போதிருந்து அவன் தன்னுடைய தேகபலத்தைத் திரும்பப் பெற்றான். மருத்துவனுக்கும், அவனுடைய திறமையைப் பாராட்டி நிறையப் பணம் கொடுத்தான். அவனுடைய புகழும் வெகுவாகப் பரவியது.

"'கற்பனை வியாதியை போலி மருத்துவன் குணப்படுத்தலாம். உண்மையான வியாதியை, எந்த மருந்தும் குணப்படுத்த முடியாது.' என்று பழமொழி சொல்கிறது." என்றாள் சென்ஷூ. பருமனான மனிதனிடம் கதையைச் சொல்ல சொல்லி கேட்டாள். அவனும் சொல்ல ஆரம்பித்தான்.



நகரில் ஆசிரியராக இருந்த ஒருவர், விடுமுறைக்காகத் தன்னுடைய கிராமத்திற்குத் திரும்பிக் கொண்டிருந்தார். தன்னுடைய விடுமுறை சம்பளமான பத்து அவுன்சு வெள்ளிப் பணத்தையும் கொண்டு வந்து கொண்டிருந்தார். தன்னுடைய மனைவி, குழந்தைகளைப் பார்ப்பதற்காக வேகமாகச் சென்று கொண்டிருந்தார். வழியில் ஒரு பெண், தன்னுடைய கைக்குழந்தையோடு நிற்பதைப் பார்த்தார். அவளுடைய கணவன் பத்து அவுன்சு வெள்ளிக் கடனிற்காகச் சிறையில் அடைக்கப்பட்டிருப்பதாகச் சொல்லவே, அவரும் தன்னிடம் இருந்த பணம் அனைத்தையும் அவளிடம் கொடுத்துவிட்டார். வெறும் கையோடு வீடு திரும்பினார்.

அவர் வீட்டுக்கு திரும்பியவுடன், அவரது மனைவி கிராமத்தில் எல்லா வணிகர்களிடமும் தங்களுக்கு இருக்கும் பாக்கி பற்றியும், மற்ற கடன்கள், வீட்டு செலவுகளுக்கும் தேவையான பணம் பற்றியும் பேசிக் கொண்டிருந்தாள். எனவே, அவனும் தன்னுடைய சம்பளத்தை முழுவதுமாக ஒரு ஏழைப்பெண்ணிற்குக் கொடுத்து விட்டதைப் பற்றிக் கூறினார். அவளும், அருகில் இருக்கும் கருமானிடம் சென்று, அவரது கருவிகளைக் கடன் வாங்கி, அருகில் இருக்கும் வீடுகளுக்குச் சென்று, அவர்களது வாளி, தொட்டி போன்றவற்றைச் சரிசெய்து ஏதேனும் சம்பாதித்தால், விடுமுறை நாட்களில் செலவை சமாளிக்க உதவும் என்று கூறினாள். தன்னுடைய அவசர கருணையினாலேயே அவள் அப்படிக் கூறுகிறாள் என்பதை உணர்ந்த ஆசிரியரும், அவள் சொல்வது போலவே நடந்து கொள்வதாகத் தெரிவித்து விட்டார். அது போலவே கருவிகளைக் கடன் வாங்கிக் கொண்டு, அப்போதைக்குக் கருமானாக ஆனார். முதலாவதாக, ஒரு படிக்காத, பணக்கார வயதான தம்பதிகள் இருக்கும் வீட்டில் இருந்த குளியல் தொட்டியை சரி செய்ய ஆரம்பித்தார். அப்போது, அந்தத் தம்பதிகள் இருவரும் தங்களுக்கு வந்த கடிதம் பற்றிப் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டார். அந்தக் கடிதத்தில் இருப்பதை அவர்களாலும், அவர்களது அருகில் இருப்பவர்களாலும் புரிந்து கொள்ள முடியவில்லை என்று பேசிக் கொண்டிருந்தார்கள். ஆசிரியர் தான் அதை வாசித்து வாசித்துக் காட்டுவதாகக் கூறினார். கருமான் ஒருவனிடம் தங்களது கடிதத்தைக் கொடுப்பதா என்று சற்று யோசித்த அவர்கள், ஆசிரியரிடம் கடிதத்தைக் கொடுத்தார்கள். அந்தத் தம்பதியினர் படிப்பறிவில்லாதவர்கள் என்று தெரிந்த ஒருவர் அதை எழுதியிருக்க வேண்டும் என்று தெரிந்தது. இல்லை, அதில் வரைந்திருந்தது. அதில் முதலில் ஒரு வாத்துப் படம் இருந்தது. அருகிலேயே ஒரு சிறு தோட்டம் இருந்தது; ஒரு வயதான மனிதன் வாத்தின் அருகே இருந்தான்; ஒரு நதி, பிளம் மரம் அதன் கரையில் இருந்தது. மரத்தின் அடியில் நான்கு ஆமைகள் இருந்தன.

ஆசிரியர் அந்தக் கடிதத்தைப் பார்த்தார். உடனே "இது உங்களது தத்துப் பிள்ளையிடம் இருந்து வந்திருக்கிறது." என்றார். "அது எப்படி உனக்குத் தெரியும்?" என்று வயதானவர் கேட்டார். "ஒருவர் தன்னுடைய தோட்டத்தில் இருந்து கிடைக்கும் உணவைப் போட்டு வாத்துகளை வளர்ப்பது, தத்துப் பிள்ளைகளும் எளிமையாகப் பெறப்பட்டு, வளர்ப்பதை குறிக்கிறது. இந்தப் படத்தில் இருக்கும் வயதானவர் வாத்தை பார்த்துக் கொண்டிருப்பது போல நீங்கள் உங்கள் தத்துப்பிள்ளையிடம் இருந்து கடிதத்தை எதிர்பார்த்து இருக்கிறீர்கள். அவன் உங்களுக்குப் பணம் அனுப்ப வேண்டும் என்று எதிர்பார்க்கிறீர்கள். அதை நதிக்கு அருகில் இருக்கும் திரு.பிளம்மிடம் இருந்து பெற்றுக் கொள்ளச் சொல்கிறார். அதைத்தான் நதிக்கு அருகே இருக்கும் பிளம் மரம் குறிக்கிறது. அவரிடம் உங்களுக்குக் கொடுப்பதற்குப் பதினாறு வெள்ளி இருக்கிறது. நான்கு ஆமைகளின் பதினாறு கால்கள் அதைக் குறிக்கின்றது." என்றார்.

ஆசிரியர் கடிதத்தை வாசித்துக் காட்டியது, வயதானவருக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தந்தது. அது உண்மையா என்று தெரிந்து கொள்ள விரைந்தார். அதில் இருந்த அனைத்தும் உண்மை என்று அறிந்து கொண்ட பின்னர்,

அவர் ஆசிரியருக்கு ஒரு பன்றியின் தலையைப் பரிசாகக் கொண்டு வந்தார். அதைப் பெற்றுக் கொண்டவுடன், ஆசிரியர் பன்றித்தலை மிகவும் உயர்ந்த தரமானதாக இருப்பதை அறிந்தார். எனவே, அதைப் பாடலாகப் பாடினார்.

"[illegible]

[illegible]

[illegible]

[illegible]"

பன்றியை நன்கு விவரித்துச் சொல்லப்பட்ட இந்தப் பாடல், வயதான தம்பதியினரை இன்னமும் கவரவே, அவர்கள் ஆசிரியரை பாராட்டி இன்னமும் பத்து அவுன்சு வெள்ளியை சன்மானமாகக் கொடுத்தார்கள். அவரும் மிகவும் திருப்தியுடன் வீட்டிற்குச் சென்றார். கருமானின் வீட்டிற்குச் சென்று, அவரது மனைவிடம் நடந்ததை எல்லாம் கூறி, கருமானின் மனைவியிடம் தான் கடனாக வாங்கிச் சென்றவற்றை எல்லாம் திரும்பக் கொடுத்தார். கருமானின் மனைவியும், அவர் பன்றித்தலையைப் பற்றிப் பாடிய பாடலை மிகவும் விரும்பினாள். அந்தப் பாடலுக்குக் கொடுக்கப்பட்ட பெரிய விலையும் அவளைக் கவர்ந்தது. மறுநாள் கருமான் வேலைக்குக் கிளம்பியபோது, அவரிடம் பாடலை சொல்லி, அன்று தகுந்த சந்தர்ப்பத்தில் யாரிடமாவது பாடி பரிசு பெற வேண்டும் என்று சொன்னாள். அவன் அன்று சென்ற முதல் வீட்டில், நல்ல பணக்கார தம்பதி இருந்தார்கள். அதில் மனைவி மிகவும் பருமனாக இருந்தாள். கருமான் தொட்டிகளைச் சரிசெய்து கொண்டிருந்த போது, அவள் சமயலறையில் இருந்தாள். வேலை முடிந்ததும், அவர்கள் அவனுக்குச் சம்பளம் தர வந்த போது, அவனுக்குப் பாடல் ஞாபகத்திற்கு வந்தது. பருமனான மனைவியைப் பார்த்துக் கொண்டு,

"[illegible]

[illegible]

[illegible]"

இந்த இடத்தில், மிகுந்த கோபமடைந்த கணவன், ஒரு கட்டையை எடுத்துக் கொண்டு, கருமானை அடித்துத் துரத்தி, அந்தப் பக்கமே திரும்ப வரக் கூடாது என்று சொல்லிவிட்டான். எனவே கருமான், பணமும், பரிசும் இல்லாமல் வீட்டிற்குத் திரும்ப வேண்டியதாகியது.

எனவே, அறிவுடையவர்கள், படிக்காதவர்கள் கருவியைக் கற்றுக்கொண்டு உபயோகிக்கலாம். அறிவில்லாதவர்கள், படித்தவர்கள் போல அறிவை உபயோகிக்கமுடியாது.

ΔΔΔ

**"என் கதை சிறியது. 'அரவை முடிந்த பின்னர் ஆலைக்கு' வந்தவனைப் போல, நான் இப்போதுதான் விழிக்கிறேன்." என்று தூக்கத்தில் இருந்து எழுந்த பருமனான சக்கரை வியாபாரி, அடுத்த கதையை ஆரம்பித்தான்.**



தங்களது குழந்தைகளின் மூலமாக உறவான இரண்டு கிழவர்கள், தங்களுக்குள் யார் நல்ல மரச்சாமான்கள் வைத்திருக்கிறார்கள், நல்ல ஆடை அணிகிறார்கள் என்று போட்டி போட்டுக் கொண்டு இருந்தார்கள். அடுத்தவரை விட நல்ல ஆடையோ, பொருளோ வாங்கிவிட்டால், மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார்கள். ஒரு முறை, ஒரே நேரத்தில், அவர்கள் இருவரும் புதிய பொருட்களை வாங்கினார்கள். ஒருவர் நல்ல மரக்கட்டிலையும், இன்னொருவர் புதிய பட்டு கால் சட்டையும் வாங்கியிருந்தார்கள். இருவரும் அதைத் தாங்களே முன் சென்று அதைப் பற்றிச் சொல்லிக் கொள்ள விரும்பவில்லை. எனவே, அவர்கள் இருவரும் வீட்டிலேயே இருந்து கொண்டு, தங்களுக்கு நோய் வந்திருப்பது போல இருந்தார்கள். இதனால் மற்றவர் தங்களைப் பார்க்க வரும் போது, தங்களது புதிய பொருளைக் காட்டி பெருமை அடிக்கலாம் என்று எண்ணினார்கள். எனவே மரக்கட்டில் வாங்கியிருந்த கிழவர், கட்டிலில் படுத்துக் கொண்டு, எப்போது தன்னைப் பார்க்க மற்றவர் வருவார் என்று காத்திருந்தார். மற்றவரோ, தன்னுடைய பட்டு கால் சட்டை கசங்கிவிடக் கூடாது என்று அவரது வீட்டை விட்டு வெளியேறாமல் இருந்தார். ஏன் மற்றவர் இன்னமும் தங்களைப் பார்க்க வரவில்லை என்று ஒருவர் கட்டிலிலும், மற்றொருவர் நாற்காலியிலும் இருந்து யோசித்துக் கொண்டிருந்தனர். புதிய பட்டு கால் சட்டை வாங்கியவர் முதலில் பின்வாங்கினார். மற்றவரைச் சென்று பார்த்து விட்டு வரலாம் என்று கிளம்பினார். அவர் நேராகப் படுக்கையறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். புதிய மரக்கட்டிலைப் பார்த்தவுடன் அவருக்கு என்ன நோய் வந்திருக்கிறது என்று புரிந்து விட்டது. ஆனால் அவர் தன்னுடைய பட்டு கால்ச்சட்டையைப் பாராட்டும் வரை, தான் கட்டிலைப் பற்றி எதுவும் செல்ல போவதில்லை என்று முடிவு செய்தார். ஆனால், கட்டிலில் படுத்திருந்தவருக்குக் கால் சட்டை தெரியவில்லை. இருவரும் பலவாறு தங்களது புதிய பொருட்களுக்குக் கவனத்தை ஈர்க்க முயன்று தோற்றுப்போய்க் கொண்டிருந்தனர். இறுதியாக, படுக்கையில் இருந்தவர், தான் நோயில் இருக்கும் போது, கடந்த சில நாட்களாக ஏன் தன்னை வந்து பார்க்கவில்லை என்று கேட்டார். "ஓ!" என்ற மற்றவர், தன்னுடைய ஒரு காலைத் தூக்கி கட்டிலில் வைத்து, தன்னுடைய பட்டு கால்ச்சட்டையை நன்றாகத் தெரியுமாறு செய்து, முழங்காலில் தன்னுடைய கையை வைத்து, அவரை மிகவும் சோகத்தோடு பார்த்து, " ஓ! உனக்கு வந்திருக்கும் அதே நோய்தான் எனக்கும் வந்திருக்கிறது!" என்றார்.

நிமித்தக்காரனிடம் பேசுவது.

ΔΔΔ

அங்கு அமர்ந்திருந்தவர்களில் அடுத்தவன் தன்னுடைய வாயில் இருந்த புகை பிடிக்கும் குழலை எடுத்துக் கொண்டான். அந்தக் குழல் ஒரு யார்டு நீளம் இருந்தது. அதன் முனையில் இருந்த சிறு குழியில், தன்னுடைய உடையில் இருந்து சிறு புகையிலை பையை எடுத்து, அதில் நிரப்பி, முன் காலங்களில் தன்னுடைய நண்பனான சேமியா செய்பவனிடன் இருந்து கேள்விப்பட்ட நிகழ்ச்சியைப் பற்றிக் கூறினான். அவன் இப்போது அந்த நண்பனின் மகனை பார்க்கத்தான் சென்று கொண்டிருந்தான். அவனது கதையும் சுவாரசியமானது. அவன் சோம்பேறியாக வளர்ந்து, அவனது தந்தையின் தொழிலை கற்றுக் கொள்ளவில்லை. சூதாடியாகவும் மாறிவிட்டான். "செல்லம் கொடுக்கும் தாய், மோசமான பிள்ளைகளை வளர்கிறாள்." என்ற பழமொழிக்கு உதாரணமாக இருந்தான். அவனது தந்தை திடீரென்று மரணமடையவே, மகனால் சேமியா தொழிலை தொடர்ந்து நடத்த முடியவில்லை. எனவே, ஒரு நல்ல தொழிலாளியை வேலைக்கு வைத்துக் கொண்டான். அவனோ தொழிலில் இருந்து திருடவும், அவனது பொருட்களை வீணாக்கவும் செய்து, தொழிலை முழுவதுமாக நசிந்து போகச் செய்தான். அப்போதுதான் தந்தையிடம் இருந்து தான் தொழிலை கற்றுக் கொள்ளவில்லை என்று மகனுக்கு வருத்தமாக இருந்தது. இப்படியே அவன் வருத்தப்பட்டு, தன்னால் சேமியா செய்யமுடியவில்லை என்று வருந்திக் கொண்டிருக்கும் போது, அவனுடைய கனவில் ஒரு இரவில் அவனது தந்தை வந்து, அவனுக்குச் சேமியா எப்படிச் செய்வது என்று சொல்லிக் கொடுத்தார். எந்த விகிதத்தில் மாவு, தண்ணீர், உப்புச் சேர்க்க வேண்டும் என்று சொல்லி கொடுத்தார். எப்படி அவற்றைக் கலப்பது என்றும், மற்ற விவரங்களையும் சொன்னார். மறுநாளில் இருந்து அவனே வணிகத்தை எடுத்து நடத்த ஆரம்பித்தான். அவனது தந்தையின் நிலையை அடைந்து, நல்ல மனிதனாகவும் வாழ்கிறான்.

பலருக்கும், இப்போது, அவர்கள் கண்ட கனவுகளும், அவற்றின் விளைவுகளும் நினைவுக்கு வந்தது. அனைவரும் தங்களது கனவுகளைச் சொல்ல விரும்பினாலும், சென்ஷு, அவர்களைத் தன்னுடைய கதையைக் கேட்க சொன்னாள்.



கிழவி ஒருவளிடம் வெள்ளிக்காசுகள் இருப்பதை அறிந்த ஒருவன், அதைத் திருடுவதற்காக அவளது அறையில் இரவில் நுழைந்தான். அவள் குறட்டை விட்டு தூங்கிக் கொண்டிருந்தாள். அவனும் அவள் பணத்தை ஒளித்து வைத்திருக்கலாம் என்று எண்ணிய ஒவ்வொரு இண்டு, இடுக்கையும் தேடிப் பார்த்தான். ஆனால் அவனால் கண்டறிய முடியவில்லை. அவனால் கண்டுபிடிக்க முடியாத இடத்தில் பணத்தை ஒளித்து வைத்திருக்கும் அளவில் அவளுக்கு அறிவிருக்கிறதா என்று வியந்த அவன், எப்படியாவது அவளை ஏமாற்றிப் பணத்தைத் திருட வேண்டும் என்று நினைத்தான். அவளது காதுகளுக்கு அருகே சென்று "உனது பணத்தைத் திருட ஒரு திருடன் வந்திருக்கிறான்." என்று முணுமுணுத்துவிட்டு, கட்டிலுக்கு அடியில் சென்று ஒளிந்து கொண்டான். விழித்த கிழவி, தான் கெட்ட கனவைக் கண்டதாக எண்ணி, தான் கேட்ட குரல் கனவில் கேட்டதா அல்லது நேரில் கேட்டதா என்று சற்று நேரம் யோசித்துக் கொண்டிருந்தாள். வேகமாக எழுந்து அங்கிருந்த தொட்டியை திருப்பி, அதன் அடியில் இருந்த வெள்ளியை எண்ணி பார்த்துவிட்டு, திரும்பவும் அங்கேயே வைத்து விட்டாள். அனைத்து பணமும் அங்கேயே இருக்கவே, கனவை உண்மையென்று எண்ணிய முட்டாள்தனத்தை எண்ணிக் கொண்டே, திரும்பவும் படுக்கையில் ஏறி படுத்து கொண்டாள். எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்த திருடன், அவள் திரும்பவும் குறட்டை விடுவது வரை காத்துக் கொண்டிருந்து விட்டு, அவளது பணத்தை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.



"'படிக்காத முட்டாளும், அறிவாளியை ஏமாற்ற முடியும்.' என்பது பழமொழி; 'கிழவிகளை எளிதாக ஏமாற்றிவிடலாம்' " என்று கூறி கதையை முடித்தார்.

இப்போது சென்ஷு கதை சொல்ல வேண்டிய நேரம். பலரும் இப்போது உறங்கி கொண்டிருந்தார்கள். விழித்திருந்தவர்களும் கைகளில் விசிறியால் கொசுக்களை விரட்டிக் கொண்டிருந்தார்கள். சென்ஷு மிகவும் வேடிக்கையான கதையை சொன்னாலும், அவளது மென்மையான குரல் அவர்களை உறங்க வைத்துக் கொண்டிருந்தது.

# [illegible]

தனியாக வாழ்ந்து வந்த வயதான பெண் ஒருத்தி, 'கவிதை தெரியாதவர்கள் மீது பேய்கள் ஆட்டம் போடும்' என்பதைக் கேள்விப்பட்டிருந்தாள்; எனவே அதைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆசை வந்தது. வீட்டின் வெளியே பார்த்த பொழுது, அங்கே வயலில் வேலை செய்து கொண்டிருந்த மனிதன் ஒருவனைக் கண்டாள். வீட்டில் இருந்த இனிப்பை எடுத்துக் கொண்டு, அவனிடம் சென்றாள். தனக்கு ஒரு பாடலை கற்றுக் கொடுத்தால், அந்த இனிப்பை தருவதாகக் கூறினாள். அவனும் அதற்குச் சம்மதித்து, உடனே எடுத்து தின்றுவிட்டான். ஆனால் அதன் பின்னர் அவனும் யோசித்த வரை, அவனால் எந்தக் கவிதையையும் நினைவிற்குக் கொண்டு வர முடியவில்லை. எனவே தன்னுடன் சாலையில் வருமாறும், செல்லும் வழியில் தான் கற்றுத் தருவதாகவும் கூறினான். அப்படிச் செல்லும் போது கிடைக்கும் அவகாசத்தில் எதாவது கவிதையை நினைவிற்குக் கொண்டு வந்து, சொல்லிவிடலாம் என்று எண்ணினான். ஆனால், செல்லும் வழியில் அவனுக்கு எதுவும் நினைவிற்கு வரவில்லை. வயதான பெண்ணோ பொறுமை இழந்து கொண்டிருந்தாள். எனவே எப்படியாவது தானே ஒன்றை சொல்லிவிடுவது என்று முடிவு செய்தான். ஆனால் இதிலும் அவனால் எதையும் புதிதாகச் சொல்ல முடியவில்லை. அவளும் பொறுமையிழந்து, களைப்பாகவும் இருக்கவே, அங்கிருந்த கிணறு ஒன்றின் அருகில் சென்று அமர்ந்து கொள்ளலாம் என்று கூறினான். அங்கே அவளுக்குச் சொல்லித் தருவதாகவும் கூறினான். அங்கு அவர்கள் அமர்ந்தவுடன், கிணற்றில் இருந்து தவளை ஒன்று எட்டிப்பார்த்தது. அதையே பொருளாகக் கொண்டு, அவன் கீழ்கண்டதை சொன்னான்.

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

அவளும் இதைக் கவிதை என்று நம்பிவிட்டாள். சிறிது சிரமப்பட்டு அதை மனப்பாடம் செய்து கொண்டு, வீட்டிற்குத் திரும்பினாள்.

அன்று மாலை முழுவதும் பல முறை அதையே சொல்லிக் கொண்டு இருந்தாள். அன்று தூங்க போன பொழுதும், கடைசி முறையாக ஒரு முறை சொல்லிவிட்டே தூங்க போனாள். அன்றிரவு அவள் வீட்டிற்கு இரண்டு திருடர்கள் வந்தார்கள். அவர்களில் ஒருவன் சுவரில் கன்னம் வைத்து உள்ளே செல்ல வேண்டும் என்றும், அவன் உள்ளிருந்து பொருட்களை எடுத்துக் கொடுப்பதை வெளியில் இருப்பவன் பெற்றுக் கொள்ளவேண்டும் என்றும் முடிவு செய்திருந்தார்கள். அவன் உள்ளே தலையை நீட்டியவுடன், நன்றாகத் தூங்கி கொண்டிருந்த அவள், தூக்கத்தில் "உன் தலையை வெளியே எட்டி பார்க்கிறாய்" என்று கூறினாள்; இருட்டில் அவள் எப்படியோ தன்னைப் பார்த்துவிட்டாள் என்று அவன் வேகமாகத் தலையை உள்ளே இழுத்துக் கொண்டான். அவள் தொடர்ந்தாள். "உன் தலையை உள்ளே இழுத்துக் கொள்கிறாய்;" என்றாள். இப்போது அவனுக்கு அவள் தன்னைப் பார்த்துவிட்டாள் என்பதும், அவளுக்குத் தன்னைக் கண்டு பயமில்லை என்பதும் உறுதியாகிவிட்டது. எனவே அவன் வெளியே சென்று மற்றொரு திருடனிடம், உள்ளே இருட்டில் பார்க்கும் யாரோ இருக்கிறார்கள் என்று கூறினான். எனவே, தாடையைச் சொறிந்து கொண்டே, திரும்பவும் உள்ளே சென்று பார்க்கலாமா என்று யோசித்துக் கொண்டிருந்த போது,

[illegible]

[illegible]

இதைக் கேட்டவுடன், அவனும், அவனுடைய துணைவனும் அங்கிருந்து ஓடினார்கள். அந்த வயதான பெண்மணியால் இருட்டில் மட்டுமல்ல, சுவற்றின் வழியாகவும் பார்க்க முடிகிறது என்று இருவரும் நினைத்தார்கள். அவர்கள் இடத்தை அடைந்தவுடன், இதைப் பற்றி யோசித்தார்கள். மறுநாள் பகலில் சென்று உண்மையை அறிந்து கொள்வது என்று முடிவு செய்தார்கள். மறுநாள் கசாப்பு கடைக்காரர்கள் போல, கைகளில் பெரிய கத்தியோடு, ஒவ்வொரு வீடாகச் சென்று, அங்கே கொல்வதற்குப் பன்றிகள் இருக்கிறதா என்று கேட்டுக் கொண்டே சென்றார்கள். அவர்கள் அந்த வயதான பெண்ணின் வீட்டை அடைந்த போது, அவள் வெளியே ஒரு சட்டியை கழுவிக் கொண்டிருந்தாள். இரவு முழுவதும் அங்குக் கொசுக்கடியால் அவள் அவதி பட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது அவளை ஒரு கொசு கடித்தது. சட்டென்று தன்னைச் சுற்றி பார்த்து, கைகளில் இருந்த இரண்டு கொசுக்களை அடித்தாள். "அதோ! நேற்றிரவு வந்த அதே இரண்டுதான் போல!" என்றார்கள். அதைக் கேட்ட இருவரும், அவள் தங்களைத்தான் சொல்கிறார்கள் என்று எண்ணி, அவளுக்கு மிகவும் கூர்மையான கண்கள் என்று திரும்பவும் அந்தப் பக்கமே வரவில்லை.



சென்ஷு கதையைச் சொல்லி முடித்த போது, கதவருகே நின்று அதைக் கேட்டுக் கொண்டிருந்த வேலைக்கார பெண் அவளைக் கூப்பிட்டாள். அதை நேரத்தில் அவள் மற்ற பிரயாணிகள் கண்ணில் படாமல் ஒளிந்து கொண்டும் இருந்தாள். ஆண் வேடத்தில் இருந்த சென்ஷு, வெளியே முழு இரவின் வெளிச்சத்தில், விடுதியின் முற்றத்தில் வந்தாள். முற்றத்தில் அந்த வேலைக்காரப் பெண்ணைத் தவிர வேறு யாரும் இல்லை. முந்தைய தின மாலையில் அவள் தண்ணீர் எடுத்துக் கொண்டிருப்பதையும், அங்கிருந்த மிருகங்களுக்கு உணவு கொடுப்பதையும் பார்த்திருந்தாள். அவள், சென்ஷுவை ஒரு மூலைக்கு அழைத்துச் சென்று, "என் பெயர் மரிக்கொழுந்து. எனக்குத் தாய், தந்தை, தாத்தா, பாட்டி என யாரும் இல்லை. இங்கே நான் என்னுடைய தூரத்து உறவினரான விடுதி சொந்தக்காரருடன் இருக்கிறேன். கடுமையான வேலையும், அதைச் சரியாகச் செய்யவில்லை என்றால் அடியும் மட்டுமே எனக்கு இருக்கிறது. நீங்கள் வந்ததில் இருந்து உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். உங்களது முகத்தில் இருக்கும் சோகம் என்னை உங்கள் மீது பாவப்பட வைத்தது. உங்களுடைய கம்பீரம் என்னைக் கவர்கிறது. நீங்கள் பள்ளியில் படிக்கிறீர்கள் என்று தெரிகிறது. உங்கள் குரலும் மென்மையாக இருக்கிறது. இங்கிருந்து கிளம்பி உங்களுடன் நான் வருவதற்கு நீங்கள் சம்மதித்தால், உங்களுக்கு உண்மையாகவும், பொறுமையாகவும், மிகவும் அடக்கமாகவும் மனைவியாக இருப்பேன்." என்றாள். சென்ஷு அவளைத் தூங்க செல்ல சொல்லிவிட்டு, தான் என்ன செய்வது என்று யோசித்துச் சொல்வதாகக் கூறினாள்.

மறுநாள் காலை, சென்ஷு, விடுதி சொந்தக்காரனைப் பார்த்து, மரிக்கொழுந்தை திருமணம் செய்து கொள்வதாகச் சொல்லி, அதற்குத் தேவையான பணத்தையும் கொடுத்து விட்டாள். தான் தலைநகரில் இருந்து திரும்பும் போது, திருமணப் பரிசுகளைக் கொண்டு வருவதாகவும், மணப்பெண்ணைத் தன் வீட்டிற்கு அழைத்துச் செல்வதாகவும் கூறினாள். அங்கிருந்து தலைநகரிற்குச் சென்றாள். அங்கே ஜின்ஷி மட்டுமே இருந்தான். சாங்ஜி, அவனது கிராமத்திற்குச் சென்று விட்டான். அவர்கள் இருவரும் தேர்வை மிகவும் வெற்றிகரமாக எழுதியிருந்தார்கள். எதிர்பார்த்த மாதிரியே, அவர்கள் நல்ல முறையில் தேர்ச்சி அடைந்திருந்தார்கள். அதன் பின்னர், சாங்ஜி, தனக்கு உரிமையான பெண்ணைத் திருமணம் செய்து கொள்ள, அவளது மூத்த சகோதரனைப் பார்க்க கிராமத்திற்குச் சென்று விட்டான். ஜின்ஷி இன்னமும் சில நாட்களுக்குத் தலைநகரத்தை சுற்றி பார்க்க முடிவு செய்திருந்தான். சில நாட்கள் கழித்து, சென்ஷுவும், ஜின்ஷியும் நகரத்தில் இருக்கும் பெரிய மனிதர்கள் உதவியுடன், திரு. ஹாடினை விடுவிக்க முயற்சி செய்ய ஆரம்பித்தார்கள். அதே நேரத்தில், சாங்ஜி, சென்ஷுவின் வீட்டிற்குச் சென்றவுடன்,

அவனது வரப்போகும் மாமனாரின் சிக்கலைக் கேள்விப்பட்டு, அவனை வழக்கை எடுத்து நடத்தி, எந்தச் செலவும் இல்லாமல் அவரை விடுவித்துவிட்டான். திரு.ஹாடின், இந்த நல்ல செய்தியை சென்ஷூவிற்கு அனுப்பினார். அத்தோடு, அவர் தன்னை விடுதலை செய்த சாங்ஜியிடம், அவன் செய்த உதவிக்கு என்ன பதிலுக்கு வேண்டும் என்று கேட்ட போது, சாங்ஜி "உங்கள் மகன், தன்னுடைய இளைய சகோதரியை எனக்குத் திருமணம் செய்து தருவதாகக் கூறியிருக்கிறான். எனவே, நான் அவளைத் திருமணம் செய்து கொள்ள உங்கள் ஒப்புதல் வேண்டும். எனக்கு வேலை கிடைப்பதற்கு முன் திருமணத்தை முடித்துவிட வேண்டும் என்று நினைக்கிறேன்." என்றான். திரு. ஹாடின் அவரது மனைவியிடம் கேட்டார். அவளும் "சென்ஷூதான் இவருடன் திருமணம் செய்ய விருப்பத்தைத் தெரிவித்திருக்க வேண்டும். அவரிடம் சென்று, அவரது நண்பன் நகரில் இருந்து வரும் வரை காத்திருக்க வேண்டும் என்றும், அதன் பின்னர் நாம் இந்த முக்கியமான விஷயத்தைப் பற்றிப் பேசலாம் என்றும் சொல்லுங்கள். திருமணத்திற்கு ஒத்துக் கொண்டவளும் இங்கிருப்பதுதான் முறை. நமது 'மகன்' வரும் வரை எதுவும் செய்ய முடியாது என்றும் சொல்லி விடுங்கள்." என்றாள்.

அதே நேரத்தில், ஜின்ஷியுடன் தினமும் நெருக்கமாக வேலை செய்து வந்த சென்ஷூ, அவனது பார்வையிலும் மிகவும் நெருக்கமாக இருந்தாள். முதலில், அவர்கள் மிகவும் அருகில் இருக்கும் போதே, அவனது நண்பனின் பெண் தன்மைகளை உணர ஆரம்பித்திருந்தான். அது குறித்த சந்தேகமும் அவனுக்கு எழ ஆரம்பித்திருந்தது. சென்ஷூ இல்லாத நேரத்தில், ஒரு நாள், அவளது அறைக்குள் நுழைந்த அவன், தரையில் கிடந்த காகிதம் ஒன்றை கண்டான். அதில், அவளது கையெழுத்தில் கவிதை ஒன்று எழுதப்பட்டிருந்தது.

## குறி தவறிய அம்பு.

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

(சீன மொழியில் ஜின்ஷி என்பது தங்க கிளை என்று பொருள்படும்.)

ஜின்ஷி, கவிதையின் பொருளை வெகு நேரம் சிந்தித்துக் கொண்டிருந்தான். சரியான முடிவுக்கு வந்தவுடன், மறுநாள் சென்ஷுவின் நடவடிக்கைகளைக் கூர்மையாகக் கவனித்தான். அவனது முடிவின் உண்மை புரியவே, சென்ஷுவை தான் பெண் என்று ஒத்துக் கொள்ள வைத்தான். அப்போதுதான், தான் முதலில் அம்பை எடுத்த விவரத்தை சொல்லி, தானே அவளது மணமகனாக வேண்டும் என்றும் கூறினான்.

சாங்ஜியின் முயற்சியால் அவளது தந்தை விடுதலை அடைந்துவிட்ட செய்தி அவளை எட்டியிருந்தது. அதே நேரத்தில், அவளது தாயாரும் அவளுக்குக் கடிதம் எழுதியிருந்தாள். அவளது 'சகோதரிக்கு' வந்திருக்கும் மாப்பிள்ளை பற்றி எழுதி, அவளது 'மகன்' நகரில் இருந்து வராமல் திருமணத்தை நடத்த முடியாது என்று தான் தெரிவித்துவிட்டதையும் எழுதியிருந்தாள். வீட்டிற்கு அவசரமாகச் செல்ல வேண்டிய அவசியம் வரவே, சென்ஷு உடனடியாகக் கப்பல் வழியாகத் தன்னுடைய கிராமத்திற்குக் கிளம்பினாள். சில இரவுகள் பயணத்தைச் செய்ய வேண்டி இருந்ததால், ஒரு மாலை, தன்னுடன் பிரயாணம் செய்பவர்களுடன் பேசும் போது, நேரத்தைக் கழிக்கக் கதைகளைச் சொல்வது என்று முடிவு செய்தார்கள். முதல் கதையைச் சென்ஷுவே ஆரம்பித்தாள்.



ஊரின் பெரிய மனிதருக்கு பிறந்தநாள் விழா நடைபெற்றுக் கொண்டிருந்தது. அவரது மகனும், வேலையாட்களும் பிறந்தநாள் விழாவிற்கு வந்தவர்களை வரவேற்று, பரிசு பொருட்களை வாங்கி வைத்துக் கொண்டிருந்தனர். விலையுயர்ந்த பரிசு பொருட்கள் அவருக்குக் கொடுக்கப்படும் என்பதைத் தெரிந்திருந்த திருடன் ஒருவன், அன்று மாலை விருந்து நடக்கப்போகும் பெரிய அறையின், கூரையில் இருந்த உத்தரத்தில் படுத்து மறைந்திருந்தான். அங்கிருந்து கீழே பிரிக்கப்படும் பரிசுகளில் இருந்து எடுக்கப்படும் பட்டுத்துணிகள், பச்சைக்கல் சிலைகள், நகைகள் போன்றவைக்கு எடுக்கப்பட்டுப் பத்திரமாக வைக்கப்படுவதைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒவ்வொரு பொருளும் எங்கே வைக்கப்படுகிறது என்பதையும் பார்த்துக் கொண்டிருந்தான். விருந்து முடிந்து அனைவரும் கிளம்பிய பின்னர், குடும்பத்தினரும் தூங்கிய பின், அவற்றைத் திருடுவது என்று முடிவு செய்திருந்தான்.

தன்னுடைய உறவினர்கள் அனைவரையும் பார்க்கவும், அவர்களுடன் கலந்து பேசவுமே, அவர் விருந்தை ஏற்பாடு செய்திருந்தார். வெகு நேரம் நடந்த விருந்து, நடுஇரவைத் தாண்டி முடிவடைந்தது. அனைவரும் சென்ற பிறகு, வேலையாட்கள் தங்களது இடங்களுக்குச் சென்ற பின்னர், அவர் அங்கிருந்த சில பரிசுகளை எடுத்து வைத்துக் கொண்டிருந்தார். அவர் தன்னுடைய அலமாரியில் சில பொருட்களை வைத்துவிட்டு, விளக்குகளைத் அணைப்பதற்காகத் திரும்பிய போது, மேலே ஒளிந்திருந்த திருடனின் தலையின் நிழல் கீழே விழுவதைப் பார்த்தார். ஆனால் அவர் அதைத் தெரிந்து கொண்டதை காட்டிக் கொள்ளவில்லை. ஆனால் வீட்டில் இருந்த வேலையாள் ஒருவனை அழைத்து, அங்கு மேசை ஒன்றை போட்டு, ஒருவருக்குத் தேவையான உணவை எடுத்து வைக்கச் சொன்னார். அதைச் செய்து முடித்தவுடன், அனைவரும் தூங்க சென்றுவிட்டார்களா என்று விசாரித்தார். அனைவரும் தூங்கிவிட்டார்கள் என்று உறுதிப்படுத்திக் கொண்டவுடன், அவனையும் அனுப்பிவிட்டார். திருடன் ஒளிந்திருந்த கூரை உத்தரத்தைப் பார்த்து, விருந்தினர்களை வரவேற்பது போலக் குனிந்து "உத்தரத்தில் இருக்கும் மேன்மைதங்கிய விருந்தினர், கீழே வந்து விருந்தில் கலந்து கொள்வாரா?" என்றார். தான் ஒளிந்திருப்பது தெரிந்துவிட்டதால், வேறு வழியின்றிக் கீழிறங்கி, மேசையில் அமர்ந்தான். பெரியவர் அவனுக்குப் பரிமாற, விருந்தை சுவைத்தான். அவன் சாப்பிட்டு முடித்தவுடன், அவர் அவனுக்கு ஒரு பை நிறைய வெள்ளிக்காசுகளைக் கொடுத்து, அதை நல்லவிதமாக உபயோகிக்கும்படியாகக் கூறினார். அவனும் உறுதியளிக்கவே, அவனை வழியனுப்பி வைத்தார்.

சில பத்து வருடங்கள் கழிந்தது. பெரிய மனிதரின் எண்பதாவது பிறந்தநாள் வந்தது. அவரது பெருமை பெரிதாக அதிகரித்தது. அவரது குடும்பமும், உறவினர்களும் பெரிதாகி இருந்தது. பகல் முழுவதும் அவருக்குப் பரிசுகள் வந்து கொண்டேயிருந்தன. மாலையில் பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். அவரது பேரன் அனைத்து பரிசுகளையும் பெற்று, அவரிடம் கொண்டு வந்து காட்டிக் கொண்டிருந்தான். இரவு நெருங்கும் போது, விலையுயர்ந்த ரத்தினம் ஒன்றை கொண்டு வந்த அவரது பேரன், அதைப் பரிசாகக் கொடுத்தவர தன் பெயரைச் சொல்லாமல், பெரியவரைப் பார்க்க வேண்டும் என்று கேட்பதாகத் தெரிவித்தான். பெரியவரும் சம்மதிக்கவே, புதிய மனிதன் அறைக்குள் வந்தான். பெரியவர் நல்ல ஆரோக்கியத்துடன் இருப்பதைக் கண்டு மகிழ்வதாகக் கூறினான். தன்னுடைய பார்வை மங்கிவிட்டதால், வந்திருப்பது யார் என்று தெரியவில்லை என்று பெரியவர் கூறினார். வந்தவனும், தான் அவரது உண்மையான நலம்விரும்பி என்றும், நேர்மையானவன் என்றும், மதிப்புள்ள பரிசுகளைக் கொடுக்கும் அளவிற்குப் பணம் கொண்டவன் என்றும் கூறிக் கொண்டான். யாரிடம் பெறுகிறோம் என்று தெரியாமல் தான் பரிசுகளைப் பெற்றுக் கொள்வதில்லை என்று பெரியவர் கூறினார். அவனது பெயர் தெரியாமல், தன்னால் அவனை அன்றிரவு நடக்கும் விருந்திற்கு அழைப்பதும் முடியாது என்றார். இதைக் கேட்டவுடன், அவன் "உத்தரத்தில் இருக்கும் மேன்மைதங்கிய விருந்தினர், கீழே வந்து விருந்தில் கலந்து கொள்வாரா?" என்று தன்னை விருந்திற்கு அழைக்கலாம் என்றான். அதன் பின்னர், திருடனாக வந்த தான், அவரது அன்பான நடத்தையால் திருந்தி, அவர் கொடுத்த பணத்தைக் கொண்டு வெளிநாடுகளில் வணிகம் செய்ததாகவும், அதன் மூலம் பெரும் பணக்காரனாக ஆனதாகவும் தெரிவித்தான். அவரைப் போலவே

கருணையும், உண்மையும் உடைய மனிதனாக வாழ்வதாகவும் தெரிவித்தான். அவனும், அன்றைய விருந்திற்கு இருந்தான். அங்கிருந்தவர்களில், அவனையும், பெரியவரையும் போன்ற மகிழ்ச்சியுடன் இருந்தவர்கள் யாரும் இல்லை எனலாம்.



அடுத்து பேசியவர் ஜின்ஷியைப் போல இருந்ததால், சென்ஷூ அவரைச் சற்று ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள். அவரது கண்கள், சற்று சாய்வாகவும், அழகாகவும் இருந்தது. நெற்றி அகலமாகவும், மூக்கு நன்றாகவும் இருந்தது. அவனுக்கு மீசை வளர்ந்திருந்ததால், அவர் வயது முப்பத்திற்கு மேலும், தாத்தாவாகவும் இருக்க வேண்டும் என்று நினைத்தாள். அவர் கருப்பு காலணிகளும், மஞ்சள் உடையும், பச்சை பட்டு மேலாடையும், அதன் மேல் ஊதா நிற மேலங்கியும் அணிந்திருந்தான். அவரது உடை அடக்கமாக, கடந்த இருநூறு வருடங்களாக இருக்கும் நாகரீகத்தில் இருந்தது. அவர் மிகவும் உயர்ந்த பதவியில் இருக்க வேண்டும் என்று அவரது உடை சுட்டிக்காட்டியது. அவரது வெண்மையான சருமம், அவர் அறையில் இருந்து வேலை பார்ப்பவர் என்றும், அவரது நகங்கள் இரண்டு இஞ்சுகள் வளர்ந்திருந்தது, அவர் எழுத்து வேலை செய்பவர் என்றும் காட்டியது. தன்னால் அவர்கள் அளவிற்குக் கதை சொல்ல முடியாது என்று கூறிக் கொண்டே, அடுத்தக் கதையை ஆரம்பித்தார்.



திருமணமாகி தனது மாமியார் வீட்டில் வாழ்ந்து வந்த தன்னுடைய மகளைப் பார்க்க அவளது தாய் கிளம்பி சென்றாள். அங்கே அவளது மகளையும், அவளின் மாமியாரும் தவிர யாரும் வீட்டில் இல்லை. அவள் இரவு விருந்து சாப்பிட்டு விட்டுத்தான் செல்ல வேண்டும் என்று சொன்னதால், அங்கே தங்கிவிட்டாள். இரவில் அவர்கள் மூவரும் ஒன்றாக அமர்ந்து உணவை அருந்தினார்கள். அவர்கள் மேசையில் அமர்ந்தவுடன், காற்று வேகமாக வீசவே, மேசையில் இருந்த விளக்கு அணைந்து போனது. அறையும் இருட்டாகப் போனது. அவளது மகளின் மாமியார் "இங்கேயே அமர்ந்திருங்கள். நான் சென்று விளக்கை ஏற்றுகிறேன்." என்றாள். ஆனால் அவள் சொல்லிக் கொண்டிருந்த போதே, அவளது மருமகள் விளக்கை ஏற்றுவதற்கு எடுத்து சென்று விட்டாள்.

மாமியார்தான் விளக்கை எடுக்கச் சென்றிருக்கிறாள் என்று எண்ணி, அவசரமாகத் தன் மகள்தான் தனக்கருகில் அமர்ந்திருப்பது என்று எண்ணி பேச ஆரம்பித்தாள். விருந்தினருக்கு எப்போதும் வீட்டில் இருக்கும் முதல்தரமான பொருட்களை மட்டுமே கொடுக்க வேண்டும் என்றாள். இறைச்சியின் மென்மையான பகுதி இருக்கும் தட்டு, கனிந்த பழம் இருக்கும் கூடை முதலியவை விருந்தினரின் அருகில் இருக்குமாறு வைக்கப்பட வேண்டும். இதனால் விருந்தினர் பேராசையுடன் சாப்பிடுவது போன்ற தோற்றத்தைத் தவிர்க்கலாம். அதிலும் விருந்தினர், உன்னுடைய தாய் என்றால், இன்னமும் அதிகமாக அவளைக் கவனிக்க வேண்டும். இப்படியாக அவள் பேசிக் கொண்டிருக்கும் போதே, விளக்கு வந்துவிட்டது. இப்போதுதான் அவள் தான் மகளுடன் பேசவில்லை என்பதையும், அவளது மாமியாரிடம் பேசிக் கொண்டிருந்ததையும் உணர்ந்தாள்! தன்னுடைய தவறை உணர்ந்த அவள், எப்படியாவது அவளது சம்பந்தியிடம் இழந்த மரியாதையைத் திரும்பப் பெற எண்ணி, "எனக்கு ஒரு வினோதமான பழக்கம் இருக்கிறது. திடீரென்று விளக்கணைந்து, வெளிச்சம் இல்லாமல் போகும் போது, என் மூளை பல விஷயங்களிலும் அலைந்து, தேவையில்லாமல் பலவற்றையும் வெளிச்சம் வரும்வரை பேசிக் கொண்டிருப்பேன்." என்றாள். அவளது மகளின் மாமியாரும் "ஆ! உங்களுடைய பழக்கம் எனக்கு நன்றாகப் புரிகிறது. ஏனென்றால், எனக்கும் அது போன்ற வினோதமான பழக்கம் ஒன்று இருக்கிறது. மாலை நேரம் விளக்கணைந்து போனால், எனக்குக் காது கேட்காமல் போய்விடும். திரும்பவும் விளக்கு வெளிச்சம் வந்த பின்னர்தான், காது கேட்கும்!" என்றாள்.



கப்பலின் கேப்டன், அடுத்தக் கதையை ஆரம்பிப்பதற்கு முன், தன்னுடைய வீட்டிற்கு அருகில் இருப்பவர் ஒருவரின் அனுபவங்களைக் கூறுவதாகத் தெரிவித்தார். விவசாயி ஒருவர் மிகவும் வயதான ஒலிவ் மரம் ஒன்றை கிராமத்தான் ஒருவனுக்கு விற்றிருந்தார். மிகவும் வயதாகி, ஒலிவ் பழங்கள் காய்ப்பதை நிறுத்திவிட்டதால், அதனை விறகுக்காகவே விற்றிருந்தார். சில மாதங்களுக்குப் பின்னரும், மரத்தின் அடிப்பாகமும், வேரும் இன்னமும் தன்னுடைய நிலத்தில் நின்றுகொண்டிருப்பதை விவசாயி பார்த்தார். எனவே, அவற்றை ஏன் இன்னமும், பேசிக்கொண்டபடி, அகற்றவில்லை என்று கிராமத்தானை அழைத்துக் கேட்டார். அவன் பதிலுக்கு, தான் அந்த மரத்தின் அடிப்பகுதியையும், மற்றவற்றையும் விவசாயிக்கே திரும்பக் கொடுத்துவிடுவதாகக் கூறினான். வேர்களைத் தோண்டி எடுப்பதற்கு அவனுக்குத் தைரியம் இல்லை என்றும் கூறினான். பல வேலையாட்களைக் கொண்டு தான் வேர்களைத் தோண்டி எடுக்க முயன்றதாகவும், ஆனால் அவர்கள் தோண்டிய சில நேரத்திலேயே கீழே கட்டுமானங்கள் தென்பட்டதாகவும் தெரிவித்தான். அவை வேர்களுக்குக் கீழிருக்கும் பண்டைய கல்லறையாக இருக்கக்கூடும் என்று எண்ணியதாகவும் தெரிவித்தான். அந்த இடத்தை முதலில் தோண்டியவன், திடீரென்று வயிற்றுவலி என்று வேலைக்கு வருவதை நிறுத்திவிட்டான். சாப்பிட்டதில் ஏதோ சேரவில்லை என்று மற்றவர்கள் நினைத்துக் கொண்டார்கள். அந்த இடத்தை அடுத்து

தோண்டியவனும், வயிற்று வலி என்று நிறுத்திக்கொண்டான். இப்போது, அங்கே வேலை செய்து கொண்டிருந்த மற்றவர்கள், கல்லறையைத் தொட்டதால்தான் அப்படி நடப்பதாகவும் சொல்லி அவர்கள் அதற்கு மேல், தோண்ட மறுத்துவிட்டார்கள். எனவே வேலை அப்படியே நின்றுவிட்டது. தொடர முடியவில்லை.

எனவே, விவசாயியும், இறந்து போனவர்களின் ஆவியைச் சாந்தப்படுத்த, தனக்குப் பரிசாகக் கிடைத்த மரத்தின் அடிப்பகுதிக்கும், வேரிற்கும் பணமும், சாம்பிராணியும் வைத்து, பூசை செய்தார். அங்கேயே முழங்காலிட்டு, தோண்டும் போது, கல்லறையை உடைக்க வேண்டி வந்தால், தான் அங்கிருக்கும் எலும்புகளை எடுத்து, மிகுந்த மரியாதையுடன் வேறு ஒரு கல்லறையில் வைத்து வழிபடுவதாகவும் தெரிவித்துக் கொண்டார். அங்கிருந்த ஆவியைச் சந்தைப்படுத்திவிட்டதாக எண்ணி, மரத்தின் அடிப்பகுதியையும், வேரையும் தோண்டி எடுத்தார். அப்போதுதான், அடியில் இருந்த கட்டுமானம் அங்கிருந்த கிணற்றின் மீதம் என்று தெரிந்தது. பின்னர், ஒரு வயதான உறவினர் மூலம், அங்கு ஒரு கிணறு இருந்ததாகவும், அது வற்றிப்போன பின்னர், நிரப்பப்பட்டு, ஒலிவ் மரம் வளர்க்கப்பட்டதாகவும் தெரிந்து கொண்டார்.

ஜின்ஷியைப் போல இருப்பதாகச் சென்ஷு நினைத்த மனிதர், 'கற்பனையே ஆவிகளை உருவாக்குகிறது.' என்ற பழைய பழமொழியை நம்புவதாகவும், அது மட்டுமல்லாது, ஆவிகள் செய்வதாகச் சொல்லப்படுவதும் கற்பனையின் காரணமாகவே நடக்கிறது என்றும் தெரிவித்தார். அவருடைய குடும்பத்திலேயே அதற்கு உதாரணம் இருப்பதாகவும் தெரிவித்தார். அவருடைய பாட்டி ஒருத்தி, திருமணமான புதிதில், அவளது கணவன் அவளுக்குத் துரோகமிழைத்ததாக எண்ணியதால், அவனை அவளது வாழ்நாள் முழுவதும் மன்னிக்கவோ, அவனது நடத்தையை மறக்கவோ இல்லை. ஆனாலும், அவன் மிகுந்த கோபக்காரன் என்பதால், அவனிடம் நேரடியாக அவள் சண்டையிட்டதும் இல்லை. அவன் இறந்த பொழுது, அவர்களது குழந்தைகள் வளர்ந்துவிட்டார்கள். அவளுக்கும் மிகவும் வயதாகிவிட்டது. அவன் இறந்தவுடன், அவள் அவனது இறந்த உடலுக்கு அருகில் சென்று, அவள் அதுவரை அடக்கி வைத்திருந்த உணர்வுகளை எல்லாம் கொட்டிவிட்டாள். பல வருடங்களாகத் தான் தன்னுடைய உணர்வுகளை அடக்கி வைத்திருந்ததாகவும், இப்போது உள்ளத்தில் இருப்பதைச் சொல்வதாகவும் சொல்லி, அவனை எல்லா விதமான வார்த்தைகளாலும் திட்டி தீர்த்தாள். ஆனால் அந்த அறையில் இருந்து வெளியே செல்வதற்கு முன்பே, அவள் உடலில் வலி அதிகரித்தது. அவளும் படுக்கையில் விழுந்தாள். அவளது பிள்ளைகள் அவளை உடனடியாக, அவர்களின் தந்தையின் உடலிடம் சென்று மன்னிப்பு கேட்குமாறும், இல்லை என்றால் அவர்கள் இரண்டு இறுதி சடங்குகளுக்குச் செலவு செய்ய வேண்டி வரும் என்றும் தெரிவித்தார்கள். அவளோ தான் செத்தாலும் மன்னிப்பு கேட்க போவதில்லை என்றாள். ஒருவழியாக, அவளது மகன்கள் அவளிடம் காலில் விழுந்து கேட்டு, அவளைத் தூக்கிச்சென்று அவர்களது தந்தையின் பிரேதத்திடம் மன்னிப்பு கேட்க வைத்தனர். அவளும் கோபத்துடன் மன்னிப்பு கேட்டாள். கேட்டவுடன் அவளது உடல்நிலை சரியாக ஆரம்பித்தது. அதற்குப் பல வருடங்களுக்குப் பின்னரும், மன்னிப்பு கேட்க வைத்ததிற்கு, அவள் அவளது மகன்களைத் திட்டிக் கொண்டிருந்தாள். அந்த 'நாயிடம்' மன்னிப்பு கேட்டதிற்குத் தான் இறந்தே போயிருக்கலாம் என்றாள்.

இதற்கும் அனைவரும் கேப்டனின் கதையைக் கேட்க விரும்பவே, அவர் அடுத்தக் கதையை ஆரம்பித்தார்.



குருடனை போல நடித்துக் கொண்டிருந்த நிமித்தக்காரன் ஒருவன், தனியாகப் பெண்ணொருத்தி இருந்த வீட்டிற்கு வந்தான். வீட்டின் திண்ணையில் தரையில் கிடந்த அரிசி உலக்கையின் ஒரு பக்கமாக அமர்ந்தான். வீட்டில் இருந்த பெண்மணியும் அங்கே வந்து, உலக்கையின் மறுமுனையில் அமர்ந்து, தன்னுடைய எதிர்காலத்தைச் சொல்லுமாறு கேட்டாள். அவள் பருமனாக இருப்பதைப் பார்த்த அவன், அவளது கன்னக்குழிகளை நிரப்பும் அளவிற்குத் தங்கம் அவளுக்குக் கிடைக்கப் போவதாகத் தெரிவித்தான். இந்த நிமித்தத்தைக் கேட்ட அவளுக்கு மிகுந்த மகிழ்ச்சியானது. கண் தெரியாமல் இருந்தாலும், தனக்குக் கன்னக்குழி இருப்பது அவனுக்குத் தெரிந்திருப்பது அவளுக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது. எனவே தனக்கு முழுமையான எதிர்காலத்தைத் தெரிவிக்குமாறு கேட்டாள். அவளை ஏமாற்றுவது எளிதாக இருக்கும் என்பதைத் தெரிந்து கொண்ட அவன், அவள் செல்வத்துடன் இருந்தாலும், அவளுக்கு இரண்டு கண்டங்கள் இருப்பதாகத் தெரிவித்தான். சிறியதாக ஒரு கண்டம் அருகிலும், பெரிய கண்டம் ஒன்று சற்று தொலைவிலும் இருப்பதாகத் தெரிவித்தான். அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அவளிடம், தனக்கு ஒரு படி அரிசியும், ஒரு அவுன்சு வெள்ளியும் கொடுத்தால், அந்தக் கண்டங்களில் இருந்து தப்பும் உபாயத்தையும் கூறுவதாகத் தெரிவித்தான். தன்னுடைய கணவன் முந்தைய தினம் வாங்கிக் கொடுத்த படி அரிசியைத் தருவதாகவும், ஆனால் அவளிடம் சிறிய வெள்ளி நாணயம் கூட இல்லை என்றும் தெரிவித்தாள். எனவே, அரிசியை மட்டும் வாங்கிக் கொண்டு தனக்கு உதவ வேண்டும் என்று கேட்டுக் கொண்டாள். அவனோ, அரிசிக்கு தேவையான அளவிற்குத் தான் உதவிவிட்டதாகக் கூறி எழுந்து நடக்க ஆரம்பித்தான். உலக்கையில் இருந்து அவன் எழுந்தவுடன், அவள் இருந்த பக்கம் உருளவே, உலக்கையில் இருந்து கீழே விழுந்தாள். அவன் கூறியபடியே தனக்குச் சிறிய கண்டம் நிகழ்ந்துவிட்டதாக எண்ணிய அவள், "அவர் சொல்லிய இரண்டு துரதிர்ஷ்டங்களில் ஒன்று நிகழ்ந்துவிட்டது. பெரிய நிமித்தக்காரராக இருக்க வேண்டும். அவரிடம் பேசி நிகழப்போகும் பெரிய கண்டத்தில் இருந்து தப்ப வேண்டும்." என்று எண்ணிக் கொண்டாள். வேகமாக அவன் பின்னாடியே சென்று, தன் வீட்டில் ஒரு அவுன்சு வெள்ளி பெறுமானமுள்ள புதிய போர்வை ஒன்று இருப்பதாகவும், அதை எடுத்துக் கொண்டு தனக்கு நிமித்தம் சொல்ல வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டாள். கொஞ்சம் யோசித்துவிட்டு, அதற்கு அவனும் ஒத்துக் கொண்டான். அதற்குப் பதிலாக, இரண்டு நிமித்தங்களையும் கூறினான். முதலில் அவளுக்குக் கைத்தடியால் பிரச்சினை ஏற்படும் என்றும், அதே நாளிரவு அவள் தலையணையால் துன்பப்படுவாள் என்றும் கூறினான். அவளும் தன்னால் சிறிய பிரச்சினைகளைச் சமாளிக்க முடியும் என்றும், அவன் பெரிய கண்டத்தில் இருந்து தன்னைக் காக்கப்போவதை எண்ணி மகிழ்வதாகவும் தெரிவித்தாள். நிமித்தக்காரனும் அவன் வழியே செல்ல, அவள் வீட்டு வேலைகளைக் கவனிக்கச் சென்றாள்.

கூலி வேலை செய்யும் அவளது கணவன் மதிய உணவிற்காக வீட்டிற்கு வந்த போது, அவள் அரிசி எல்லாம் தீர்ந்துவிட்டது என்றும், அவன் இரவிற்கு முன்பு சிறிது அரிசி வாங்கவேண்டும் என்றும் கூறினாள். முந்தைய தினம் வாங்கிய அரிசி என்ன ஆனது என்று அவன் கேட்ட பொழுது, அதை நிமித்தக்காரனிடன் கொடுத்துவிட்டதாகக் கூறினாள். அதனால் கோபித்துக் கொண்ட அவன், தன்னுடைய கைத்தடியால் அவளை நன்றாக அடித்துவிட்டான். "நிமித்தம் பலித்தது! நிமித்தம் பலித்தது!" என்று கூறிக் கொண்டே அவள் அடியை வாங்கினாள். அன்றிரவு அவர்கள் படுக்கையில் இருக்கும் போது, குளிர் அதிகமாக இருக்கவே, அவளது கணவன் போர்வையைக் கேட்டான். அதையும் நிமித்தக்காரனிடம் கொடுத்துவிட்டதாகக் கூறவே, அவளது கணவன் அவளைத் தலையணையால் அடித்துவிட்டான். "அந்தக் குருடனுக்குத்தான் எவ்வளவு அறிவு! அவன் சொன்ன நிமித்தங்கள் எல்லாம் பலித்துவிட்டன!" என்றாள் அவள்.

∆∆∆

பலரும் இப்போது பெண்கள் எப்படி நிமித்தங்களையும், மூட நம்பிக்கைகளையும் நம்புகிறார்கள் என்றும், அதற்காக பணம் செலவழிப்பதையும் பற்றி கூறினார்கள். அப்போது அங்கு, குதிரையில் இருந்து அம்பெய்துவதில் மிகவும் திறமை உடைய, ராணுவ வீரர் ஒருவரைக் கதை சொல்ல சொல்லி கேட்டார்கள். அவரும் சற்று யோசித்துவிட்டு, கதையை ஆரம்பித்தார்.



மூன்று அனாதை பிச்சைக்கார சிறுவர்கள் அவர்களுக்குள் ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டனர். அவர்கள் சகோதரர்கள் போல இருக்க வேண்டும் என்றும், அவர்களில் யார் செல்வத்தை அடைந்தாலும், மற்ற இருவருடனும் அதைப் பகிர்ந்து கொள்வது என்றும் தங்களுக்குள் ஒத்துக்கொண்டார்கள். அவர்களது வயதை சொல்லி, ஆளுக்கு ஒரு கை மண்ணை ஒன்றாகக் குவித்து, சொர்க்கத்தின் மீதாகச் சத்தியம் செய்து, தாங்கள் மூவரும் ஒரே குடும்பமாக இருப்போம் என்றும் உறுதி எடுத்துக் கொண்டார்கள். அதன் பின்னர் அவர்கள் ஒன்றாகவே உண்டு, உறங்கி, தங்களுக்குள் அனைத்தையும் பகிர்ந்து வாழ்ந்து வந்தனர். அவர்கள் மூவரும் பெரியவர்களாக ஆன பின்னர், தனித்தனியாகச் சென்று தங்களது அதிர்ஷ்டத்தைச் சோதித்துப் பார்ப்பது என்று முடிவு செய்தார்கள். அவர்களில் யார் செல்வத்தையோ அல்லது அதிகாரத்தையோ அடைந்தால், மற்றவர்களுக்குத் தெரிவிப்பது என்று முடிவு செய்தார்கள். நன்றாகக் கலந்து பேசிவிட்டு பிரிந்தார்கள். அவர்கள் மூத்தவனும், இளையவனும் தொடர்ந்து பிச்சை எடுத்துக் கொண்டிருந்தார்கள். இரண்டாமவன் ராணுவத்தில் சேர்ந்து, எல்லையில் புரட்சியாளர்களை அடக்கி, அவனது வீரத்தால், ராணுவ தளபதியாகவும் ஆனான். அவனது வீரம் பற்றிய செய்தி நாடெங்கும் பரவியிருந்தது. எனவே, போர் முடிந்தவுடன் அவன் ஒரு பிரதேசத்தின் ஆளுநராக ஆனான். அந்தப் பதவியிலும் அவனது திறமையால் மிகுந்த புகழை அடைந்தான். அவனது புகழ், அவனது சகோதரர்களின் காதுகளையும் எட்டியது. அவர்கள் இருவரும் கலந்து பேசி, அவனது மாளிகைக்குச் சென்று, முன்பு எடுத்த உறுதிமொழியை நினைவுபடுத்துவது என்று முடிவு செய்தார்கள். அவனது மாளிகையை அடைந்தவுடன், மூத்தவன், அவர்களது சகோதரனிடம் சென்று முதலில் தானே பேசவேண்டும் என்று கேட்டான். அப்போது அங்கு வழக்கு ஒன்று நடைபெற்றுக் கொண்டிருந்தது. கிழிந்த ஆடைகளுடன் சென்ற அவன், பார்வையாளர்கள் வரிசையில் முதலில் நின்று கொண்டு, ஆளுநரின் கவனத்தைப் பெற முயன்றான். ஆளுநரும் அவனைத் தெரிந்து கொண்டார். ஆனால் பொது இடத்தில் அவனைத் தெரிந்து கொள்வதாகக் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. அதனால் அவனிடம் பேசவும் இல்லை. தன்னை அவன் தவிர்ப்பதே உணர்ந்த மூத்தவன், வழக்கு முடியும் வரை காத்திருந்தான். முடிந்தவுடன் முன்னே சென்று " என்னைத் தெரியவில்லையா? நான்தான் உன் மூத்த சகோதரன். நாம் சிறுவர்களாக இருந்த போது, என்னிடம்தான் நீ அறிவுரை கேட்பாய். என் உணவில் பாதியை உனக்குத் தந்திருக்கிறேன். " என்றான். தன்னிடம் வேலை பார்ப்பவர்கள் முன்பு இந்தக் கதையைக் கேட்க விரும்பாத ஆளுநர், தன் காவலாளிகளிடம் அவனைத் துரத்த சொல்லி உத்தரவிட்டார். தன்னை அவன் அறிந்து கொள்ளவில்லை என்று எண்ணிய மூத்தவன். "நாம் பிச்சைக்காரர்களாக இருக்கும் போது எடுத்த உறுதிமொழி நினைவில் இல்லையா?" என்று கேட்டான். பைத்தியக்கார பிச்சைக்காரனை அடிக்கும்படி ஆளுநர் உத்தரவிட்டார்.

அவனை அடிக்க அடிக்க, அவனும் அவர்களது பழைய வாழ்வின் நிகழ்வுகளைக் கூறி ஆளுநருக்கு நினைவுபடுத்த முயன்றான். கோழி திருடியது, பழங்களைத் திருடியது என்று அவன் ஒவ்வொரு நிகழ்வாகக் கூற, கூற ஆளுநரின் கோபம் அதிகரித்தது. அவனுக்கு விழுந்த அடிகளும் அதிகரித்தது.

அதே நேரத்தில், வெளியே காத்திருந்த இளையவன், அவர்கள் இருவரும் சந்தித்த மகிழ்ச்சியில் தன்னை மறந்துவிட்டதாக எண்ணினான். மூத்தவன், அடி பெற்று, உடைகள் எல்லாம் கிழிந்து வாயிலில் கொண்டு வந்து தள்ளிய போது, இளையவன் என்ன விவரம் என்று கேட்டான். "வந்துவிடு; ஒரு வார்த்தையும் பேசாதே! அவன் மிகவும் கர்வம் கொண்டவனாகவும், ஆபத்தானவனாகவும் மாறிவிட்டான். வேகமாகத் தப்பித்துப் போனால்தான், உயிர் பிழைக்க முடியும்." என்றான். அவர்கள் செல்லும் வழியில், நடந்த எல்லாவற்றையும் விளக்கினான். கதையைக் கேட்ட இளையவன், தான் ஒரு முறை மாளிகைக்குச் சென்று பார்ப்பதாகக் கூறிச் சென்றான். அவனும் வழக்கு மன்றத்திற்குச் சென்று, பார்வையாளர் வரிசையில் முன் நின்றான். அவனை ஆளுநர் தெரிந்து கொண்டார் என்பதை அறிந்தவுடன், மிகவும் மரியாதையாக "உங்களுக்கு என்னை நினைவில் இருக்காது; பல வருடங்களுக்கு முன் நாம் ஒரே படைப்பிரிவில் இருந்தோம். என்னை எதிரி கைது செய்து கொண்டு சென்ற போது, உங்களுடைய வீரத்தால் என்னை விடுதலை செய்தீர்கள். நானொரு ஏழை. உங்களுக்கு மரியாதை செலுத்தவே இங்கு வந்தேன்." என்றான். அங்கிருந்த அனைவரும், அவர்கள் கேள்விப்பட்டிருந்த ஆளுநரின் வீரத்தால் காப்பாற்றப்பட்ட வீரனை ஆவலுடன் பார்த்தார்கள். ஆளுநரும் அவனை அன்புடன் வரவேற்று,

உணவு, உடை தந்து, அவனுக்கு ஒரு வேலையும் தந்து, பழைய நண்பனாக நடத்தினான்.



அனைவரும் இப்போது வேறு வேறு கதைகளை சொன்னார்கள். சென்ஷுவின் அருகில் இருந்த தோல்வியுற்றவனைப் போல மெலிந்த மனிதன், தன்னுடைய புத்தக கட்டில் சாய்ந்து கொண்டு, சிறிய கதை ஒன்றை சொல்ல ஆரம்பித்தான்.



நகருக்கு தேர்வெழுத சென்று கொண்டிருந்த மாணவன் ஒருவன், குறுகலான பாதை ஒன்றில் எதிரே விறகு பொறுக்கிக் கொண்டு வந்து கொண்டிருந்த பெண்ணைக் கண்டான். "அவள் ஒரு குடியானவப்பெண். இளம்பெண். எனவே அவளே எனக்கு வழி விட வேண்டும்." என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். "அவனது கைகளில் எதுவுமில்லை. நான் பாரம் சுமக்கிறேன். எனவே அவனே எனக்கு வழிவிட வேண்டும்." என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள். எனவே, மற்றவர் வழிவிட வேண்டும் என்று இருவரும் ஒருவருக்கு ஒருவர் எதிரே வந்து நின்று கொண்டனர். சிறிது நேரத்தில், அவர்கள் இருவருக்கும் அப்படி நின்று கொண்டிருப்பது எரிச்சலைத் தந்தது. இறுதியாக, குடியானவப்பெண் ஒரு தீர்வை கூறினாள். அவள் கூறும் பொருளைக் கொண்டு, அவன் இருவரிகளில் பாடலைக் கூற வேண்டும் என்றும், அப்படிப் பாடிவிட்டால், தான் அவனுக்கு வேலைக்காரியாக வருவதாகவும், பாட முடியாவிட்டால், அவன் தன்னைத் தொடர்ந்து, தான் சொல்வதைக் கேட்டு நடக்கவேண்டும் என்றும் கூறினாள். எந்தப் பொருளிலும் தன்னால் பாடல் புனையமுடியும் என்று நினைத்த அவன், வேகமாக ஒத்துக்கொண்டான். அவள், தன்னுடைய தொப்பியை கழட்டிவிட்டு, விறகை இறக்கி வைத்து. அதைத் தோளில் சுமந்து வந்த தடியை தரையில் வைத்து, அவனை நோக்கி பாடலை எதிர்பார்த்து அமர்ந்தாள். குழப்பமடைந்த அவன், தடியை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்ன வார்த்தைக்குப் பாடல் தேவை என்பதை இங்கு வைத்துவிட்டேன்; நீ பாடலாம். நான் வெறும் குடியானவப்பெண்தான். நீதான் படித்தவன். எந்தப் பொருளிலும் பாடல் பாட முடியும், அல்லவா?" என்றாள் அவள்.

அவள் பேசிய கேலியில் அவன் இன்னமும் குழப்பமடைந்தான். பாடலை சொல்ல முடியாமல், அவளது வீட்டிற்குத் தான் வேலையாளாகத் தொடர்வதாகக் கூறினான். அவனை விறகை சுமந்து வரச்செய்து, வீட்டிற்கு வந்தவுடன் அவனைத் தண்ணீர் எடுத்துவர, துணி துவைக்க என்று அனைத்து விதமான வீட்டு வேலைகளையும் செய்ய வைத்தாள். நாட்கள் கழிந்தன. அவனுக்கு இன்னமும் தடியைப் பற்றி எந்தப் பாடலும் தோன்றவில்லை.

ஒரு நாள், அவன் நதிக்கரையில் காய்கறிகளைக் கழுவி கொண்டிருந்தான். அப்போது அந்த வழியே படகில், தேர்வெழுதிவிட்டு வீட்டிற்குத் திரும்பும் மாணவர்கள் சென்று கொண்டிருந்தார்கள். அப்போது படகில் இருந்த அவனது நண்பன், அவனைப் பார்த்து கீழிறங்கி, அவன் அங்கே காய்கறிகளைக் கழுவிக் கொண்டிருப்பதன் காரணத்தைக் கேட்டான். அவர்கள் அனைவரும் அவனும் ஏதோ விபத்து ஏற்பட்டதாலேயே, தேர்வெழுத வரவில்லை என்று கவலையில் இருந்ததாகத் தெரிவித்தார். அவனும் நடந்தது அனைத்தையும் அவனுக்குச் சொல்லி, தன்னுடைய நிலையை எடுத்துக் கூறினான்.

அவனது நண்பன் "அந்தக் குடியானவப் பெண்ணிடம் சென்று, நான் தடியின் மீது என் திறமையைக் காட்ட தயாராக இருப்பதாகச் சொல்." என்றான்.

"வேண்டாம்! நீயும் என்னைப் போலவே தோற்றுவிடுவாய்! அப்புறம் அவளுக்கு, ஒன்றிற்கு, இரண்டு அடிமைகள் இருப்பார்கள்." என்றான்.

"பரவாயில்லை. உனக்கு உதவ முடியவில்லை என்றால், உன்னுடன் அடிமையாக இருக்கத் தயாராக இருக்கிறேன். சென்று, அந்தப் பெண்ணை அழைத்து வா!"

குடியானவப் பெண்ணும் அவனை அலட்சியமாக வரவேற்றாள். முன்போலவே, அவள் சொல்லும் பொருளுக்கு அவன் பாடலை பாடுவது என்றும், அப்படிப் பாட முடியவில்லை என்றால், அவன் அவளுக்கு அடிமையாகி விடுவது என்றும், இல்லை என்றால் அவனை அவள் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்றும் கூறினாள்.

மறுபடியும், அவன் முன் தன்னுடைய தடியை அவள் வைத்தவுடன், அவன் பாட ஆரம்பித்தான்;

> "[illegible];
>
> [illegible]."

அவளால் முதல் வாக்கியத்தின் உண்மையை மறுக்கமுடியவில்லை. இரண்டாவது வாக்கியம் தான் அவனை திருமணம் செய்வதைக் குறிக்கிறது என்பதையும் உணர்ந்தாள். எனவே அவனைத் தொடர்ந்து செல்ல முடிவு செய்தாள்.



படகு தன்னுடைய இலக்கை நோக்கி அமைதியாகச் சென்று கொண்டிருந்தது. அதன் பாய்கள் விரிந்திருக்கச் சென்று கொண்டிருக்க, பயணிகள் அனைவரும் துணிப்பைகளில் தலையை வைத்து தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

மறுநாள், சென்ஷு, அவளுக்காக மரிக்கொழுந்து காத்திருந்த விடுதியை அடைந்தாள். அங்கு விடுதி சொந்தக்காரரிடம் மீதமிருந்த பணத்தைக் கொடுத்து, மணமகளை வீட்டில் இருந்து அழைத்துச் செல்லும் போது கொடுக்கப்படுவது போல இனிப்புகளும், இறைச்சியும் கூடக் கொடுத்தாள். மரிக்கொழுந்தும் மகிழ்ச்சியோடு அவளுடன் இணைந்து கொள்ள, அவர்கள் சென்ஷுவின் கிராமத்தை அடைந்தார்கள். அங்கே திருமதி. ஹாடின் அவர்களை வரவேற்றாள். சென்ஷு, அதுவரை நடந்த அனைத்தையும் அவளது அன்னையிடம் விளக்கி கூறி, தன்னுடைய ஆசைகளையும் கூறினாள். மரிக்கொழுந்திற்கு, சென்ஷு, சாங்ஜியை திரைமறைவில் இருந்து காட்டினாள். அதன் பின்னர், பெண்ணின் உடைகளுக்கு மாறி, மரிக்கொழுந்தின் முன் வந்து, அவள் தன்னை மணக்க போகிறாளா அல்லது சாங்ஜியை மணக்க விருப்பமா என்று கேட்டாள். மரிக்கொழுந்து புத்திசாலித்தனமாகத் தான் ஒரு பெண்ணைத் திருமணம் செய்யப் போவதில்லை என்று முடிவு செய்தாள். ஆனாலும் தெரியாத குடும்பத்தில் மணம் செய்வதற்குப் பயத்தையும் தெரிவித்தாள்.

மருமகளாக எப்படி நடந்து கொள்வது என்று திருமதி.ஹாடின் அவளுக்குக் கற்றுக் கொடுத்தாள். எப்படி அவளது தலைமுடியை ஏற்றி அலங்காரம் செய்வது, பெரியவர்களிடம் எப்படி மரியாதையாக நடந்து கொள்வது, தையல் வேலையை எப்படி நன்றாகச் செய்வது, காகிதத்தில் இருந்து இனிப்புகளை எப்படிக் கிழியாமல் எடுப்பது, பட்டுத்துணியில் தலைக்கு வைக்கப் பூக்களை எப்படிச் செய்வது, இறந்தவர்களுக்குத் துக்கம் விசாரிப்பது எப்படி, மற்றவர்களைப் பாராட்டுவது எப்படி மற்றும் இன்னமும் பல விவரங்களைக் கூறினாள்.

மேலும், வேறு உறவினர் இல்லாத அந்தப் பெண்ணின் திருமண உடை மிகவும் நன்றாக இருக்க வேண்டும் என்றும், அவள் வாழப்போகும் இடத்தில் இருப்பவர்களிடையே மரியாதையாக இருக்க வேண்டும் என்றும் அதை மிகவும் ஆடம்பரமாகத் தைக்கக் கொடுத்தனர். அதைத் தயார் செய்யும் நேரத்தில், தாய், மகள் மற்றும் அவளது வளர்ப்பு மகள் ஆகியோர் பெண்களுக்கான அறையில் பல மணிநேரங்களை இனிமையாகக் கழித்தனர். ஒரு நாள் மாலை, திருமதி. ஹாடின் அவர்களுக்குக் கதை ஒன்றை சொல்ல ஆரம்பித்தார்.



சற்றுத் தொலைவில் இருந்த செல்வந்தர் குடும்பத்தில் தன்னுடைய மகளைத் திருமணம் செய்து கொடுத்திருந்தார். தன்னுடைய தந்தையின் வீட்டில் அவள் மிகவும் செல்லமாகவும், யாரிடமும் சுடுசொல் கேட்காமலும் வளர்ந்திருந்தாள். அவள் திருமணமாகி சென்றிருந்த குடும்பமோ விதிகளையும், செய்முறைகளிலும் மிகவும் கடுமையாக இருப்பவர்கள். அவர்கள் வீட்டில் ஒவ்வொரு வேளையும் சமையல் மிகவும் விரிவாகவும், நிறையவும் செய்வார்கள். அவற்றில் மிஞ்சுவதை அவர்கள் தூக்கி எறிவதில்லை. அவை முழுவதுமாகத் தீரும் வரை மீண்டும், மீண்டும் மேசைக்குக் கொண்டு வரப்படும். ஆனால் அவர்கள் சாப்பிடும் நேரம் தவிர வேறு நேரங்களில், உணவை தின்பதும் தடை செய்யப்பட்டிருந்தது.

அவள் தன்னுடைய மாமனாரின் வீட்டிற்கு வந்த பின்னர், அவர்கள் உப்பிட்டு வேகவைத்த நண்டுகளை ஒரு நாள் சமைத்து இருந்தனர். பல முறை அவை மேசையில் எடுத்து வைக்கப்பட்டும், சில நாள் கழித்து இரண்டு அல்லது மூன்று நண்டுகள் மீதமிருந்தது. அதை இன்னமும் வைத்திருப்பது தேவையில்லை என்று நினைத்த அவள், அவற்றைத் தின்றுவிட்டு, ஓடுகளையும் தூக்கி எறிந்துவிட்டாள்.

அடுத்தச் சாப்பாட்டு வேளையில், அவளது மாமனார் நண்டுகளைக் கேட்டார். அவளும் அவற்றைத் தான் தின்றுவிட்டதைக் கூறினாள். கோபமடைந்த அவளது மாமியார், அவளை வளர்த்திருக்கும் முறையைப் பற்றிக் கடுமையாகப் பேசினாள். அவளது பெற்றோரிடம் சென்று அவளை மோசமாக வளர்த்திருப்பதாகத் தெரிவிக்கப் போவதாகத் தெரிவித்தாள்.

அவளுடைய தந்தையின் வீட்டில் இருந்து அவளுக்குத் துணையாக அனுப்பி வைத்திருந்த பணிப்பெண்ணை உடனடியாக அவளது தந்தையின் வீட்டிற்கு அனுப்பி வைத்தாள். அங்குச் சென்று அவரிடம், அவளைப் பற்றிய புகாரை அவர்கள் கேட்க வேண்டி வரும் என்றும், தன்னுடைய கணவர் வீட்டாரை கோபப்படுத்தாமல், அவர்கள் மன்னிப்பு கேட்டுக் கொள்ள வேண்டும் என்றும் சொல்லி அனுப்பினாள். அவர்களும் என்ன காரணத்திற்காகச் சண்டை வந்துள்ளது என்று கேட்டு தெரிந்து கொண்டு, யாருக்கும் தெரியாமல் உடனடியாகப் பணிப்பெண்ணையும் திரும்ப அனுப்பி விட்டனர். அவர்கள் உடனடியாகக் கூடை நிறைய நண்டுகளை வாங்கிக் கொண்டு வந்து, வீட்டின் முன்வாசலின் அருகில் இருந்த சிறிய குழியில் விட்டு வைத்தனர். அதன் அருகிலேயே ஒரு வேலையாளை நிற்க வைத்து, தங்கள் மரியாதையாக உறவினர் என்று கூறி ஒருவரை அழைத்து வரும்போது, அவன் குழிக்கு அருகில் இருக்கும் வாசற்படிகளை நிறையத் தண்ணீர் ஊற்றி கழுவிவிட வேண்டும் என்றும் கூறினார்கள்.

தந்தையும், மாமனாரும்.

அப்போது அவர்களது மகளின் மாமனார் அங்கு வந்து சேர்ந்திருந்தார். தன்னுடைய சம்பந்தியை மிகவும் அன்புடன் வரவேற்று, அவர்களது முன் வாசலின் அருகே அமரவைத்தார். அங்கு, மாமனாரைப் பேசவிடாமல் வேறு பல விஷயங்களை விடாமல் பேசிக் கொண்டிருந்தார். மாமனாரும் அவர் பேச வந்த விஷயத்தைப் பேசுவதற்குத் தக்க சமயம் பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது வாசலைக் கழுவிவிட்டுக் கொண்டிருந்தவன் ஊற்றிய நீர் குழியை நிரப்ப, சில நண்டுகள் வெளியே வர ஆரம்பித்தன. அருகே திரிந்து கொண்டிருந்த பன்றி ஒன்று இதைக் கண்டு, நண்டுகளைத் தின்ன ஆரம்பித்தது. விடாமல் பேசிக் கொண்டிருந்த தந்தை, இதைக் கவனிக்கவில்லை. மாமனாரும் அவரது கவனத்தை அங்கே திருப்பி, யாரோ கூடையைத் தட்டி விட்டிருக்கவேண்டும் என்றும், எனவேதான் பன்றி இப்போது அவற்றைத் தின்று கொண்டிருக்கிறது என்றும் கூறினார். "பரவாயில்லை, சில நண்டுகளைப் பன்றி தின்பதால் ஒன்றுமில்லை." என்றார் தந்தை. அங்கிருந்து கிளம்பிய மாமனார், வீட்டிற்குச் சென்று, அவரது மனைவியை அழைத்து "நண்டுகளைப் பற்றி இனி பேசாதே. அவர்களது வீட்டில் ஏராளமான நண்டுகள் இருப்பதால், அவற்றைப் பன்றிகள் தின்று கொண்டிருக்கின்றன. நம் வீட்டில் அதை அவள் உண்பதற்குத் தகுதியில்லை என்பதாலேயே முதலில் அவள் உண்ணாமல் இருந்திருக்கிறாள். அவளுடைய வீட்டை பார்க்கும் போது, நம் வீட்டு உணவை அவள் மதிப்பில்லை என்று நினைத்திருக்க வேண்டும்." என்றார்.

அப்போதிருந்து, அவர்கள் மருமகளை மிகவும் நல்ல முறையில் நடத்தி வந்தனர்.



சென்ஷு "பழத்தோட்டம் வாங்கும் போது, பழத்தின் சிறப்பை மட்டுமல்லாமல், தோட்டத்தின் பரப்பையும் பார்க்க வேண்டும்." என்ற பழமொழியைக் கூறினாள். அது போலவே, திருமணத்தில் எப்போதும் எவ்வளவு செல்வம் இருக்கிறது என்று மட்டுமே பார்க்கப்படுகிறது. மாறாக, எத்தகைய வாழ்வை வாழ்கிறார்கள் என்பதை முக்கியமாக பார்க்கவேண்டும் என்றாள். அவளைப் பொறுத்தவரை, மகிழ்ச்சியை தராத எந்த முயற்சியும் பயனற்றது என்றாள். அப்படியே பல பெண்கள் சிக்கனமாக இருப்பது அவர்களது கணவர்களை மகிழ்ச்சிப்படுத்தும் என்று எண்ணுகிறார்கள் என்று கூறி கதையை ஆரம்பித்தாள்.



இரண்டு பெண்கள் அருகருகே இருந்த வீடுகளில் வாழ்ந்து வந்தார்கள். அவர்களது கணவர்கள் வெளிநாடுகளில் வேலை செய்து வந்தனர். ஒருத்தி நன்றாகச் சமைத்து, சாப்பிட்டு நல்ல விதமாக வாழ்ந்து வந்தாள். மூன்று வேளையும் நன்றாக உண்டு, நாளின் பெரும்பகுதியை எதாவது சம்பாதிப்பதில் செலவிட்டு வந்தாள். அதில் வீட்டிற்குத் தேவையான சாமான்களை வாங்கிப் போடவும் செய்தாள். மற்றொருத்தி, இவளை மிகவும் அதிகமாகச் செலவழிப்பவளாகக் கருதினாள். தன்னை மிகவம் சிக்கனமானவளாக எண்ணி, பழைய உணவை உண்டு கொண்டும், மீந்த உணவை சூடு பண்ணி உண்பவளாகவும் இருந்தாள். விளக்கு திரி வாங்கும் பணத்தைச் சேமிக்க, போர்வையில் இருந்த பருத்தியை எடுத்து விளக்குத்திரி செய்து வந்தாள்.



வெளிநாட்டில் இருந்து திரும்பும் கணவன்.

அவர்களது கணவர்கள் இருவரும் வெளிநாட்டில் இருந்து திரும்பி வந்தார்கள். ஒருவன், தனது மனைவியை மிகவும் உற்சாகமாகவும், ஆரோக்கியமாகவும் இருப்பதைக் கண்டான். அவனது வீடும் மிகவும் நன்றாகச் சாமான்களுடன் இருந்தது. அவன் அனுப்பிய பணத்தோடு, அவள் சம்பாதித்த பணத்தையும் சேர்த்து அவனிடம் அவள் கொடுத்தாள். அரைவயிறும், கால் வயிறுமாகப் பழைய உணவை உண்டு வாழ்ந்த மற்றொருத்தி, வேறு வேலை செய்ய சக்தி இல்லாததால், மெலிந்தும், நோயுடனும் இருந்தாள். அவளிடம் வேறு பணமும் இல்லை. இரவில் படுக்கைக்குச் சென்ற அவன், போர்வை ஏன் குளிரில் இருந்து தன்னைக் காக்கவில்லை என்று கேட்ட போது, அவள் தான் விளக்குத்திரி செய்து சிக்கனப்படுத்தியதைக் கூறினாள்!



மரிக்கொழுந்து தான் மருமகளாக தன்னுடையாய் கடமைகளை சரியாக செய்ய எல்லாவிதத்திலும் முயற்சி செய்யப்போவதாக தெரிவித்தாள். ஆனால் அவளது உறவினரான விடுதி உரிமையாளர் அவளை சிக்கனமில்லாதவள் என்று கூறியதாகவும் கூறினாள். ஒருத்தியின் கணவரைக் காப்பாற்ற உறுதி மட்டுமில்லாது, அறிவும் தேவை என்றாள். இப்படி சொல்லிவிட்டு அவள் கதை ஒன்று நினைவிற்கு வருவதாக சொல்லி, ஆரம்பித்தாள்.



ஒலிவ் வணிகன் ஒருவனும், பஞ்சாங்கம் விற்பவன் ஒருவனும் அருகருகே இருந்த வீடுகளில் வசித்து வந்தார்கள். ஒலிவ் வியாபாரியின் மனைவி மிகவும் சிக்கனமாகவும், கவனமாகவும் இருந்தாள். எனவே, வியாபாரம் மந்தமாக இருந்த நேரங்களிலும், அவர்கள் ஓரளவு வசதியாகவே வாழ்ந்து கொண்டிருந்தார்கள்.

பஞ்சாங்கம் விற்பவன் மனைவி முட்டாளாகவும், எந்தக் கவனமும் இல்லாதவளாகவும் இருந்தாள். எனவே அவன் எப்போதும் அவளை ஒலிவ் வியாபாரியின் மனைவியுடன் ஒப்பிட்டுக் கொண்டே இருந்தான். அவளும் சிறிது நாட்களிலேயே எல்லாவற்றிர்க்கும் அவளுடன் ஒப்பிடுவதால் மிகவும் கோபமடைந்து, சில காலத்திலேயே அவளை வெறுக்கும் அளவிற்கு வந்துவிட்டாள்.

இப்படியாகச் சில காலம் கழிந்தது. அந்த வருடம் அனைவர்க்கும் மிகவும் கடுமையான வருடமாக இருந்தது. தங்களது வருடாந்திர கடன்களை, அந்தந்த வருடங்களில் தீர்க்க முடியாத சீனர்கள் கவுரவமிழந்தவர்களாகக் கருத பட்டார்கள். இந்த வருடம், ஒலிவ் வியாபாரியும் தன்னுடைய வருமானம், கடன்களை விட மிகவும் குறைவாக இருப்பதை அறிந்தான். எப்படியாவது தன்னுடைய கடன்களை அடைத்துவிட வேண்டும் என்று மிகவும் முயற்சியெடுத்து, அது முடியாமல், வருடத்தின் கடைசி நாள் அவனுடைய மனைவியிடம் தன்னுடைய நிலையைக் கூறி வருத்தப்பட்டான். ஏழ்மையையும், அவமானத்தையும் அந்த வருடம் அவர்கள் எதிர்நோக்கி இருப்பதாகத் தெரிவித்தான். உடனே, அவள் உள்ளே சென்று, ஜாடிகளில் உப்பிட்டு ஊற வைத்திருந்த ஒலிவ் பழங்களைக் கொண்டு வந்து கொடுத்தாள். அவற்றை வேகமாக விற்று, கடனை அடைக்கும்படியும் கூறினாள். ஆச்சர்யத்துடன் அவன், இவ்வளவு ஒலிவ் பழங்களை அவள் எப்படிப் பெற்றாள் என்று கேட்டான். அவளும், தினமும் அவன் வியாபாரத்திற்குச் செல்லும் போது, அவனது கூடையில் இருந்து சில பச்சை ஒலிவ்களை எடுத்து, ஜாடியில் ஊறவைப்பது தன் வழக்கம் என்றும், அதுவே இப்போது தங்களுக்குக் கைகொடுக்கப் போகிறது என்றும் கூறினாள். மதுவைப் போல, ஊற வைத்த ஒலிவ் பழங்களின் மதிப்பும் அதிகரிக்கும் என்பதாலும், புது வருடகாலங்களில் அவற்றிற்கு நல்ல விலை கிடைக்கும் என்பதாலும், அவன் அந்த வருட கடன்களை எல்லாம் அடைத்துவிட்டு, அடுத்த வருடம் வியாபாரத்தைத் தொடர தேவையான பணத்தையும் சிறிது சேர்த்துக் கொண்டான்.

பஞ்சாங்கம் விற்பவனும், அந்த வருடம் பணத்தை இழந்திருந்தான். மிகுந்த கடனில் இருந்தான். ஆனால், அவனது மனைவி எந்த விதத்திலும் அவனுக்கு உதவவில்லை. எனவே அவனது புது வருடம், மிகுந்த ஏழ்மையுடனும், சிரமத்துடனும் ஆரம்பித்தது. அவனது பக்கத்து வீட்டுக்காரனின் மனைவி எப்படி ஒலிவ் பழத்தைச் சேர்த்து அவனுக்கு உதவினாள் என்று கேள்விப்பட்டவுடன், தன்னுடைய மனைவின் முட்டாள்தனத்தையும் அவளிடமே திட்டினான். தனக்கு, பக்கத்துவீட்டுக்காரனைப் போல, மனைவி உதவியாக இல்லை என்றும் கூறினான். அவனது மனைவியும் இனி தான் திருந்தி இருப்பது என்று முடிவு செய்தாள். தன்னுடைய சிக்கனத்தைக் கொண்டு கணவனை ஆச்சர்யப்படுத்த என்றும் முடிவு செய்தாள்.எனவே, அடுத்த வருடக் கடைசியில், அவளது கணவன் கடனில் இருப்பதாகக் கூறியவுடன், அவள் வேகமாக அறைக்குள் சென்று, பல பைகளை எடுத்துக் கொண்டு வந்து, அவளது கணவனின் காலடியில் கொட்டினாள். இனி தன்னைச் சிக்கனமில்லாத மனைவி என்று சொல்லக்கூடாது என்றும் கூறினாள். அவனும் ஆச்சர்யத்துடன், பைகளைத் திறந்து பார்த்தான். அவற்றில் முடிந்து கொண்டிருக்கும் அந்த வருடத்திய பஞ்சாங்கம் இருந்தது. எங்கிருந்து அவளுக்கு அவை கிடைத்தன என்று கேட்டான். அவளது பக்கத்து வீட்டுக்காரி ஒலிவ் பழங்களைச் செய்தது போல, தானும் தினமும் அவனது பையில் இருந்து சில பஞ்சங்களை எடுத்து சேர்த்து வந்ததாகவும், வருட

கடைசியில் அவை கைகொடுக்கும் என்றும் கூறினாள்.

முடிந்த வருட பஞ்சாங்கம் விற்கவும் இல்லை. வியாபாரியின் நஷ்டமே அதிகமானது. அவனது மனைவியோ, பக்கத்து வீட்டுக்காரியைப் போல இருந்தும், தனக்குப் பழியே வந்து சேர்கிறது என்று, அதற்கு மேலும் அவளது கணவனை மகிழ்ச்சிப்படுத்துவதில்லை என்று முடிவு செய்தாள்.

ΔΔΔ

"எதிர்காலத்தை பற்றி மிகவும் கவலைப்படாதே." என்று சென்ஷு, மரிக்கொழுந்துவிடம் தெரிவித்தாள். "சாங்ஜியிடம் சில நல்ல குணங்கள் இருக்கின்றது. நீ அவனை மிகவும் அன்புடன் பார்த்துக் கொள்வதைப் பார்த்தால், அவன் இந்தக் கதையில் வரும் கணவனைப் போல உன்னிடம் மயங்கியே எப்போதும் இருப்பான்." என்றாள்.

"அந்தக் கதையை சொல்லுங்கள்." என்றாள் மரிக்கொழுந்து. சென்ஷு கதையைக் கூறினாள்.



ஏழை மனிதன் ஒருவன், தன்னுடைய வயதான தாய் மற்றும் இளம் மனைவியை விட்டுவிட்டு, செல்வம் சேர்ப்பதற்காக வெளி நாடுகளுக்குச் சென்றான். அங்கு அவனுக்கு நல்ல வேலை கிடைக்கவே, அவனது தாயும், மனைவியும் நன்றாக வாழும் படியாகப் போதுமான பணத்தை அனுப்பிக் கொண்டிருந்தான். ஆனால், பணத்தை அனுப்பவேண்டிய முகவர், அந்தப் பணத்தை எல்லாம் தானே வைத்துக் கொண்டு, அவற்றைப் பெற்றுக் கொண்டதாக அவனது மனைவி எழுதியது போல ஒரு கடிதத்தை மட்டும் அனுப்பிக் கொண்டிருந்தான். அவனும், தன்னுடைய சேமிப்பையெல்லாம் நல்ல முறையில் சேர்த்து, உழைப்பாலும், சிக்கனத்தாலும் அவற்றை மென்மேலும் வளர்த்து, சில வருடங்களிலேயே பெரிய அளவிலான செல்வத்தைத் சேர்த்துவிட்டான்.

அதே நேரத்தில், அவனது தாயும், மனைவியும் அவனிடம் இருந்து எந்தச் செய்தியும் வரவில்லை என்பதால், தங்களை அவன் கைவிட்டதாக எண்ணினார்கள். மனைவியும் தன்னால் முடிந்தளவு தையல் வேலை செய்தும், துணிகளை நெய்தும் சம்பாதித்து இருவரையும் காப்பாற்றி வந்தாள். ஆனால், விலைவாசி வெகுவாக அதிகரிக்கவும், மனைவி நோயுற்றாள். வயதான தாயும் உதவ யாருமின்றி, இறந்து போனாள். மனைவிக்கு அவளது இறுதி சடங்குகளைச் செய்யவும் பணமில்லை. எனவே அவள் ஒரு திருமணத் தரகனிடம் சென்று, தன்னைத் திருமணம் செய்ய நேர்மையான மனிதன் ஒருவன் வேண்டும் வேண்டும், அவன் முதலிலேயே தன் மாமியாரின் இறுதி சடங்கிற்குத் தேவையான பணத்தை, தனக்கான திருமணப் பணமாகக் கொடுக்கவேண்டும் என்றும் கூறினாள். மேலும் துக்கம் அனுசரிக்க வேண்டிய நூறு நாட்களுக்குப் பின்னரே திருமணம் நடக்க வேண்டும் என்றும் கூறினாள். இவை அனைத்திற்கும் ஒத்துக்கொண்ட மனிதன் கிடைக்கவே, இறுதி சடங்குகளை முடித்துவிட்டு, நூறு நாட்கள் கழித்துத் திருமணம் முடியவே, அவர்களது வீட்டை பூட்டி விட்டு, புதிய கணவனின் வீட்டிற்குச் சென்றாள். அவனுக்கு நல்ல மனைவியாக இருந்தாள். அவனும் அவளை மதித்தும், விரும்பியும் வந்தான். பல வருடங்கள் கழிந்தன. அவளது முதல் கணவன் இப்போது செல்வந்தனாக அவனது கிராமத்திற்குத் திரும்பினான். மனைவியும், தாயும் வரவேற்பார்கள் என்று எதிர்பார்த்தவனுக்கு ஏமாற்றமே மிஞ்சியது. வீடு பூட்டி, பாழடைந்து காணப்பட்டது. அருகில் இருந்தவரிடம் விசாரிக்க, அவன் யார் என்று தெரிந்தவுடன், அனைவரும் இரண்டு பெண்களைக் கைவிட்டுவிட்டதாக அவனை அனைவரும் திட்டினார்கள். அப்படியே அவனது பற்றியும், அவனது மனைவி இன்னொரு திருமணம் செய்து கொண்டதையும் தெரிவித்தார்கள். அவன் எப்போதும் அவனது மனைவியை விரும்பி இருந்தான். இப்போது அவனது தாயை ஏழ்மையிலும் அவள் பார்த்துக் கொண்டாள் என்பது அவனது அன்பை அதிகரித்தது. அவளது புதிய வீட்டிற்குச் சென்று, அவளிடம் தான் ஏமாற்றப்பட்டதைத் தெரிவித்து, அவளைத் தன்னுடன் வந்துவிடும்படி கூப்பிட்டான். அவள், தன்னுடைய இரண்டாவது கணவர் மிகவும் அன்பு செலுத்துவதாகவும், அவரை வருத்தத்தில் ஆழ்த்திவிட்டு வர விரும்பவில்லை என்று தெரிவித்தாள். உடனே, அவன் அவளது இரண்டாவது கணவனுடன் பேசி, தன்னுடைய சொத்தில் பாதியை தருவதாகத் தெரிவித்தான். இரண்டாவது கணவனும், தான் அவளைத் தேடிச் சென்று திருமணம் செய்யவில்லை என்றும், அவள் கூறியதாலேயே, சட்டப்படி திருமணம் செய்ததாகவும் கூறினான். எனவே, அவளை விட்டுக்கொடுக்க முடியாது என்று தெரிவித்து விட்டான். எனவே இருவரும் இறுதியாக நீதிபதியின் முன் சென்றனர். மனைவியும் அங்கே அழைக்கப்பட்டாள். சாட்சிகள் விசாரிக்கப்பட்டு, முழுமையான விசாரணை நடத்தப்பட்டது. இறுதியில், நீதிபதி அவளைத் தங்களுடையவள் என்று கருத இருவருக்குமே நியாயமான காரணங்கள் இருப்பதாகவும், அவர்கள் யாரும் தெரிந்தே சட்டத்தை மீறவில்லை என்பதாலும், அவர்களில் யாருடன் வாழ்வது என்ற முடிவை தான் மனைவியிடமே விட்டுவிடுவதாகத் தெரிவித்து விட்டார். மனைவியும், இருவருமே நேர்மையாகவும், அன்புடன் இருப்பதாலும், இருவர் பக்கமும் நியாயம் இருப்பதாலும், ஒருவரை தேர்ந்தெடுத்து, இன்னொருவருக்குத் தவறிழைக்க விரும்பவில்லை என்று சொல்லினாள். அவர்கள் இருவருமே நல்ல மனைவியை அடைய தகுதியானவர்கள் என்றும், அவளால் இருவருக்கும் மனைவியாக இருக்க முடியாததால், அவள் யாருக்கும் மனைவியாக இருக்க விரும்பவில்லை என்றும் கூறிவிட்டாள். எனவே, அவர்களுக்குத் தொந்தரவாக இருக்க விரும்பாமல், மரணமடையவே விரும்புவதாகவும் தெரிவித்தாள். நீதிபதி அவளது வாதத்தைப் பாராட்டி, அன்றிரவு அவள் சிறையில் இருந்து யோசிக்கவேண்டும் என்று சொல்லி,

கணவர்கள் இருவரையும் மறுநாள் வந்து, அவள் மனம் மாறிவிட்டாளா என்று பார்க்க சொல்லி விட்டார். அவர்கள் மறுநாள் வந்தவுடன், அவளைச் சிறையில் இருந்து அழைத்துவர காவலாளி ஒருவன் அனுப்பப்பட்டான். காவலாளி வேகமாக, வேர்த்து, விறுவிறுத்து வந்தான். அவள் சிறையில் இருந்த உத்தரத்தில் தூக்கு போட்டுக் கொண்டதாகத் தெரிவித்தான். இரண்டு கணவர்களும், கவலையுடன் சென்று, அவளது உடைகளைக் கொண்டு அவளைத் தெரிந்து கொண்டு, நீதிபதியிடம் திரும்பினார்கள். நீதிபதியும், அவர்களில் யாருக்கு அவள் இன்னமும் தேவையோ, அவர் மற்றவருக்குப் புதிய திருமணத்திற்கான பணத்தைக் கொடுத்துவிட்டு, அவளது உடலை எடுத்துச் செல்லலாம் என்று தெரிவித்துவிட்டார். முதல் கணவன், தான் அவளது உடலை எடுத்துக் கொள்வதாகக் கூறினான். இரண்டாமவன் எதுவும் பேசவில்லை. நீதிபதி அவனிடம் விசாரிக்கவே, தான் உயிருடன் இருந்த மனைவிக்காகவே வந்ததாகவும், இறந்தவளுக்காக என்று சொல்லி, அவளது இறுதிச்சடங்கில் கலந்து கொள்ளவும் முடியாது என்று சொல்லிவிட்டான்.

முந்தைய தினம் நீதிபதி அவளைத் தன்னுடைய வீட்டிற்கு அனுப்பி, அவரது மனைவியை அவளைப் பார்த்துக் கொள்ளச் சொல்லியிருந்தார். அவளது உடைகளை அங்கே மாற்றி,அவளது உடைகளை ஒரு பொம்மைக்கு அணிவித்து, சிறையில் தூக்கில் தொங்குவது போல ஏற்பாடு செய்திருந்தார். காவலாளி பொம்மையை உண்மை என்று நம்பி, அவர் எதிர்பார்த்தது போலவே அவளது தற்கொலையை இரண்டு கணவர்களிடமும் தெரிவித்து விட்டார். வழக்கு மன்றத்தில், மறைவிடத்தில் இருந்து நடப்பது அனைத்தையும் பார்த்துக் கொண்டிருந்த மனைவி, அவளது முதல் கணவனின் வார்த்தைகளைக் கேட்டவுடன் தான் மரணமடையக்கூடாது என்று முடிவு செய்தாள். அவளது முதல் கணவனுடன், அவர்களது பழைய வீட்டிற்குத் திரும்பினாள். அங்கே அவள் தன குழந்தைகளுடன் பல வருடங்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்து, முன்னோர்களை வழிபட்டு வந்தாள்.



நாட்கள் வேகமாக கழிந்தன. மரிக்கொழுந்திற்கும், சாங்ஜிக்கும் திருமணம் நடக்கவேண்டிய நாளும் நெருங்கியது. சென்ஷு, அவளது ஆண் மாணவ உடையில், சாங்ஜியையும், தரகனையும் அதுவரை சந்தித்து, திருமணத்திற்கு தேவையான அனைத்து ஏற்பாடுகளையும் செய்து முடித்தாள். படித்தவர்களுடைய முதல் திருமணத்திற்கான அனைத்து சடங்குகளும் முடிந்து, சாங்ஜி, அவனுடைய மணமகளை அழைத்துச் சென்றான். திருமண விருந்தில் மரிக்கொழுந்தை பார்த்த அனைவரும் தாங்கள் அதுபோன்ற அழகிய மணமகளைப் பார்க்கவில்லை என்று தெரிவித்தனர்.

ஜின்ஷி நகரில் இருந்து திரும்பும் வரை, சென்ஷு அவளது ஆணுடையை மாற்றவில்லை. அவன் முறைப்படி பெண் கேட்டவுடன், அவளும் திருமண உடைகளை அணிந்தாள்.

இப்போது அவள், தனது கணவருடன் அவரது அலுவலக பயணங்களில் துணையாக செல்கிறாள். அவளது குழந்தைகள் இளம்வயதிலேயே தங்களது தேர்வுகளில் தேர்ச்சி அடையுமளவு அறிவுடன் இருக்கிறார்கள்.

முற்றும்.